மே தின மலர்

# ஜனசக்தி

(சோஷியலிஸ்ட் வாரப் பத்திரிகை)

மாலை 1 | சென்னை, சனிக்கிழமை, 30—4—38 | மலர் 4



ஆசிரியர்:
ப. ஜீவானந்தன்

வருடச் சந்தா
ரூ. 3.

தனிப்பிரதி
அணா 2.




காரல் மார்க்ஸ்

## கம்யூனிஸ்ட் அறிக்கை

விருத்தம்

"புலைமை செறி ஆதிக்க வருப்பாரெல்லாம்
பொது உடைமைப் புரட்சியினுல் நடுங்கி வீழ்வார்
அலக்கழியத் தொழிலாளரைப் பிணைக்கும்
அடிமை யெனும் சங்கிலிகள் அறுந்து போகும்.
பலவிதமாய் நலந்தருமோர் புதிய லோகம்
பாட்டாளி மக்களவர் பங்காய்ச் சேரும்
உலகத்தில் எத்தேசத்தும் வாழ்கின்ற
உழைப்பாளித் தோழர்களே ஒன்று சேர்வீர்!"

சோஷியலிஸ்ட் காங்கிரஸ் செய்திகள்

## காங்கிரஸைப் பலப்படுத்துக

—(o)—

தமிழ்நாடு காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சிப் பொதுக் காரியதரிசி ப. ஜீவானந்தம் பின்வருமாறு எழுதுகிறார் :—

அகில இந்தியக் காங்கிரஸ் சோஷியலிஸ்டு கக்ஷியின் வருஷாந்திர மகாநாடு முடிவடைந்துவிட்டது. மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்களை நடைமுறையில், அமுலுக்குக் கொண்டுவர வேண்டியது கக்ஷி அங்கத்தினர்களின் கடமையாகும். காங்கிரஸ் மகாசபையின் பொதுஜன அஸ்திவாரத்தை இன்னும் விரிவாக்குவதே கக்ஷித் தோழர்களின் முதன்மையான வேலையாகும். காங்கிரஸ் மகாசபை, இன்று, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நிற்கும் சுதந்திர அரசியல் ஸ்தாபனமாக வளர்ந்துவிட்டது. தேச மக்களின் கண்களில்—குறிப்பாக கிராம மக்களின் கண்களில்—அது ஏகாதிபத்தியக் கொடுமையை எதிர்த்துப் போராடும் கருவியாகவே தோன்றுகிறது.

காங்கிரஸ் மந்திரிப் பதவிகளை ஏற்றுக்கொண்ட பிறகு புதிய சந்தர்ப்பங்கள் வாய்த்திருக்கின்றன. காங்கிரஸ் மகாசபை தேசத்திலுள்ள ஏகாதிபத்திய—எதிர்ப்பு ஸ்தாபனங்களுக்குள் தலை சிறந்த ஸ்தாபனமாயிருப்பதாலும், காங்கிரஸ் மந்திரிகள், காங்கிரஸினுடைய தேசிய விடுதலைத் திட்டத்தை நிறைவேற்ற வாக்குறுதி கொடுத்திருப்பதாலும், போராட்டத்தைத் துவக்குவதற்கு மக்களிடை தானாகவே தோன்றும் ஆர்வத்தை வளர்ப்பதும், இயக்கத்தின் தீவிரத் தன்மையை வளர்ப்பதும், சாத்தியமாகிறது. இன்று ஏற்பட்டிருக்கும் ஜனநாயக பிரஜா சுதந்திர உரிமைகளைப் பரிபூரணமாக உபயோகப்படுத்திக் கொண்டு, சட்டசபைகளுக்கு வெளியே நடக்கும் மக்களின் போராட்டத்தை வலுவுறச் செய்வதும் சாத்தியமாயிருக்கிறது.

காங்கிரஸ் மந்திரி சபைகள் தேசீய ஐக்கிய முன்னணியின் ஒரு பகுதி. ஆகவே அவைகளைப் பலப்படுத்தி, ஜனநாயக எதிர்ப்புக் கோஷ்டியான, அதிகார வர்க்கத்தின் எதிர்ப்பையும், தேசீய-விரோதிகளான, சவுகரியக்காரர்களின் எதிர்ப்பையும், உடைத்துத் தகர்த்தெறியக்கூடிய சக்தியை அவைகளுக்கு அளிப்பதும் நமது கடமையாகும். இந்திய மக்களெல்லோரும், காங்கிரஸ் மகாசபையின் கீழ், ஸ்தாபன ரீதியாகக் கட்டுப்பாட்டுடனும், ஒற்றுமையுடனும் நின்று, மந்திரிகளுக்குப் பக்கபலமாக இருந்தாலன்றி அவர்களால் தேர்தல் விஞ்ஞாபனத் திட்டத்தை நிறைவேற்ற முடியாது.

வருகிற வருஷத்தில், நம்மீது வேண்டாத சமஷ்டி புகுத்தப்படும்போல் தோன்றுகிறது. ஸர்வதேசத் துறையிலோ, கார்மேகங்கள் ஐரோப்பாவையும், உலகையும், சுற்றித் தொங்குகின்றன. இதுவரையில் கண்டிராத பயங்கரத்துடன் உலக யுத்தம் எந்த சமயத்திலும் தோன்றலாம். இந்திய மக்கள் அனைவரும் காங்கிரஸ் மகாசபையின் கீழ் அணிவகுத்து நின்றாலன்றி, சமஷ்டியையோ, யுத்தத்தையோ எதிர்க்க முடியாது.

ஆகவே, தேசீய சுதந்திர இயக்கத்தின் முன்னணியில் நிற்கும் காங்கிரஸ் கமிட்டியின் முதற் கடமை காங்கிரஸின் அஸ்திவாரத்தை விரிவுபடுத்தி ஒவ்வொரு கிராமத்திலும் ஜீவநாடியுள்ள காங்கிரஸ் சபைகளையும், கமிட்டிகளையும் அமைப்பதேயாகும்.

கக்ஷித் தோழர்கள் உடனே காங்கிரஸில் அங்கத்தினர்களைச் சேர்க்கும் தீவிர இயக்கத்தை ஆரம்பித்து, தமிழ் நாட்டில் பத்து லக்ஷம் அங்கத்தினர்களைச் சேர்ப்பதற்காக தளராத, சலியாத முயற்சிகள் செய்யவேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன். அப்படிச் செய்தால்தான், தேசீய ஐக்கிய முன்னணியின் பரிபூரண சக்தியையும் ஏகாதிபத்தியத்தின் மீது வீசி எறிந்து தாக்கி, சமஷ்டியைத் தடுப்பது சாத்தியமாகும்.

—:o:—

### கேரள மாகாணம்

இம்மாதம் 23, 24 தேதிகளில் கேரள மாகாண காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சி மகாநாடு தோழர் A. K. கோபாலன் தலைமையில் கள்ளிக்கோட்டையில் கூடியது. தோழர். P. கிருஷ்ண பிள்ளை (காரியதரிசி) வருஷாந்திர அறிக்கையை வாசித்த பின் பல அரிய தீர்மானங்கள் நிறைவேறின. தோழர். ஜெயப் பிர நாராயண் அகில இந்தியக் கட்சியின் சமீப காலக் கொள்கைகளைப்பற்றி விரிவாக எடுத்துரைத்தார்.

பொதுக் காரியதரிசியாக தோழர் P. கிருஷ்ணபிள்ளையும் கூட்டுக்காரியதரிசிகளாக தோழர்கள், கேரளீயன் N.C. சேகர், குன்னி நாயர், K. K. வாரியார் முதலியோர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## கேரள மாகாண அரசியல் மகாநாடு

—(o)—

### தோழர் ஜெயப்பிரகாஷ் நாராயணரின் பிரசங்கம்

கேரள மாகாண அரசியல் மகாநாடு தோழர். ஜெயப்பிரகாஷ் நாராயண் தலைமையில் இம்மாதம் 23ந் தேதி கள்ளிக்கோட்டையில் கூடியது.



ஜெயப்பிரகாஷ் நாராயண்

தோழர். ஜெயப்பிரகாஷ் நாராயண் பேசியதாவது:—

“இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபை பொதுஜனங்களை ஓர் பொதுப் போராட்டத்திற்கு ஒருமித்து நின்று போராட ஐக்கியப்படுத்தி இருக்கிறது.........சோஷியலிஸ்ட்கள் மந்திரி சபை ஏற்கக் கூடாது என்று சொல்லியது அவர்களுக்குத் தெரியும். ஆனால் மந்திரி சபை ஏற்றுக்கொள்ள தீர்மானித்து, ஏற்றுக்கொண்ட பிறகு, காங்கிரஸ் தேர்தல் அறிக்கையை நிறைவேற்றுவதில் மந்திரி சபையோடு சோஷியலிஸ்ட்கள் ஒத்துழைக்க கடமைப்பட்டவர்கள். அதைத்தான் இன்று சோஷியலிஸ்ட்கள் செய்து கொண்டு வருகிறார்கள்........காங்கிரஸ் மந்திரி சபை அமைத்த பிறகு, ஸ்தல ஸ்தாபன தேர்தலில் அதிக கவனம் செலுத்தப்படுவதற்காக வருந்துகிறேன். காரணம் காங்கிரசின் சீரியக் கொள்கைக்கு அவைகள் பங்கம் விளைவிக்கும் என்ற நம்மைந்தான். இதுவரைக் காங்கிரஸை எதிர்த்தவர் இந்த ஸ்தல ஸ்தாபன தேர்தலில் வெற்றி பெறுவதற்காக காங்கிரஸில் சேருகிறார்கள். அவர்கள் தாங்கள் வெற்றி பெற காங்கிரஸின் பெயரை உபயோகித்துக் கொள்ளுகிறார்கள். காங்கிரஸ் எல்லோருக்கும் இடங் கொடுக்கிறது உண்மைதான். ஆனால் காங்கிரஸ் கமிட்டிகள் எல்லாம் பழுத்த காங்கிரஸ்வாதிகளிடம்தான் இருக்கவேண்டும் அவர்கள் சோஷியலிஸ்டாகவோ, மிதவாதியாகவோ இருக்கலாம். வேறு எந்த ஜனநாயக நாட்டிலும்இங்கிருப்பதை போல் இவ்வளவு அதிகாரம்ஜில்லா அதிகாரிகளுக்குக்கிடையாது.........

பல திரப்பட்ட சக்திகள் காங்கிரஸினுள் இருப்பதால், தொழிலாளர் விவசாயி, கஷ்டங்களை கவனிக்க முடியாமற் போகிறது. ஆகையால் அவரவர்கள் தங்கள் தினசரிப் போராட்டத்திற்காக தனிச் சங்கங்களை அமைத்துக்கொள்ள வேண்டியது அவசியம்”

தோழர் ஜெயப்பிரகாஷ நாராயண் பேச்சு தோழர் நாராயனன் நாயாரால் மலையாளத்தில் மொழி பெயர்க்கப்பட்டது.

பிறகு பல தீர்மானங்களுக்கிடையே காங்கிரஸ் அங்கத்தினர் சந்தா இரண்டணாவாகக் குறைக்க வேண்டும் என்ற தீர்மானமும் நிறைவேறியது.

—:o:—

### த. கா. சோ. கட்சி நிர்வாகக் கமிட்டிக் கூட்டம்

—:o:—

தமிழ் மாகாண காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியின் நிர்வாகக் கமிட்டி கூட்டம் கோயம்பத்தூரில் மே மாதம் 8-ந்தேதி நடைபெறும்.

# இந்திய சுதந்திரப் போராட்டம்


ஸ்டாலின்

ஜோஸப் ஸ்டாலின் ஐக்கிய சோஷியலிஸ்ட் சோவியத் குடியரசிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக் காரியதரிசி ஆவார். இன்றைய உலகத்தில் மார்க்ஸிசத்தின் தெளிந்த ஞானியும் அத்தாட்சியும் இவரே. புதிய ரஷ்யாவில் சோஷியலிஸ்டு சமூகத்தை வெகு திறமையுடன் நிர்மாணித்துவரும் சிற்பியும் இவரே. இவர் 1926-ல் இந்தியாவைப் பற்றிக் கூறிய கருத்துக்கள் இன்றும் அப்படியே பொருந்தி நிற்பதை இக்கட்டுரையில் காண்க.

—ப-ர்.

## தேசீயப் பிரச்சினை

தேசியப் பிரச்சினையைத் தீர்க்க வேண்டுமாயின் லெனின் கொள்கையைக் கடைப்பிடித்து, கீழ்க்கண்ட விஷயங்களை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டியது அத்தியாவசியமானது:—

1. உலகம் இன்று இரண்டு பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. தங்களுடைய முதலைக் கொண்டும், அதன் சக்தியைக் கொண்டும், உலகத்திலுள்ள பெருவாரியான, மக்களைச் சுரண்டும் 'நாகரீக' தேசங்களின் சிறு கும்பல் ஒரு புறமும் இவ்வாறு சுரண்டப்பட்டு, அடிமையாய்க் கிடக்கும் நாடுகளின் ஒரு பெரும் கூட்டம் மற்றொரு புறமும் இன்று உலகத்தில் இருக்கின்றன.

2. இவ்வாறு முதலாளித்துவத்தினால் சுரண்டப்படும் நாடுகள் உலகில் இருப்பதனாலேயே இந்த ஏகாதிபத்திய நாடுகள் தங்களைப்பாதுகாத்துக் கொள்வது சாத்தியமாகிறது.

3. இச் சுரண்டலிலிருந்தும் அடிமைத்தனத்திலிருந்தும் விடுதலைபெறுவதற்கு புரட்சி ஒன்றுதான் மார்க்கம்.

4. உலகத்திலுள்ள எல்லா அடிமை நாடுகளும், இன்று சுதந்திரக் கொடியைத் தூக்கியிருக்கின்றன. உலகம் பூராவும் பரவியிருக்கும் இந்த சுதந்திரப் போராட்டத்தினால், உலகத்தின் முதலாளித்தவத்திற்கே பெரிய ஆபத்தும், நெருக்கடியும் ஏற்படும் என்பது நிச்சயம்.

5. இந்த சந்தர்ப்பத்தில், முற்போக்கு நாடுகளின் தொழிலாளர் இயக்கத்தையும், அடிமை நாடுகளின் சுதந்திரம் போராட்டத்தையும் இணைத்து, ஏகாதிபத்திய — எதிர்ப்பு — முன்னணியைத் திரட்டுவது மிகமிக அவசியம்.

6. சுரண்டும் கும்பலைச் சேர்ந்த நாடுகளின் தொழிலாளர் வர்க்கம், அடிமை நாட்டு சுதந்திர இயக்கத்திற்கு பகிரங்கமான ஆதரவும், உதவியும் அளிக்க வேண்டும். ஏனெனில் பிறநாடுகளைச் சுரண்டும் எந்த தேசமும் சுதந்திர நாடாக விளங்க முடியாது.

## ஏகாதிபத்தியத்தால் முடியுமா ?

இந்த தேசியப்பிரச்சினையை தீர்ப்பதற்கு இரண்டுவிஷயங்கள் மிகவும் இன்றியமையாதது என்பது நன்கு விளங்கும். முதலாவதாக ஏகாதிபத்தியச் சுரண்டலை ஒழித்து, சுதந்திர சர்க்கார்களை எல்லா தேசங்களிலும் ஸ்தாபிக்க வேண்டும். இரண்டாவதாக, உலகம் பூராவும் ஒரே விதமான பொருளாதார அமைப்பை ஸ்தாபித்து, உலக மக்களுக்குள் ஒற்றுமையும், ஒத்துழைப்பும் ஏற்படுத்த வேண்டும். ஆனால், ஏகாதிபத்திய முறையின்கீழ், இப்படிப்பட்ட ஒற்றுமையும், ஒத்துழைப்பும் ஏற்படுவது முடியாத காரியம். ஆகவே, குடியேற்ற நாடுகளைத் தன் ஆதீனத்தின்கீழ் வைத்துக்கொண்டிருக்க ஏகாதிபத்தியங்கள் எப்பொழுதும் விடாமுயற்சி செய்து கொண்டிருக்கின்றன. யுத்தங்களும், பிறநாடுகளின் மீது படையெடுத்து அவைகளின் சுதந்திரத்தைப் பறிமுதல் செய்வதும், ஏகாதிபத்தியத்தினுடைய இந்தமுயற்சியின் ஒருபகுதி. ஏகாதிபத்தியங்களின் இந்த ஆக்கிரமிப்பு ஆரம்பித்தவுடன், குடியேற்ற நாட்டு மக்கள் முதலாளித்துவத்தின் ஆதிக்கத்தின்கீழ் வந்து விடுகின்றனர். ஆனால், குடியேற்ற நாடுகளில், சுதந்திரப் போராட்டம் ஆரம்பமானவுடன், அங்குள்ள சவுகரியக்கார வர்க்கங்களுக்குள்ளே பிளவு ஏற்பட்டு விடுகிறது. மத்திய வகுப்பின் கீழ்படியில் இருக்கும் மக்கள் தொழிலாளிகளின் புரட்சிகரமான போராட்டத்தில் பூரணமாக பங்கெடுத்துக் கொள்ளுகின்றனர். பணக்காரர்களின் கூட்டம், புரட்சியைக் கண்டு பயந்து, ஏகாதிபத்தியத்துடன் போய் கலந்து விடுகிறது. இம்மாதிரி, குடியேற்ற நாடுகளில், ஏகாதிபத்திய—சாதகக் கக்ஷி, ஏகாதிபத்திய—எதிர்ப்புக் கக்ஷி என்று நன்கு வரையறுக்கப்பட்ட இரண்டு கக்ஷிகள் தோன்றி விடுகின்றன.

## சோஷியலிஸ்டு கக்ஷி வேண்டும்

இந்தச் சந்தர்ப்பத்தில், இரண்டு விஷயங்களை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

(1) அடிமை நாடுகள், அடிமைத்தளைகளை அறுத்து, சுதந்திர நாடுகளாகத்திகழ்வதற்கு வெற்றிகரமான புரட்சியைத்தவிர வேறு மார்க்கம் கிடையாது. ஏகாதிபத்தியத்தியத்தினிடம் பிச்சை கேட்பதினால், லக்ஷ்யத்தை அடைய முடியும் என்று கனவிலும் கருத முடியாது.

(2) சுதந்திரப் புரட்சியை வெற்றிகரமாக நடத்த வேண்டுமானால், புரட்சி மனப்பான்மையுள்ள, மத்திய வர்க்கத்திற்கும், ஏகாதிபத்தியத்துடன் பேரம் பேசி, ஒப்பந்தம் செய்து கொள்ளும் வர்க்கங்களுக்குமுள்ள தொடர்பை அறுத்து, சுதந்திரப் போராட்டத்தை. தொழிலாளி வர்க்கத்தின் தலைமையின் கீழ் கொண்டு வந்து, விழிப்படைந்த தொழிலாளிகளின் கம்யூனிஸ்டு—புரட்சிகரமான சோஷியலிஸ்டு—கக்ஷியை ஸ்தாபிக்க வேண்டும்.

சுதந்திர போராட்டமும், தொழிலாளர்களின் வர்க்கப் போராட்டமும் ஐக்யப்படாவிட்டால், புரட்சியில் வெற்றி கிடைப்பது துர்லபம். இவ் விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, குடியேற்ற நாடுகளில் நடக்கும் சுதந்திரப் போராட்டத்தை நடத்திச் செல்ல வேண்டும்.

## அடிமை நாடுகளுக்குள் வித்தியாசம்

இந்த மகத்தான காரியத்தை ஆரம்பிக்கும்போது, எல்லா அடிமை நாடுகளையும் ஒரே தராசில் வைத்து நிறுத்தமுடியாது. அடிமைத் தளைகளால் கட்டுண்டு கிடக்கும் குடியேற்ற நாடுகளை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். (1) முதலாளித்துவம் பாதிக்காத தேசங்கள். அதாவது, பெரும் இயந்திர ஆலைகள் தோன்றாத—தொழிலாளி வர்க்கம் தோன்றாத—தேசங்கள்.

(2) முதலாளித்துவம் இன்னும் ஆரம்ப தசையிலேயே இருக்கும் தேசங்கள். (3) இந்தியாவைப் போன்று, முதலாளித்துவம் போதிய அளவிற்கு வளர்ந்து ஓங்கியுள்ள தேசங்கள். இந்த மூன்று விதப்பட்ட நாடுகளிலும் நடக்கும் சுதந்திரப் போராட்டங்களில் அநுஷ்டிக்கப்பட வேண்டிய முறை, அவைகளின் நிலைமையைப் பொறுத்ததாக இருக்கும்.

### இந்தியாவின் நிலைமை

இந்த முறையில் ஆலோசித்தால், முதலாளித்துவ வளர்ச்சியும், அதன் விளைவாக ஏற்படும் தொழிலாளி வர்க்கத்தின் வளர்ச்சியும், போதிய அளவிற்கு ஏற்பட்டுள்ள தேசம் இந்தியா என்பது நன்கு புலப்படும். ஆகவே, இங்குள்ள, சவுகரியக்கார கோஷ்டிக்குள்ளே, புரட்சிக் கக்ஷி, என்ற புரட்சி—எதிர்ப்புக்கக்ஷி, இரண்டு கட்சிகள் ஏற்பட்டுவிட்டன. புரட்சி-எதிர்ப்புக்கூட்டம், இந்தியாவிற்கு விரோதமாக—இந்திய மக்களுக்கு விரோதமாக—ஏகாதிபத்தியத்துடன் ஐக்கியப்பட்டு விட்டது. இப்படிப்பட்ட பிற்போக்குக் கோஷ்டியை வேருடன் பிடுங்கி எறிந்தாலன்றி, புரட்சி வெற்றியடையாது.

### அம்பலத்திற்கு இழு

ஆகவே, இந்தக்கோஷ்டிகளின் சாணக்கியத்தையும், முறைகளையும், அவைகளின் விளைவாக தேசத்திற்கே ஏற்படும் பெருநாசத்தையும், வெட்ட வெளிச்சமாக அம்பலத்திற்கு இழுத்து, மக்களின் மீது, அவர்களுக்கு இருக்கும் செல்வாக்கைத் தகர்த்தெறிந்து, பாட்டாளி மக்களின் தலைமையை ஸ்தாபிக்கக்கூடிய நிலைமை ஏற்படுத்துவதும் மிகவும் அவசியமானது. இந்த முறையில்தான், ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நிற்கும், மத்திய வர்க்கமும் தொழிலாளி வர்க்கமும், விவசாயிகளும் சேர்ந்துள்ள, ஒரே திட்டத்தை ஆதாரமாகக் கொண்டுள்ள, கக்ஷி ஏற்படுவது சாத்தியமாகும்.

### சுதந்திர இயக்கத் திட்டம்

முதலாளித்துவம் போதிய அளவிற்கு வளர்ந்துள்ள இந்தியாவைப் போன்றுள்ள நாடுகளின் சுதந்திர இயக்கம், அடியிற்கண்ட திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு, தற்போது நடக்க வேண்டும்.

1. சோஷியலிஸ்டுக் கக்ஷியின் ஸ்தாபனம்.

2. தொழிலாளி, விவசாயி, மத்திய வர்க்கங்களின் புரட்சிகரமான ஒற்றுமை.

3. தொழிலாளி வர்க்கத்தின் தலைமை.

4. பிற்போக்குக் கக்ஷிகளிலுள்ள மத்திய வர்க்கத்தினரை வெளியில் கொண்டு வருவது.

5. முற்போக்கு நாடுகளின் தொழிலாளர் இயக்கத்திற்கும், குடியேற்ற நாடுகளின் சுதந்திர இயக்கத்திற்கும் கூட்டுறவை ஏற்படுத்துவது.

### மிகைப் படுத்தாதே! அதைரியப்படாதே!!

இப்பொழுதுள்ள நிலைமையில், இந்த முறைதான் சிரேஷ்டமானது. ஆனால், நடைமுறையில், இந்த திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரும் காலையில், புரட்சி சக்திகளின் பலத்தை மிகைப்படுத்தி, மனக்கோட்டை கட்டவும் கூடாது; ஏகாதிபத்திய சக்திகளிடம் அபரிமிதமான பலம் இருக்கிறது என நினைத்து பீதி அடையவும் கூடாது. ருஷ்ய மக்கள், தங்கள் போராட்டத்தை இந்த முறையில்தான் நடத்தினார்கள். ரஷ்யப்புரட்சி அமோகமான வெற்றியையும் அடைந்தது.

### ரஷ்யப் புரட்சியின் படிப்பினை

ரஷ்யப்புரட்சி, உலக மக்களிடையே நிலவி வந்த அநேக கற்பனை உலகங்களை நாசம் செய்து அவைகளெல்லாம் பொய்யென்று நிரூபித்து விட்டது. உலகில், சிறியது, பெரியது, வெள்ளை, கருப்பு என்ற வித்தியாசங்கள் தொன்று தொட்டு ஏற்பட்டவை; கருப்பு மனிதர்களின் தேசங்களுக்கு சுதந்தர நிலையும் நாகரீக வாழ்க்கையும் எப்பொழுதுமே இருந்தது இல்லை; எப்பொழுதும் ஏற்படாது என உலக மக்கள் நினைத்துக்கொண்டிருந்தனர். மக்களின் மனதிலிருந்து, இந்த எண்ணத்தை ரஷ்யப் புரட்சி வேருடன் அகற்றி விட்டது. இயற்கையாகவே ஏற்பட்ட—என்றைக்கும் மாற்ற முடியாத-இப்படிப்பட்ட வித்தியாசம் ஒன்றும் உலகில் கிடையாது; கருப்பு ஜாதியார்களும் உலகில் நாகரீகமாக வாழமுடியும் என்பதை நிரூபித்து விட்டது சோவியத் ருஷ்யாவின் முன்னேற்றம்.

### ஏகாதிபத்தியத்தின் சாவுமணி

ரஷ்யப் புரட்சியின் இந்த அபூர்வ சாதனை, அடிமை நாடுகளின் சுதந்திரப் போராட்டத்திற்கு புத்துயிர் அளித்திருக்கிறது; எப்பொழுதும் அளித்துக் கொண்டேயிருக்கும். சீனாவிலும், இந்தியாவிலும் நடக்கும் புரட்சி இயக்கங்களும், சோவியத் ரஷ்யாவிடம் அவைகளுக்கிருக்கும் நன்மதிப்பும், நல்லெண்ணமுமே, இதற்குப் போதிய சான்றாகும்.

குடியேற்ற நாடுகளைச் சுரண்டும் தத்துவத்திற்குச் சாவுமணி அடித்தாய் விட்டது. சுதந்திரத்திற்காகவும், நாகரீக வாழ்க்கைக்காகவும், தொழிலாளி வர்க்கத்தின் தலைமையின் கீழ் நடக்கும் என்றுமில்லாத புதிய புரட்சியுகம் ஆரம்பித்து விட்டது.

—;o;—

# மே தினம்

—(ஏ. எஸ். கே. அய்யங்கார்)—

### ஆரம்ப வரலாறு

மே தினம் மேமாதம் முதல் தேதியில் கொண்டாடப்படுகிறது. தொழிலாளர் இயக்கத்தையொட்டியே இக்கொண்டாட்டம் ஆரம்பிக்கப்பட்டது. அந்த தினத்தில் தொழிற்சாலைகளிலிருந்து கோடிக்கணக்கான தொழிலாளர்கள் வெளிவந்து, ஒன்று கூடி, உலகத் தொழிலாளிகளினுடைய ஒற்றுமையை நிலைநாட்டினர்.

1884-வது வருஷமும் 1885 வது வருஷமும் இரண்டு தொழிலாள இயக்க மகாநாடுகள் சிகாகோ நகரத்திலும், வாஷிங்டன் நகரத்திலும் முறையே நடைபெற்றன. மேற்கண்ட மகாநாடுகளில் 1886ம் வருஷத்திலிருந்து வேலை நாள் 8 மணி நேரம் கொண்டிருக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

பிரஞ்சு சோஷியலிஸ்டு பார்ட்டி, கெய்டிஸ்ட்ஸ், ("Guesdists"), ப்ளேன்கிஸ்ட்ஸ் ("Blanquists"), தேசிய பெடரேஷன் ஆகிய இந்த சங்கங்களெல்லாம் சேர்ந்து சாலி பெட்ரெலி என்னுமிடத்தில் ஒரு பெரிய கூட்டம் போட்டனர். அந்த சமயம் காம்ரேட் ரேமாண் லவிக்னி(Raymond Lavigne) பின்கண்ட தீர்மானத்தைக் கொண்டு வந்தார்:—

"ஓர் குறித்த நாளில் ஒன்றுபட்டு ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு பட்டணத்திலும் தொழிலாளிகள் ஒன்றுகூடி கவர்ன்மெண்டாரை 8 மணி நேர வேலைக்காக வற்புறுத்த வேண்டும். தவிர, பாரிஸ் சர்வதேச காங்கிரஸில் கொண்டுவரப்படும் மற்ற தீர்மானங்களையும் நிறைவேற்றி சர்வதேச தொழிலாள இயக்கம் ஆரம்பிக்கவேண்டும்" என்பதாகும்.

அந்தச் சர்வதேச காங்கிரஸில் ஜெர்மனி, ஸ்பெயின், ஹாலண்ட், பெல்ஜியம், இத்தாலி, ரஷியா முதலான தேசங்களிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தனர். இந்தக் காங்கிரஸானது 1864-ம் வருஷம் காரல் மார்க்ஸினால் ஸ்தாபிக்கப்பட்ட தொழிலாளர் சங்கத்தின் (International Working Men's Association) தொடர்ச்சியாகும்.

மே தினத் தீர்மானத்தைக் கொண்டுவந்து நிறைவேற்றிய காம்ரேட் லவிக்னி என்பவர் ட்ரேட் யூனியன் பெடரேஷனின் காரியதரிசி ஆவார்.

ப்ரஸ்ஸல்ஸில் (Brussels) 1891-ம் வருஷம் ஆகஸ்டுமாதம் நடந்த சர்வதேச காங்கிரஸில் மே தினக் கொண்டாட்டத்தை வருஷா வருஷம் கொண்டாடி வர வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

இத்தீர்மானத்தின்படி இம் மேதினம் வெகு விமரிசையாகக் கொண்டாடப் பட்டது.

பிரான்ஸ், ஜெர்மனி, அமெரிக்கா முதலிய நாடுகளில் அந்த மேதினம் மிக மிகத்தீவிரமான முறையில் கொண்டாடப்பட்டது. ஆனால் இங்கிலாந்தில் மட்டும் மிகவும் சாந்தமாகக் கொண்டாடப்பட்டது.

மேதினத்தின் கருத்து, முக்யமாய் அது உலகத் தொழிலாளிகளின் ஒற்றுமையை எடுத்துக் காட்டுகிறது. செல்வம் அனைத்தையும் சிருஷ்டிக்கிறவர்களாகிய ஒவ்வொரு நாட்டிலுள்ள தொழிலாளியும், இந்த உலகத்தில் சுபீக்ஷத்தை நிலைநாட்டி, எல்லோருக்கும் வேலை, எல்லோருக்கும் வயிறார உணவு கொடுக்கவல்லதான ஓர் (ஏழை-பணக்காரன் என்ற) வர்க்கபேதம் அற்ற ஓர் சமூகத்தை ஏற்படுத்துவதற்காக தீவிர வர்க்க உணர்ச்சியோடு தொழிலாளிகள் முனைந்து கச்சைகட்டி நிற்கின்றனர் என்பதை மேதினம் வலியுறுத்திக் காட்டுகிறது. மேதினத்தன்று பல வகைப்பட்ட ஏகாதிபத்யங்களும் அவைகளால் ஏற்படும் யுத்தங்களும் பலமாக கண்டிக்கப்படுகின்றன. ஓர் நாட்டிலுள்ள தொழிலாளிகளின் எதிரிகள் எங்கேயோ வெளிநாட்டில் இல்லை, அவர்கள் தங்கள் மத்தியிலேயே இருக்கிறார்கள்; அவர்கள்தான் ஏகாதிபத்ய வெறியர்களும் பணமுட்டை பூர்ஷவாக்களுமாவார்கள். மேதினத்தன்று வர்க்கப் போராட்ட விஷயமாக சிலவற்றை வலியுறுத்த வேண்டியது மிகவும் அவசியம். சில தேசங்களில் மேதினம் எதற்காகக் கொண்டாடப்படுகிறதோ அதன் தாத்பரியமே இல்லாமல் செய்து விடுகிறார்கள். அதாவது வர்க்கப் போராட்டத்தைப்பற்றி வற்புறுத்தாமல் விட்டு விடப்படுகிறது.

அமெரிக்காவிலும் கனடாவிலும் தொழிலாளர் தினமாகிய மேதினத்தை மேமாதம் கொண்டாடுவதில்லை. அங்கே அதை செப்டம்பர் மாதம் முதல் திங்கட்கிழமையன்று கொண்டாடுகிறார்கள். அந்தத்தினத்தில் முதலாளிகளே தொழிலாளிகளுக்கு லீவ் கொடுத்து விடுகிறார்கள்.

ரஷியாவில் மேதினம் ஓர் சந்தோஷ நாளாகக் கொண்டாடப்

# மே தினம்

(ம. சிங்காரவேலு)

படுகிறது. ஏனென்றால் அந்த தேசத் தொழிலாளர்கள் தங்கள் விரோதிகளான முதலாளித்துவத்தை வீழ்த்தி, சோஷியலிஸ்டு சமூகத்தை நிறுவி உலகத்திலுள்ள இதரத் தொழிலாளருக்கு ஓர் வழிகாட்டிகளாக இருந்து வருகின்றனர்.

இங்கிலாந்து தேசத்திலுள்ள சோஷியலிஸ்டுகள் மே மாதம் முதல் தேதி விடுமுறை நாளாக மட்டுமே கருதுகின்றனர். ஆனால் ஐரோப்பாவிலுள்ள மற்ற தேசங்களில் அந்தத்தினத்தன்று அந்தந்த அரசாங்கத்தினர் தொழிலாளிகளைச சுட்டு, இரத்த ஆற்றைப் பெருக்கெடுத்து ஓடச் செய்து தொழிலாளிகளையும் மந்தை மந்தையாக ஜெயிலில் கொண்டுபோய் அடைத்து அட்டூழியம் செய்கின்றனர்.

"1912ம் வருஷம் எப்ரல் 17ந் தேதி லேனா என்னுமிடத்தில் தங்கச் சுரங்கத் தொழிலாளிகள் தங்கள் முன்னேற்றத்திற்காக ஒன்றுபட்டு வேலை செய்தனர். அவர்கள் இரத்த வெள்ளத்தில் அமிழ்த்தப் பட்டனர். இந்த அட்டூழியத்தைக் கண்டு ரஷியாவிலுள்ள எல்லாத் தொழிலாளர்களும் இரத்தக்கொதிப் படைந்து பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டம் செய்து முதலாளிகளைக் கண்டித்தனர்" என்று ஸ்டாலின் எழுதுகிறார்.

பாஸிஸ்டு தேசமாகிய இத்தாலியில் மே தினம் என்ற மூச்சே விடக்கூடாது. ஹிட்லர் ஜெர்மனியிலும் அப்படியே.

1915ம் வருஷத்தில் முதன் முதலாக இந்தியா, சைனா, ஜப்பான், முதலிய தேசங்களில், மே தினக்கொண்டாட்டம் ஆரம்பிக்கப்பட்டது. 1920ம் வருஷம் ரஷியா இங்கிலாந்து முதலிய தேசங்களில் என்றும் கேள்விப்படாததும். பிரமிக்கத் தக்கதுமான மும்முரமுமான முறையில் மே தினம் கொண்டாடப் பட்டது. இங்கிலாந்தில் மாத்திரம் 80 லக்ஷம் தொழிலாளிகள் ஆயுதங்களை கீழே விட்டெறிந்து மே தினக் கொண்டாட்டத்தின் நிமித்தம அத்தினத்தை லீவ் தினமாக்கி விட்டனர். இங்கிலாந்தில் உள்ள சோஷியலிஸ்டுகள், தொழிலாளரின் சுதந்திரத்தையும், ஒற்றுமையும் காட்டிக்கொடுத்தார்கள். இருந்த போதிலும் 1926ல் பின்வர விருந்த ஸ்ட்ரைக்கின் அறிகுறியாக ஓர் ஊர்வல ஆர்ப்பட்டம் உன்னதமாகச் செய்து காட்டினர் பாட்டாளிகள்.

இங்கே கல்கத்தாவிலே 1930ம் வருஷம் வண்டிக்காரர்கள் ஓர் பெரிய வேலை நிறுத்தம் செய்தனர்.

சில வருஷங்களாகவே இந்த தேசத்தில் மே தினம் அதன் கொள்கையை ஓட்டி நடந்துவருகிறது. ஆயிரக் கணக்கான தொழிலாளிகள் தங்கள் தங்கள் தொழிற்சாலைகளை விட்டு வெளிவந்து தங்கள் சுகத்திற்காகவும், குறைந்த மணி நேர உழைப்பிற்காகவும், கிழப்பருவ உதவிக்காகவும், வேலையில்லா இன்ஷுரன்ஸுக்காகவும், ரேஷன லைஸேஷனுக்கு எதிரிடையாகவும், குறைந்தபக்ஷக் கூலி நிர்ணயிப்பிற்காகவும் போராடத் தீர்மானித்து பிரம்மாண்டமான கூட்டங்களையும், மகத்தான ஊர்வலங்களையும் நடத்தி வருகின்றனர்.

இரண்டு நூற்றாண்டுகளாக. நகரங்களிலும், நாட்டுப் புறங்களிலும் உள்ள உழைப்பாளிகளை வெளிநாட்டுச் சுரண்டல் கூட்டங்களும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும் சுரண்டிசுரண்டி ஓட்டாண்டியாக்கிவருகின்றன. இந்நாட்டில் பாட்டாளிகள் தங்கள் ஜீவாதார அரசியல் உரிமைக்களுக்காகப் போராடும் போராட்டமானது அவர்கள் சோஷியலிஸ்டு ஆக்ஷியை இந்நாட்டில் நிலைநாட்டுவதற்காப் போராடும் போராட்டத்தின் ஓர் பகுதியே ஆகும் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

நாம் இப்போது மத்திய ஐரோப்பிய நாடுகளை சற்று நோக்குவோம். இன்று என்ன நடக்கிறது அங்கே? நாகரீக முற்போக்குச் சக்திகள் ஒரு புறமும், காட்டுமிராண்டிப் பிற்போக்குச் சக்திகள் ஓர் புறமும் அணிவகுத்து நின்று பயங்கரமான போர் தொடுத்து வருகின்றன. ஸ்பெயினில் நடப்பது என்ன? பாசிஸிஸ்டு பூதம் ஸ்பெயின் மேல் பாய்ந்து ஆண், பெண், குழந்தைகள் யாவரையும் ஈவிரக்கமின்றி நாசப்படுத்தி வருகிறது. ஹிட்லர் ரெயிலாந்தை விழுங்கி ஏப்பமிட்டான். இத்தாலி அபிசீனியா மீது பாய்ந்து அதை 'கிர்த்துளியாக்கி' விட்டது. இதற்கு முன்னடியே அதாவது 1931ல் ஜப்பான் ஏகாதிபத்யம் மஞ்சூரியாவை கைப்பற்றி விட்டது. இப்போது சில தினங்களுக்கு முன்னால் ஹிட்லர் ஆஸ்ட்ரியாவை பிடித்துக் கொண்டான்.

இந்தப்படியாக ஆகாயத்தில் எந்தப்பக்கம் நோக்கினாலும் யுத்தமேகங்கள் இருண்டு மூடி அலைகின்றன. யுத்தம் ஏற்படுமானல் யார் யார் எந்தப்பக்கம் சேருவார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள ஒரே ஒரு பரீக்ஷை தான் உண்டு. ஜனநாயகமா? அல்லது சர்வாதிகாரமா? எது? இது அந்தப்பரீக்ஷையாம். ஜனநாயகத்தை நாடும் தேசங்கள் வல்லரசுகள். எல்லாம் ஓர்புறமும் ஏகாதிபத்திய திமிர் வேண்டுமென்னும் வல்லரசுகள் மற்றொரு புறமாகவும் நின்று முட்டி மோதிக்கொள்ளும்.

எப்படியிருந்த போதிலும், இரட்டைப் பிறவிகளான பாசிஸம், யுத்தம் இவ்விரண்டையும் தொழிலாளிகள் ஈவிரக்கம், தயை தாக்ஷண்யமின்றி வெட்டி வீழ்த்த வேண்டும்.

மே தினமாகிய இன்று, உலகத்தொழிலாளர்களின் வெற்றிக்காக கடைசிவரையில் சலியாமல் போராட நாம் சபதம் செய்து கொள்ளுகிறோம்.

இன்றையதினம், தொழிலாளர்களின் தாய் நாடாகிய, ஓர் ஒப்புயர்வற்ற சோஷியலிஸ்டு நாடாகிய சோவியத் ரஷியாவை நாம் போற்றுகிறோம். அதற்கு ஓர் தீங்கும் வராதவாறு நாம் செய்வோம் என்று சபதம் செய்துகொள்ளுகிறோம்.

இன்று இந்தியத் தொழிலாளிகளின் கடமை மிகப்பெரியது. கஷ்டமானது. தேசிய விடுதலைப் போராட்டத்தை வெற்றிகரமாக நடத்த வேண்டுமானல் அப்போராட்டம் தொழிலாளிகளின் தலைமையில் நடந்தால்தான் முடியும். இந்தத் தொழிலாளி வர்க்கம் ஒன்றானல் தான் ஏகாதிபத்ய இரும்புக்கோட்டையின் சுரங்களைத் தகர்த்தெறிய முடியும். மற்ற யாராலும் முடியாது.

இன்று பொது ஜனவாக்கையும், நம்பிக்கையையும் பெற்றுள்ள காங்கிரஸ், மந்திரி சபை பதவியில் இருக்கிறபடியால் தொழிலாளிகளையும் விவசாயிகளையும் ஒன்று திரட்டி அவர்களின் இயக்கங்களை உருவகப்படுத்தி பலம் பெறும்படியாகச் செய்ய ஓர் நல்ல சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது.

ஆகையால் மேதினமாகிய இன்று பூர்ஷுவா — ஜனநாயகப் புரட்சிக்காக நாம் முன்னின்று போராடுவோம் என்று நாம் பிரதிக்ஞை செய்து கொள்ளும் தினமாகும்.

ஸ்பெயினும், சீனாவும் பாஸிஸ்டு சைத்தான் கைகளில் சிக்கி விடுதலைக்காகப் போராடி வரும் அத்தேசத் தொழிலாளப் பொது மக்களை நாம் போற்றுவதோடு நாமும் அவர்களைப் போலவே ஏகாதிபத்யத்தை வீழ்த்த வீரமாகச் சண்டை செய்வோம் என்று பிரதிக்ஞை செய்து கொள்ளுகிறோம்.

ஸ்பெயின் தேச வீரமக்களே! சீனதேச வீர மக்களே! வீராவேசத்துடன் எழுங்கள்.!

தொழிலாளிகளின் வீரப் புதல்வர்களே! பாய்ந்து எழுங்கள்! உங்கள் அடிமைத் தளைகளை நொறுக்குங்கள்!

உலகத்தொழிலாளிகளே ஒன்று படுங்கள்!

உலக உழைப்பவர்களுக்கு உவந்தநாள், "மே தினம்" (May day) முதல் நாள்; என்பார்கள். இந்நாளில், உலகிலுள்ள தொழிலாளர்களும் கிருஷிகர்களும், ஆங்காங்கு கூடி தங்கள் கஷ்ட நிஷ்டூரங்களுக்கு வேண்டிய பரிகாரங்களை யோசித்து வருவார்கள். இந்நாளை சில தேசிய சர்க்கார்கள் விடுமுறையாகக் கொள்ளவார்கள். இதில் ஒரு விசித்திரம் உண்டு. இத்தாலி ஜர்மணி தேசங்களிலும் இந்நாளை தொழிலாளர்க்கென விடுமுறையாக ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

உலகத்தொழிலாளர்களை அடக்கியும், நசுக்கியும், சர்வதேச தொழிலாளர்கூட்டங்களை அவமதித்தும் வருகின்ற பாஸிஸ்டு கூட்டத்தவர்களும், இந் நாளை தொழிலாளர்குவந்த நாளெனக் கருதுவது, தங்கள் நாட்டு, தொழிலாளர்களையும் கிருஷிகர்களையும், மற்ற உலகத்தொழிலாளர்களையும் ஏமாற்றும் சூட்சி என அறிக.

உலகில், உலகத் தொழிலாளர்களுக்கு உவந்த ராஜ்யம் சோவியத் ராஜ்யம் ஒன்றே. அந்த ராஜ்யம் ஒன்றே. அந்த ராஜ்யம் ஒன்றில் தான் தொழிலாளர்கள் தங்கள் முழு வாழ்வையும் வாழ்ந்துவர சக்தி பெற்று இருக்கிறார்கள். அந்த சோவியத் நாட்டில்தான், ஒவ்வொரு தொழிலாளியும் முழு ஜனநாயகத்துவத்தை அனுபவிக்க முடிகிறது. அந்த நாட்டில் ஒன்றே ஒவ்வொரு தொழிலாளியும் தனது உழைப்பின் முழு பயனை அனுபவிக்க பாக்கியம் பெற்றுள்ளான்; உண்மையில், அந்த சோவியத் ரஷ்யா ஒன்றில்தான், பேச்சு சுதந்திரம், எழுத்து சுதந்திரம், நினைக்கும் சுதந்திரம் இம்மூன்றையும் அடைந்திருக்கின்றனர். மற்றெல்லா நாடுகளிலும் தொழிலாளர்களும் கிருஷிகர்களும் அடிமைகளாகப் பாவிக்கப்பட்டு வருகின்றனர் என அறிக.

நமது இந்திய நாட்டில் கடந்த 20 வருடங்களாக, தொழிலாளர் கிருஷிகர் சங்கங்கள் வலுத்து வருகின்றன. கடந்த 20 வருட இந்தியத் தொழிலாளர் சரித்திரத்தைப் படிப்போர் தொழிலாளர் கிருஷிகர் இயக்கம் சில சமயம் வலுத்தும் சில சமயம் குன்றியும் வந்திருப்பதை அறிவார்கள். முதலில் இந்திய தொழிற் சங்கங்களை நமது தேசிய காங்கிரஸ் அதிதமாகப் பார்த்துவந்தது. 1922ம் வருடத்திய கயா காங்கிரஸில், தொழிற் சங்கங்களை காங்கிரஸ் அங்கீகரி

(34-ம் பக்கம் பார்க்க)

# "பாருலகின் சொந்தக்காரன்"

(ப. ஜீவானந்தன்)

(நொண்டிச்சிந்து)

பாடுபடும் பாட்டாளித் தோழா—இந்தப்
பாருலகின் சொந்தக்காரன் வேறில்லை நீதான்—(பாடு)

மாடுகளோ மேய்ந்த இரையை—மென்று
மனதாரத் தின்னுதடா மானிலத்திலே
ஆடுகள் கடித்த தழையை—இங்கு
அசை போட்டுத் தின்னுவதை யறியாருண்டோ?
கேடுகெட்ட பன்றியுங்கூட—தேடிக்
கிடைத்ததைச் சொந்தமென்று அடைத்துவைக்கும்
பாடுபடும் உனக்கு மட்டும்—பாட்டின்
பலனில்லையென்று சொல்வோர் பாதகரடா—(பாடு)

நெற்றிநீர் நிலத்தில் விழவும்—நிதம்
நெஞ்சு நோகவும் உடம்பு நெக்கு விடவும்
பற்றிய பசிப்பிணியோடு—இங்கு
பஞ்சுபடாப் பாடுபட்டு வஞ்சமின்றியே
சிற்றெறும்பைப் போலுழைத்தாலும்—நீ
தேடியதில் பாத்தியதை செப்பக்கூடாதாம்
மற்றவர்க்கே யாவும் சொந்தமாம்—எனும்
வம்பர் சொல்லை மிதித்திட மனந்தேறடா —(பாடு)

கஞ்சியின்றிச் சாவது யாரார்?—பிச்சைக்
காரராகி யிரந்துண்டு மாள்வது யாரார்?
கெஞ்சியே தவிப்பது யாரார்?—சற்றும்
கேள்வி முறையின்றிமோசம் போவது யாரார்
பஞ்சணையில் தூங்குவது யார்?—தினம்
பாலமுதக் கொழுப்புற்று வாழுவது யார்?
மிஞ்சுகின்ற வித்தியாசத்தால்—வீணர்
மேன்மையுறத் தொழிலாளர் வீழ்கிறாரடா —(பாடு)

சும்மாயிருப்பவர் தமக்கும்—பல
சூழ்ச்சிகளால் உழைப்போரைச் சுரண்டுவோர்க்கும்
எம்மாதிரி யிழிவாயினும்—பலே!
எத்தராகிப்பிறர் பொருள் நத்து வோருக்கும்
சிம்மாதனம் குருபீடங்கள்—இந்த
செகத்தினைச் சொந்தமாக்கும் சேட்டை பாரடா
அம்மாடாவே! ஈதநீதி காண்—இதை
அழித்திடு, நீதி செய்யும் ஆண்மை கொள்ளடா—(பாடு)

மாடமாளிகைகளுனது—நெல்
வயல்களும் காடுகளும் யாவுமுனது
தேடரிய தொழிற்சாலைகள்—இந்த
செகத்தின் பெரும் பொருட்கள் யாவுமுனது
ஆடையலங்காரமுனது—இங்கு
ஆட்சியதிகாரம் செல்வம் யாவுமுனது
பாடுபட்டால் கூலியுண்டென்பார்—இந்தப்
பழமொழி யுண்மை யுறப்பழகிடடா —(பாடு)

சென்ற காலச்சட்ட திட்டங்கள்—இங்கு
செத்ததென்று கொட்டு ஜெயபேரிகை கொட்டு
நன்றிகெட்ட மானிடப்பேய்கள்—இங்கு
நடுங்கி மடியச்செய்யும் கடும்புயல் பார்
ஒன்றுபட்ட செஞ்சேனை வெள்ளம்—கடல்
ஒலியினும் பேரொலியாய் ஒலிக்குது கேள்
இன்று புதிதாகப் பிறந்தோம்—என்று
எழுந்து புதுஉலகில் ஏறுபோல் நட —(பாடு)

# —: சோஷியலிசம் பிறந்த கதை :—

(ப. ஜீவானந்தன்)

## பிரபுத்துவம்

புராதனக் கம்யூனிஸ்ட் சமூக அமைப்பு மாறினதும், பற்பல குடும்பங்கள் சேர்ந்த கோத்திரத் தலைவர்களின் அதிகாரங் கொண்ட.........சமூகம் தோன்றியது. அது மெள்ள மெள்ள சிற்றரசர்களும் பேரரசர்களும் அதிகாரம் வகித்த சமூகமாக உருக்கொண்டது. இந்த சமூக அமைப்பில் நாளேற ஏற அரசர்களுக்கு படைத்தலைவர்களாக இருந்தவர்கள், தங்களுடைய வீரதீரச் செயல்களுக்காக, அரசர்களிடம் சன்மானமாக மான்யங்கள் பெற்றனர். காலக்கிரமத்தில் இவர்களுடைய கை வலுப்பெற்றது. இதனால் பட்டயக்காரர்களும், பாளையக்காரர்களும், இனாம்தாரர்களும் உம்பிளிக்காரர்களும் நிறைந்த ஓர் சமூகம் ஏற்பட்டது. இதைத் தான் பிரபுத்துவ சமூக அமைப்பு என்பார்கள்.

## ஜனநாயக உணர்ச்சி

மேற்கூறிய சமூக அமைப்பு ஐரோப்பாக் கண்டத்தில், யந்திர அபிவிருத்தி ஏற்படுவதற்கு முன் இருந்தது. அப்பொழுது ஆதிக்கத்தில் இருந்த வர்க்கத்தினர், எல்லாவித முன்னேற்றங்களையும் படிப்படியாக எதிர்த்தார்கள். இங்கிலாந்தில் அந்த சந்தர்ப்பத்தில், ஆதிக்கத்திலிருந்த வர்க்கத்தார் முன்னேறி வந்த வர்க்கத்தாரைத் தடுத்ததின் விளைவு, ஓர் பலாத்காரப் புரட்சியில் முடிந்தது. வளர்ந்து வந்த புதிய வியாபாரிகள், நிலச்சுவான்தாரர்களான பிரபுக்களின் பிற்போக்கு தங்களுடைய வர்த்தக வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாயிருப்பதையும், பிரபுக்களுக்கே மன்னர்களிடம் செல்வாக்கிருந்ததால், சட்டதிட்டங்களும் தங்களுடைய வர்த்தகத்தை இச்சைபோல் வளரவிடாமல் தடுப்பதையும் உணர்ந்து, தொழில் முறை அபிவிருத்தியடையவும் பயன்படவும் ஒருவகை ஜனநாயகத்துவம் அவசியமெனக் கண்டார்கள். இந்த ஜனநாயகக் கொள்கைகளும் கருத்துக்களும் 19வது நூற்றாண்டின் முற் பகுதியில் பெரும்பாலும் படித்த கூட்டத்தாரோடு நின்றுவிட்டன.

## தொழிலாளி வர்க்க உற்பத்தி

ஆனால் பொதுமக்களின் நிலைமை யென்ன? அவர்கள் யந்திரத் தொழில் அபிவிருத்தியால் பாதிக்கப்பட்டார்கள். இந்தத் தொழில் முறை 'சரசர' வென்று அவர்களை இழுத்ததின் பயனாக, மக்கள், ஆயிரக் கணக்கில் நிலபுலங்களிலிருந்து, பாக்டரிகளுக்கு ஓடினார்கள். யந்திரத்தில் தொழிலாளர் வர்க்கம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. பாக்டரிகள் நிறைந்து, விகாரமும் அசுசியும் நிரம்பிய பட்டணங்களில் அவர்கள் கூட்டத்தின் மேல் கூட்டமாய்க் குவிந்து, நெருங்கிப் பிசுங்கி வாழ வேண்டியதாயிற்று. அதோடு அவர்கள் சாதாரணமாக நிலக்கரிச் சுரங்கங்களுக்கு சமீபமான இடங்களில் தான் மொய்த்துக் கொண்டிருந்தனர். இந்தத் தொழிலாளர்கள் மிக வேகமாக மாறி வந்தார்கள். புதிய தொரு மனப்பான்மை அவர்களிடம் வளர்ந்து வந்தது. பசிப்பிணியால் துரத்தப்பட்டு, பாக்டரியை நோக்கி ஓடி வந்த விவசாயிகள், கைத்தொழிலாளிகள் ஆகியவர்களை விட இவர்கள் எவ்வளவோ வித்தியாசமுடையவர்களாயிருந்தனர். இங்கிலாந்து தான், இத்தகைய பாக்டரிகளை ஸ்தாபிப்பதற்கு வழிகாட்டியாயிருந்தது. அது போல், யந்திரத் தொழிலாளி வர்க்கம் அபிவிருத்தியடைந்ததிலும், இங்கிலாந்து தான் முதல் தேசமாயிருந்தது. அக்காலத்தில் பாக்டரிகளின் நிலைமையோ இரங்கத் தக்கதாயிருந்தது. தொழிலாளர்கள் வசித்து வந்த குடிசைகளோ மிகப் பரிதாபப்படத் தக்கதாயிருந்தன. துயரக் கடல் அவர்களைச் சூழ்ந்து, வாட்டி வதைத்தது. பச்சைக் குழந்தைகளும் பாவ மறியாப் பெண்களும், பல மணி நேரம் மூச்சுத் திணறும்படி உழைத்து உழைத்து இளைத்தார்கள். சொல்லொணாத் துயரத்தால் கண்ணீர் சொரிவது தான் ஏழைத் தொழிலாளர்களின் 'தலை விதி'யாக நின்றது. இந்நிலைமையில் பாடுபடுவோர்களின் இந்தச் சோக நாடகம் முடிவடைய வேண்டுமென்ற நன்னோக்கத்துடன், பாக்டரிகளையும் தொழிலாளர் விடுதிகளையும் சட்டபூர்வமாகச் சீர்திருத்த எடுத்துக்கொண்ட பிரயத்தனங்கள் யாவும் பாக்டரி சொந்தக்காரர்களால் கடுமையாக எதிர்க்கப்பட்டன. "புனிதமான சொத்துரிமைகளில் தலையிடுவது, மானங்கெட்ட காரியமல்லவா?" என்பது அன்று குமுறிய உடையவர்களின் கேள்வி: மனிதனாய்ப் பிறந்தவன் வசிக்கும் ஒவ்வொரு வீடும் சுகாதாரத்தோடு இருக்க வேண்டுமென்று நிர்ப்பந்தப் படுத்தியதைக் கூட, மேற்கூறிய "உரிமைகளை"க் காட்டி சொத்துரிமைக்காரர்கள் எதிர்த்தார்கள். கிட்டத்தட்ட இந்த மாதிரியான மனோபாவத்தை இன்று இந்தியாவிலும் பார்க்க முடியும். மில் முதலாளிகளும் நிலச் சொந்தக்காரர்களும் மாத்திரமின்றி, சமூக மதப் பிற்போக்காளர்களும் (வைதீகப் பிடுங்கல்கள்) கூட, சீர்திருத்தங்களைத் தடுப்பதற்காக, சதா மதங்களையும் பழக்க வழக்கங்களையும்கொண்டு வந்து முட்டுக் கட்டைகளாகப் போடுகிறார்கள்.

## தொழிற் சங்கத் தோற்றம்

ஏழை இங்லீஷ் தொழிலாளிகள், சிறுகச் சிறுகத் தங்கள் உயிரைக் குடித்து வந்த பட்டினியாலும் மிதமிஞ்சிய உழைப்பாலும், சுடுகாட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். நெப்போலியானீய யுத்தங்கள் முடிவடைந்த பிறகு தேசம் க்ஷீணித்துப் போயிற்று. பொருளாதார வீழ்ச்சி தலை தூக்கிற்று. இதனால் தொழிலாளர்கள் தவியாமல் தவித்தனர். (இத்தகைய பொருளாதார நெருக்கடி உலக அளவில், 1914-18 வரை நிகழ்ந்த மகா யுத்தத்தின் பயனாக சென்ற சிலவருஷங்களாக ஏற்பட்டிருக்கிறது). இவ்வாறு கஷ்ட நஷ்டங்கள் விளையவே, கஷ்ட நிவாரண வழி கண்டுபிடிக்கத் தொடங்கினார்கள். பசித்தவன் சோற்றை நாடுவதும், தாகங் கொண்டவன் தண்ணீரை விரும்புவதும் இயல்புதானே? தங்களைக் காத்துக் கொள்வதற்காகவும், வேண்டிய சௌகரியங்களைப் பெறும் பொருட்டு போராடுவதற்காகவும், சங்கங்கள் அமைக்கத் தொழிலாளர்கள் விரும்பினார்கள். பண்டைக்காலத்தில், கைத் தொழிலாளிகளுக்கும் மூளைத் தொழிலாளிகளுக்கும் தனித்தனிச் சங்கங்கள் இருந்து வந்தன. ஆனால் அவை முற்றும் வேறு தினுசானவை. ஆயினும், சென்ற காலத்திலிருந்த அந்தச் சங்கங்களின் ஞாபகமே, பாக்டரி தொழிலாளிகள் தங்களுக்கிசைந்த சங்கங்களை அமைத்துக் கொள்வதற்குத் தூண்டுகோலாயிருந்தது. ஆனால், அவ்வாறு அமைத்துக் கொள்வதிலிருந்து தொழிலாளர்கள் தடுக்கப்பட்டார்கள். பிரிட்டிஷ் ஆதிக்க வர்க்கத்தினர் பிரஞ்சுப் புரட்சியால் ரொம்பவும் தொடைநடுங்கிப் போயிருந்தனர். ஆகவே அவர்கள் தொழிலாளர்களுக்கு விரோதமாகப் பல சட்டங்கள் இயற்றினார்கள். இணக்கச் சட்டங்கள் (Combination Acts) என்று அவை அழைக்கப்பட்டன. இந்தச் சட்டங்கள், தொழிலாளர்கள் கூட்டங்கள் கூடி, தங்களுடைய குறைகளையும் துயரங்களையும் பற்றி விவாதிப்பதற்குத் தானும் இடங் கொடாமல் தடுத்தன. இப்பொழுது இந்தியாவிலிருப்பது போல், அப்பொழுது இங்கிலாந்தில், "சட்டமும் ஒழுங்கும்" அதிகாரத்திலிருந்த விரல்விட்டு எண்ணத்தகுந்த ஒரு சிலரின் ஜேப்பியைநிரப்புவதற்கும் அவர்களுடைய லட்சியத்தைப் பூர்த்தி செய்வதற்கும் பெருத்த ஒத்தாசை புரிந்தன.

## பிரிட்டிஷ் தொழிலாளர்களின் போராட்டம்

ஆனால், தொழிலாளர்கள் கூட்டங்கள் கூடக்கூடாதென்று கொக்கரித்த சட்டங்களால், தொழிலாளர்களுடைய நிலைமைகளைச் சீர்ப்படுத்த முடிந்ததா? முடியவில்லை. இவைகளால் ஏற்பட்ட பயன், தொழிலாளர்களை பிராணவஸ்தைக்கு ஆளாக்கியதும், அவர்களுடைய உள்ளங்களை, எருமைமாடு விழுந்த குட்டைபோல், கலக்கியதும் தான் மிச்சம். அவர்கள் இரகசியச் சங்கங்களை நிறுவினார்கள். ரகசியங்கள் வெளிப்படாதவாறு தங்களைக் கட்டுப்படுத்திக்கொள்ள 'சத்தியங்களையும்' பிரதிக்ஞைகளையும் செய்து கொண்டார்கள். போக்கு வரத்து ஸ்தலங்களுக்கு வெகு தூரத்திற்கு அப்பால் ஒதுக்கிடங்களுக்குச் சென்று, அர்த்தராத்திரியில் கூட்டங்கள் கூட்டினார்கள். துரோகிகளால் காட்டிக்கொடுக்கப்பட்ட பொழுதும் அல்லது அதிகாரிகளால் கண்டு பிடிக்கப்பட்ட பொழுதும், சதியாலோசனை வழக்குகள் ஜோடிக்கப்பட்டு, கொடிய தண்டனைகள் கிடைத்தன. சில சந்தர்ப்பங்களில் தொழிலாளர்கள் ருத்ராகாரமான கோபாவேசத்தால் யந்திரங்களை நாசம் பண்ணினார்கள்; தொழிற்சாலைகளில் நெருப்பு வைத்தார்கள்; தங்கள் எஜமானர்கள் சிலரின் உயிரைக்கூட வாங்கினார்கள். கடைசியாக, 1825ம் வருஷத்தில், தொழிலாளர் சங்கங்கள் மேலிருந்த தடைகள் ஓரளவுக்கு நீங்கின. தொழிற் சங்கங்கள் உருப்பெற ஆரம்பித்தன. அதிகச் சம்பளம் பெற்ற, விஷய ஞானமுள்ள தொழிலாளர்கள் தான் இந்தச் சங்கங்களை ஸ்தாபித்தார்கள். பாமரத்தன்மையில் மூழ்கிக்கிடந்த பெருவாரியான தொழிலாளர்கள், நீண்டகாலமாக எத்தகைய ஸ்தாபனமுமின்றி, சிந்திச்சிதறியே வாழ்ந்து வந்தார்கள். தொழிலாளர்களின் இயக்கம், இவ்வாறு, கூட்டுப் பேரத்தின் மூலமாக தொழிலாளர்களுடைய நிலைமைகளை உயர்

த்தும் பொருட்டு, தொழிற்சங்கங்களாக உருவெடுத்தது. தொழிலாளர்களிடமிருந்த ஒரே ஒரு உண்மையான ஆயுதம் வேலை நிறுத்தம் செய்வதற்குள்ள உரிமைதான். அதாவது, வேலை செய்வதை நிறுத்தி, அதன்மூலம் பாக்டரியையாயினும் அல்லது வேலை செய்யும் எந்த இடத்தையாயினும் ஸ்தம்பிக்கச் செய்வதுதான். சந்தேகமின்றி, இது ஓர் மாபெரும் ஆயுதமே. ஆனால், அவர்களுடைய முதலாளிகளுக்கு, இதைவிடப் பேராயுதம் ஒன்று இருந்தது. அதுதான், தொழிலாளர்கள் தங்களுக்குக் கீழ்ப்படிந்து அடங்கி ஒடுங்கி வருகிற வரையில் பட்டினி போட்டுத் துன்புறுத்தத் தருந்த சக்தி. ஆகவே தொழிலாளியின் வர்க்கத்தின் போராட்டமானது, தொழிலாளர்களின் மகத்தான தியாகத்தோடும் மெள்ளமெள்ள மெதுவாக ஏற்பட்ட லாபங்களோடும் நடந்து கொண்டிருந்தது. அவர்களுக்குப் பார்லிமெண்டில் நேரடியான செல்வாக்கு எதுவும் இல்லை, ஏனென்றால், அதுவரையில் ஓட்டுப்போடும் உரிமை கூடக் கிடையாது. 1832-ல் ஒரு சட்டம் செய்யப்பட்டது. அதற்கு சீர்திருத்தச் சட்டம் என்று பெயர் (Reform Bill). அக்காலத்தில் இந்தச் சட்டமானது வானளாவப் புகழ்ந்து பறையடிக்கப்பட்டது. ஆயினும், இந்த சட்டத்தால், பொருளாதார வசதியுடைய மத்தியதர வர்க்கங்கள் மாத்திரமே ஓட்டுரிமை யடையமுடிந்தது. தொழிலாளர்களுக்கு மட்டுமே வாக்குரிமை யில்லையென்று கருத வேண்டாம். கீழ்த்தர-நடுத்தர வர்க்கத்தினர்களும் அன்று வாக்குரிமையின்றித்தான் வாழ்ந்து வந்தார்கள்.

### பாக்டரிச் சட்டம்

இதற்கிடையில், மாஞ்செஸ்டரிலுள்ள மில் சொந்தக்காரர்களிடையே ஓர் மனிதன் தோன்றினன். அவன் ஒரு உயர்ந்த மனித ஜீவாபிமானி; சிறந்த பரோபகாரி. குலை நடுங்கச்செய்யும், தொழிலாளர்களின் பரிதாப நிலைமை, அவனுடைய நெஞ்சத்தைப் புண்படுத்திற்று. இந்த மனிதன்தான், ராபர்ட் ஓவன். அவன், தன்னுடைய தொழிற்சாலைகளில் பற்பல சீர்திருத்தங்களைப் புகுத்தினன். தன்னுடைய தொழிலாளர்களின் நிலைமையில் மிகுந்த அபிவிருத்தியை உண்டுபண்ணினன். தனது வர்க்கத்தார்களாகிய மில் முதலாளிகளிடையில் ஓர் கிளர்ச்சியை ஆரம்பித்தான். தொழிலாளிகளை நல்ல முறையில் நடத்த வேண்டுமென்று, தார்க்கரீதியாக அவர்களுக்கு (முதலாளிகளுக்கு) அறிவுறுத்த முயன்றான். ஓவனின் இடையறாத உழைப்பின் காரணமாக, பிரிட்டிஷ் பார்லிமெண்ட்; முதலாளிகளின் சுயநலத்திற்கும் பேராசைக்கும் விரோதமாக தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காக, ஒரு சட்டம் இயற்றியது. 1819ல் இயற்றிய பாக்டரி சட்டம் (Factory Act) இதுதான். இந்தச் சட்டம் செய்யப்படுமுன், சின்னஞ் சிறுவர்களெல்லாம், பாக்டரிகளில் ஈவிரக்கமின்றி முதலாளிகளால் உழைப்பின் பெயரால் சித்திரவதை செய்யப்பட்டனர். ஆனால், இந்தச் சட்டம் வந்ததும், 9வயது சிறுவர்களும் சிறுமிகளும் தினசரி 12 மணி நேரத்திற்குமேல் பாக்டரிகளில் வேலை வாங்கப்படக்கூடாது என்ற நிலைமையேற் பட்டது. அந்தோ! வாசகர்களே! அப்படியானல், இச்சட்டம் ஏற்படுமுன், பச்சிளம் பாலகர்களும் பாலிகைகளும் எத்தனை மணிநேரம் தொழிற்சாலைகளினுள், வேலை யென்னும் செக்கில் அரைபட்டிருப்பார்களென்று ஊகித்துப் பாருங்கள்! அன்றிருந்த தொழிலாளர்களின் கீழான நிலைமையை விளக்கிக் காட்டுவதற்கு, இதைவிட வேறு படம் பிடித்தா காட்ட வேண்டும்?

### புராதனக் கம்யூனிசம்

ராபர்ட் ஓவன் தான் சோஷியலிஸம்" என்கின்ற வார்த்தையை எங்கோ ஓரிடத்தில் முதன் முதலில் 1830 வருஷத்தில் உபயோகப்படுத்தினரென்று கூறப்படுகிறது. உண்மையில், பணக்காரன் ஏழை என்ற மேடு பள்ளங்களை சமப்படுத்த வேண்டுமென்பதும், கிட்டத்திட்ட சம சொத்துரிமையிருக்க வேண்டு மென்பதுமான அபிப்பிராயங்கள் புதியவையல்ல. சென்ற காலத்தில் அநேகர் இந்த அபிப்பிராயத்தைப் போதித்திருக்கிறார்கள், முற்பட்ட சமூகங்களில் ஒரு வகையான கம்யூனிஸம் இருந்து வந்தது. அங்கு நிலம் சமூகம் முழுமைக்கும் அல்லது கிராமம் முழுமைக்கும் சொந்தமாக இருந்தது. ஏனைய சொத்துக்களும் பொதுவாகத்தான் இருந்து வந்தன. இதைப் புராதனக் கம்யூனிஸம் என்று அழைக்கிறார்கள். இந்தியாவைச் சேர்த்து, அநேக நாடுகளில் இதன் அம்சங்களை இன்னும் பார்க்கலாம். ஆனால் புதிய சோஷியலிஸ மிருக்கிறதே அது ஜனங்களை சமதையாக்க வேண்டுமென்ற மொட்டையான ஆர்வத்தைவிட இன்னும் அதிகப்படியானது. புதிய சோஷியலிஸம் ரொம்ப நிர்ணயமானது. புதிய பாக்டரி பொருள் உற்பத்தி முறைக்கு ஏற்றமாதிரியில் அநுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதற்காக ஆரம்பிக்கப்பட்டது. ஆகவே, இது யந்திரத் தொழில் உற்பத்தி முறை ஈன்றெடுத்த குழந்தை. தொழிலாளர்களுக்காகக் கூட்டுறவுச் சங்களிருக்க வேண்டுமென்பதும் தொழிலாளர்களுக்கு பாக்டரிகளில் பங்கிருக்க வேண்டுமென்பதும் ஓவனின் எண்ணம். அவன் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும், ஏறத்தாழ வெற்றிகரமாக, மாதிரி பாக்டரிகளையும் ஆசிரமங்களையும் ஸ்தாபித்தான், ஆனால் சகோதர முதலாளிகளையும் அரசாங்கத்தையும் தன் வழிக்குத் திருப்ப முயற்சித்ததில் அவன் தோல்வியே அடைந்தான். ஆயினும், அவனுடைய காலத்தில், அவனுடைய செல்வாக்கு அமோகமாயிருந்தது. அவனால் மதிப்பிடப்பட்ட ஒரு வார்த்தை, 'சோஷியலிஸம்' என்பது, அன்றிலிருந்து கோடானு கோடிமக்களை வசீகரித்துக் கொண்டிருக்கிறது.

### முதலாளித்துவத்தின் வெற்றி

இந்தக்காலம் முழுவதும் முதலாளித்துவ முறைப்படி தொழில் முறை வளர்ந்தது. அது வெற்றிமேல் வெற்றி கொண்டு வரும்பொழுது, அதனோடு கூடவே, தொழிலாளி வர்க்கத்தின் பிரச்னையும் வளர்ந்து வந்தது. முதலாளித்துவம், அதிகமாக, இன்னும் அதிகமாக, அதைவிட அதிகமாக அதைக் காட்டிலும் அதிகமாக வென்று பொருளை உற்பத்தி செய்தது. இதன் காரணமாக தொழிலாளி வர்க்கத்தின் எண்ணிக்கையும் நிமிஷமொரு மேனியும் விநாடியொரு வண்ணமுமாக கன வேகத்தில் வளர்ந்தது. ஏனென்றால், இம்முறையால் அதிகப்படியான ஜனங்களை ஆதரிக்கவும் போஷிக்கவும் முடிந்தது. பிரமாண்டமான தொழில்கள் கட்டப்பட்டன. இத்தொழில்களிற் பல் வேறான பாகங்கள், நுட்பமாகவும், சிக்கலாகவும் இணைக்கப்பட்டன. இதே சமயத்தில் இவைகளோடு சிறு தொழில்கள் தொடுத்த போட்டி, நசுக்கப்பட்டன. இங்கிலாந்தில் செல்வம் குவிக்கப்பட்டது. அச்செல்வத்தில் பெரும்பாகம், புதிய பாக்டரிகளை அல்லது ரயில் பாதைகளை அல்லது இப்படிப்பட்ட ஏதேனுமொன்றை ஆரம்பிக்க உபயோகமாயிற்று. தொழிலாளர்கள் தங்களுடைய நிலைமைகளைச் சீர்ப்படுத்தும் உத்தேசத்தோடு செய்த வேலை நிறுத்தங்கள், வழக்கமாகப் படு தோல்வியே யடைந்தன. பின்னர் அவர்கள் 40ம் வருஷத்திய சார்ட்டிஸ்டு இயக்கத்தில் கலந்தார்கள். இந்த சார்ட்டிஸ்டு இயக்கம், புரட்சி வருஷமாகிய 1848ல் சீர்குலைந்து போயிற்று.

### தனி உடைமை ஒழிக!

முதலாளித்துவத்தின் வெற்றி, பொது ஜனங்களை வியப்பும் திகைப்பும் அடைய வைத்தது. ஆன்போதிலும், சில தீவிர வாதிகள், முற்போக்கான அபிப்பிராய முடையவர்கள், மனித ஜீவாபிமானிகள் முதலியவர்கள், முதலாளித்துவத்தின் கொலைகாரப் போட்டியையும், நாட்டின் செல்வம் அபிவிருத்தி யடைந்தும் தொழிலாளர்களின் கஷ்டம் தீராதிருப்பதையும் கண்டு, அதிருப்தியடைந்தார்கள். இங்கிலாந்திலும், ஜர்மனியிலும் பிரான்சிலும் இவர்கள், பொது ஜன க்ஷேமத்திற்காக வேறு பல வழிகளைப்பற்றிச் சிந்தித்தார்கள். கஷ்ட நிவாரணத்திற்காக பற்பல யோசனைகள் கூறப்பட்டன. அவைகளைத் தொகுத்தால், சோஷியலிஸம், கூட்டுறவுமுறை (Collectiwism) சமூக ஜன நாயகத்துவம் (Social demecracy) என்கிற வார்த்தைகள் குறிக்கும் மொத்த அபிப்பிராயத்தில் அடங்கிவிடும். மேற்கூறிய வார்த்தைகளை நுணுக்கமாக ஆராயாது, மேலோட்டமாகப் பார்த்தால், கிட்டத்தட்ட ஒரே கருத்தை வெளியிடுவனவாகவே தெரியும். இந்த சீர்திருத்தக்காரர் அத்தனை பேருக்கும் பொதுவாக ஓர் அபிப்பிராயம் இருந்து வந்தது. அதாவது, உற்பத்திக்குரிய சாதானங்கள் எல்லாம் தனி உடைமையாக இருப்பதும், இந்தத் தனி உடைமை யாதிக்கத்தில் தொழில் முறையிருப்பதுமே தொல்லைகளுக்கெல்லாம் காரணம் என்பதே. இதற்கு பதிலாக, அரசாங்கம், தனி நபர்களிடத்திலிருந்து உடைமைகளைக் கைப்பற்றி, சர்க்காருக்குச் சொந்தமாக்கி, ஆதிக்கம் செலுத்தினல், அல்லது முக்கியமான உற்பத்தி சாதனங்களாகிய நிலம், பிரதான யந்திரத் தொழில்கள் இவைகளையேனும் ஆதிக்கம் செலுத்தினல் சுரண்டப்படுவதாகிய ஆபத்து தொழிலாளி மக்களுக்கு இல்லாமல் போகும். ஆகவே, மொத்தமாக, ஜனங்கள், முதலாளித்துவ முறைக்குப் பதிலாக வேறொன்றைக் கண்டார்கள். ஆனால், முதலாளித்துவ முறையோ, தட்டுத்தடுமாறிப் போனதாகத் தெரியவில்லை. அது பலத்தின்மேல் பலம் பெற்றுக்கொண்டிருந்தது.

### இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் சோஷியலிஸ்டு இயக்கம்

இந்த சோஷியலிஸ்டு அபிப்பிராயங்கள், புத்திசாலி அல்லது படித்த வகுப்பாரால் ஆரம்பிக்கப்பட்டன. ராபர்ட் ஓவனை எடுத்துக்கொண்டால், அவன் ஓர் மில் சொந்தக்காரன். கொஞ்ச காலத்திற்கு, தொழிலாளர்களின் தொழிற் சங்க இயக்கம், வேறு பாதைகளில் வளர்ந்துவந்தது. சிற்சில சௌகரியங்களுக்காகவும், அதிகச் சம்பளத்துக்காகவும் பாடுபட்டது தான் அம்முறைகள். இந்த அபிப்பிராயங்கள் புதிய முறைகளில் செல்வாக்குப் பெற்று,

(33-ம் பக்கம் பார்க்க)

# இந்திய சோஷியலிஸ்டுகள் செய்யவேண்டியதென்ன ?

M. R. மசானி,
(அகில இந்தியக் காங்கிரஸ் சோஷியலிஸ்ட்கட்சிக் காரியதரிசி)

*உலகம் பூராவும் 'மே தினம்' சோஷியலிஸ்டுகள் தினமாக, தொழிலாளிகளின் திருநாளாகக் கொண்டாடப்படுகிறது.*

உலகில் இன்று தினம் யுத்தப்பேய் தலைவிரித்தாடுகிறது. உலக மகா யுத்தத்திற்காக முஸ்தீப்புகள் மும்முரமாக நடக்கின்றன. சோஷியலிஸ்டு இயக்கம் என்றைக்குமில்லாத முறையில், பல தேசங்களில் அடக்கி ஒடுக்கப்பட்டு வருகிறது. நமது நாட்டிலும், உலகம் பூராவும் இன்று நடைபெறும் சம்பவங்கள் சோஷியலிஸ்டு இயக்கத்திற்கே சவால் விடுப்பதைப் போன்றிருக்கிறது. இந்த நிலைமையில் இந்த வருஷம் மே தினம் வருகிறது. இந்தச் சவாலை நாம் பகிரங்கமாக ஏற்கவேண்டும். மே மாதம் முதல் தேதியன்று, நாம் அனைவரும், புரட்சிகரமான சோஷியலிஸத்தில் நமக்கு பரிபூர்ண நம்பிக்கை உண்டு என்பதையும், சோஷியலிஸத்தின் கைங்கரியத்திலேயே நமது வாழ்நாட்களைச் செலவிடுவோம் என்பதாகவும் ஆணையை மேற்கொள்வோமாக. நாம் இதுவரை அடைந்துள்ள வளர்ச்சியை நன்கு மதிப்பிட்டு, நமது வருங்கால திட்டத்தை வகுப்பதற்கும் மேதினம் ஒரு அரிய சந்தர்ப்பமாகும்.

புரட்சிகரமான சோஷியலிஸ்டுகள்—இந்தியாவிலுள்ள நாமும், உலகிலுள்ள மற்றவர்களும்—கோருவதும், விரும்புவதும் என்ன? தனி உடைமையைத் தகர்த்தெறிந்து, வர்க்க வேற்றுமையற்ற சமூகத்தை நிர்மாணிப்பதே, சோஷியலிஸத்தின் தத்துவங்களுக்குள் முதன்மை ஸ்தானம் வகிக்கக்கூடியவை. நமது அடிப்படையான கொள்கைகள், சமத்துவமும், சுதந்திரமுமேயாகும். உற்பத்தி, வினியோகம், பண்டமாற்று ஸாதனங்களில், இன்றுள்ள தனி உடைமையை ஒழித்து வர்க்க வேற்றுமையற்ற சமூக நிர்மாணத்திற்காகப் பாடுபடாத எதையும் சோஷியலிஸம் எனக் கூற முடியாது. சமத்துவத்தையும், சுதந்திரத்தையும் மறுக்கும் எதுவும் சோஷியலிஸம் ஆகாது. இந்த விஷயங்களை நாம் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். ஏனெனில், இதுதான் உண்மையான சோஷியலிஸத்திற்கும், ஜெர்மனியில், "தேசிய சோஷியலிஸம்" என்ற பெயரில் நிலவிவரும் நாஸிஸத்திற்கும் மற்றுமுள்ள போலி சோஷியலிஸங்களுக்கும் உள்ள வித்தியாசமாகும்.

நமது கொள்கைகளை நிலைநாட்டுவதற்கு, அவ்வப்போது ஏற்படும் நிலைமைக்கும் சந்தர்ப்பங்களுக்கும் ஏற்றவாறு திட்டங்களையும், முறைகளையும் தயாரித்துக் கையாள்வதற்கு, மார்க்ஸிஸ்டு நூல்கள் நமது வழி காட்டியாயிருக்கின்றன. நமது திட்டங்களைத் தயாரிக்கையில் மார்க்ஸும், லெனினும் எழுதியுள்ளவைகளைச் சரிவரக் கவனிக்க வேண்டியது அவசியமும், இயற்கையானது மல்லவா? சென்ற உலக மகாயுத்தத்தின் போது, உலகத்திலுள்ள முதலாளி நாடுகளிலிருந்த சோஷியலிஸ்டுத் தலைவர்களெல்லாம் தங்கள் கடமையையும் லக்ஷ்யத்தையும் மறந்து, "ஜனநாயகத்தைக் காப்பாற்றுவதற்காக" தொழிலாளி மக்கள் யுத்தத்தில் கலந்து கொள்ளவேண்டுமென பிரசாரம் செய்த காலத்தில் மார்க்ஸ் கூறிய அரிய உண்மைகளை ஞாபகத்திற்கு லெனின் கொண்டுவரவில்லையா? ஆனால், அவ்வப்போது இருக்கும் நிலைமைக்கும் சந்தர்ப்பத்திற்கும் தக்கவாறு, நமது திட்டத்தை வகுத்துக்கொள்ள நமது புத்தியை உபயோகியாமல், பெரிய தலைவர்கள், அவர்கள் காலத்திற்கேற்றவாறு கூறிய தைக் கொண்டே தீர்மானிப்பதைப்போன்ற ஆபத்து வேறொன்றும் இருக்க முடியாது.

சோஷியலிஸம் கேவலம் ஒரு மதமாக மாறிவிடாமல் தடுப்பது நமது கடமையாகும். மதம் மக்களை மயக்கும் அபினி மருந்து என்ற உண்மையைக் கூறினார் லெனின். இந்த வார்த்தைகள் கிறிஸ்தவ மதத்தைக் குறித்து மாத்திரம் கூறப்பட்டவையல்ல. நாம் சோஷியலிஸத்தையும், கம்யூனிஸத்தையும், கேவலம் ஒரு மதமாகிவிட விட்டுவிடுவோமேயானால், லெனின் வார்த்தைகள், இதற்கும் பொருந்தும் என்பதில் சந்தேகமேயில்லை.

இந்தமாதிரி ஒரு அபாயம் ஏற்படக்கூடிய நிலைமையிலேயே நாம் இருக்கிறோம். ஒரு அதிகாரத்தோரணையும், பொறுமையின்மையும், நம் கண் முன்னே—மத ஸ்தாபனங்களின் சீடர்களைப் போன்று—வளர்வதை நாம் பார்க்கிறோம். மார்க்ஸிஸ்டு உலகத்திலும் இன்று வைதீகர்கள், பிரஷ்டர்கள் என்ற இருவகைப்பட்ட கோஷ்டியினர் உள்ளார்கள். ஒரு காலத்தில், ரோமன் கத்தோலிக்கர்களின் சர்ச்சுகளில், இரண்டு போப்கள் தோன்றினர்—ஒருவர் ரோமாபுரியில்; மற்றொருவர் அவிக்னன் என்ற ஊரில். அதே நிலைமையை நாம் இன்று மார்க்ஸிஸ்டு உலகத்தில் பார்க்கிறோம். பாரிஸ் நகரில் சோவியத்ஸ்தானிகராயிருந்த ராரோபிஸ்கி, "போல்ஷிவிக்கர்களாகிய நாம், எப்பொழுதும் உத்திரவுகளுக்குக் கீழ்படியும் கூட்டம்" என்று கர்வத்துடன் ஒரு முறை கூறினார்.

சோஷியலிஸ்டு இயக்கம், கேவலம் ஒருமத ஸ்தாபனமாக மாறி, ஆசாரியார்கள், தம்பிரான்கள், மடாதிபதிகள், முதலிய ஆட்சி முறை அதில் தோன்றினால் அரசாங்கங்களை யெல்லாம் கவிழ்த்து, மக்களின் நன்மைக்காக சமூகங்களையே கவிழ்க்கக் கூடிய சக்தியை இழந்து, உயிரற்ற ஒரு பிணமாய்விடும் என்பது எனது துணிவு. டெல்லி சட்டசபையில் சாரதா சட்டம் விவாதிக்கப்பட்ட போது ஒரு அங்கத்தினர் "பால்ய விவாகம் கட்டாயமாய்ச் செய்தாகவேண்டுமென்று சாஸ்திரங்கள் கட்டளையிடுகின்றன" எனக் கூறினர். உடனே பண்டித மோதிலால் நேரு, "அப்படியானால் அந்த சாஸ்திரங்களைத் தூக்கிக் குப்பைத் தொட்டியில் போடுங்கள்" என்றார். அதைப்போன்ற மனப்பான்மை நமக்கு இன்று வேண்டும்.

இதுவரை பயங்கரமான, நம்பிக்கையே இல்லாத, ஒரு சித்திரத்தை வரைந்துள்ளேன் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால், நான் அவ்வாறு செய்தது வேண்டுமென்றே. ஏனெனில் நாம் யதார்த்தவாதிகளானால்.. உண்மையிலேயே நாம் விஞ்ஞான சாஸ்திரிய சோஷியலிஸ்டுகளானால், இன்று, இந்தியாவிலும், உலகத்திலும், சோஷியலிஸ்டுகளின் நிலைமை மோசமாயிருக்கிறது என்கிற உண்மையை மறைக்க முடியாது. ஆயினும் நமது கொள்கைகளும் தத்துவங்களும் உண்மையாகையால், மனித சமூகத்தின் முன்னேற்றத்தில் நமக்குப் பரிபூரண நம்பிக்கை இருக்குமேயாகில், இந்தப்புரட்சி எதிர்ப்புச் சக்திகளையும் கண்டு நாம் பயப்படமாட்டோம். எதிர்காலம் நம்முடையதே என்பதை நாம் ஞாபகப்படுத்திக் கொள்வோமாக.

சோஷியலிஸ்டு சமூகத்தை அடைவதற்கு முன், முதலாளித்துவத்தின் இந்த எதிர்ப்பிற்கு கட்டுக்கடங்காத எதிர்ப்பிற்கு—நாம் உட்படத்தான் வேண்டி வரும் என்பதை 50 வருஷங்களுக்கு முன்னமேயே கார்ல் மார்க்ஸ் நமக்கு போதித்திருக்கிறார். முதலாளித்துவ சமூகம், இன்று கடைசி மூச்சைப் பிடித்துக்கொண்டு போராடுகின்றது. வாழ்நாட்கள் கழிந்து, மரணவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கும் சவுகரியக்காரர்களைப் போன்றே, இன்று முதலாளித்துவம் உயிர் வாழ்வதற்காக போராடிக் கொண்டிருக்கிறது. ஆகவே, அது தனது விஷப்பற்களை யெல்லாம் வெளியில் காட்டி, கடைசி மூச்சுடன் போராடுகிறது. முதலாளித்துவத்தின் ரூபம்தான் பாஸிஸமெனப்படுவது. ஆகவே இன்றைக்கு நம் முன்னே இருப்பது இருளும், ஆபத்தும் மாத்திரமல்ல; இன்றைக்கு நமக்கு ஒரு அரிய பெரிய சந்தர்ப்பமும் வாய்த்திருக்கிறது. முதலாளித்துவத்தில் ஏற்பட்டுள்ள தீராத பெரும் நெருக்கடி, என்றும் தீராத யுத்த மிரட்டல்கள் இன்று நம் கண் முன்னே நடக்கும் யுத்தங்கள், முதலாளி வர்க்கம் ஆயுதங்களைத் தாங்க ஆரம்பித்தல்,—இவையெல்லாம், முதலாளித்துவ சமூகம் அழுகிப் போய்விட்டது என்பதையே காட்டுகிறது. சமூகத்தில் நிலைத்திருப்பதற்குரிய பரீக்ஷையில், முதலாளித்துவ அமைப்பு தவறிவிட்டது. இன்றைக்கிருப்பது போல், அது என்றும் 'திவாலாக' ஆனது கிடையாது. அது இன்று இடிந்து விழாவிட்டாலும், அதில் சந்துகளும், பிளவுகளும் காண ஆரம்பித்துவிட்டன. இவ்வாறு முடியும் இக்காலத்தில், அது கோடிக்கணக்கான மக்களையும் மாய்த்துவிட்டே மடிந்துபோவதாக பயமுறுத்துகிறது. முதலாளித்துவத்தை அடியுடன் தகர்த்தெறிவதற்கான அரிய சந்தர்ப்பத்தை சோஷியலிஸ்டுகளுக்கு அளிக்கின்றன. கார்ல் மார்க்ஸின் காலத்திலிருந்து தோன்றிய

(29-ம் பக்கம் பார்க்க)

# "ஜன சக்தி" பத்திரிகையும் கட்சித் தோழர்களும்

———(o)———

சோஷியலிஸத்தைப் பற்றிய தவருன அபிப்பிராயங்களைப் போக்கி, சரியான கருத்துக்களை மாகாணம் பூராவும் பிரசாரஞ் செய்வதற்கும், காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியைப் பலப்படுத்துவதற்கும் ஓர் பத்திரிகை எவ்வளவு அவசிய மென்பதையும், அந்த அவசியத்தை "ஜன சக்தி" எவ்வளவு தூரம் பூர்த்தி செய்து வருகிறது, எவ்வளவு தூரம் பூர்த்தி செய்யுமென்பதையும் விளக்கிச் சொல்லத் தேவையில்லை. தோழர்கள் எல்லோரும் நன்ருக அறிவார்கள். ஆகவே, "ஜன சக்தி"யின் வளர்ச்சிக்கான சில விஷயங்களை ஒவ்வொரு கட்சித் தோழரும் காரியத்தில் காட்டும்பொருட்டுக் கீழே தரப்படுகிறது.

1. கா. சோ. கட்சி அங்கத்தினர் ஒவ்வொருவரும் உடனே இரண்டு சந்தாதாரர்களைச் சேர்த்து, ஒரு வருஷச் சந்தாப் பணத்தை முன்னுடியே வாங்கி அனுப்பி வைக்க வேண்டும்.

2. தனிப்பிரதிகள் விற்க வசதியுள்ளதும், இதுவரையில் ஏஜென்ஸி ஏற்படுத்தப்படாத தாயுமுள்ள இடங்களில் ஏஜென்ஸி ஏற்பாடு செய்ய மானேஜருக்கு உதவி செய்ய வேண்டும். இவ்விஷயத்தில் ஆபீஸில் தயார் செய்யப்பட்டுள்ள ஏஜென்ஸி விதிகளைத் திட்டமாக அனுசரிக்க வேண்டும்.

3. எந்தத் தனி மனிதனுக்கும், எந்தச் சங்கத்திற்கும் பத்திரிகை சும்மா அனுப்ப வேண்டுமென்று சிபார்சு செய்வதை நிறுத்திவிட வேண்டும்.

4. விளம்பரங்கள் வாங்கி, முன் பணத்தோடு அனுப்பவேண்டும்.

5. ஒவ்வொரு வாரப் பத்திரிகையையும் பொது ஜனங்கள் எப்படி வரவேற்கிருர்களென்று கவனித்து அறிந்து ஆபீஸுக்கு எழுத வேண்டும். அவரவருடைய இடங்களில் நடைபெறும் காங்கிரஸ், தொழிலாளி விவசாயி, மாணுக்கர், வாலிபர் ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் கூட்டங்கள் கிளர்ச்சிகளைப் பற்றியும் இன்னும் முக்கியமான விஷயங்களைப் பற்றியும் உடனுடன் பத்திரிகைக்கு எழுதியனுப்ப வேண்டும்.

7. முடிந்த வரையில் அதிகமான ஆட்கள் பத்திரிகையைப் படித்துக் கேட்கும்படி செய்யவேண்டும்.

பொருளாதார வசதி போதிய வாறில்லாமல் ஆரம்பித்திருக்கும் பத்திரிகை நிலைத்து நிற்க வேண்டுமானல், சந்தாதாரர்களும் விளம்பரக்காரர்களும் முறையாகக் கிடைக்க வேண்டியது மிக அவசியம். சோஷியலிஸ்ட் கட்சிக்காகப் பத்திரிகை நடத்துவது மிகத் தொந்தரவுமான ரொம்ப சிரமமும் நிறைந்த ஓர் வேலை. 'ஜன சக்திக்கு'க்கு உதவும் சகல உதவிகளும் கட்சிக்கு உதவியதேயாகும்.

# "ஜன சக்தி"க்கு
## நன்கொடை அளித்தவர்கள்

———(o)———

| தோழர்கள் | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| 1. க. அய்யம்பெருமாள் தேவர், முத்துப்பேட்டை | 25 | 0 | 0 |
| 2. கே. வி. எஸ். சிவஞான தேவர், கீழக்காடு | 5 | 0 | 0 |
| 3. வி. கோதண்டராஜலு நாயுடு, பட்டுக்கோட்டை | 5 | 0 | 0 |
| 4. கே.எ.ஆர். சுப்பிரமணிய தேவர், மறவக்காடு | 5 | 0 | 0 |
| 5. பி. நடேச தேவர், மறவக்காடு | 1 | 0 | 0 |
| 6. கு. ரு. சிதம்பர தேவர் ,, | 2 | 0 | 0 |
| 7. டி. வி. என். ரெத்தினம், தோலி | 1 | 0 | 0 |
| 8. டி. எஸ். என். எஸ்., மறவக்காடு | 1 | 0 | 0 |
| 9. அ. மு. முகம்மது லவுக்கணி ராவுத்தர், முத்துப்பேட்டை | 1 | 0 | 0 |
| 10. பி. ராமுத்தேவர், சுந்தரம் | 0 | 8 | 0 |
| 11. மு. சா. விஸ்வலிங்கத் தேவர், மறவக்காடு | 1 | 8 | 0 |
| 12. ஆர். எம். மருதையன், மறவக்காடு | 3 | 0 | 0 |
| 13. ரு. அழகர் தேவர், சுந்தரம் | 1 | 0 | 0 |
| 14. ரு. சின்மயானந்த தேவர், சுந்தரம் | 1 | 0 | 0 |
| 15. அ. க. காயாரோகணம் பிள்ளை, முத்துப்பேட்டை | 2 | 0 | 0 |
| 16. ஆறுமுக தேவர், மறவக்காடு | 0 | 8 | 0 |
| 17. சௌந்தரராஜன், சுந்தரம் | 1 | 0 | 0 |
| 18. வெற்றிவேல் தேவர், கீழப்பெருமை | 1 | 0 | 0 |
| 19. ஜெகந்நாத தேவர், மஞ்சவயல் | 0 | 12 | 0 |
| 20. பாலையன், தம்பிக்கோட்டை | 0 | 12 | 0 |
| 21. கோவிந்த தேவர், | 1 | 0 | 0 |
| 22. மு. நித்தையன் | 0 | 8 | 0 |
| 23. பெரிய நாயக தேவர், சுந்தரம் | 0 | 11 | 6 |
| 24. வீரய்யா தேவர் | 0 | 8 | 0 |
| 25. வீரப்ப தேவர், சுந்தரம் | 0 | 8 | 0 |
| 26. நாராயணன் | 0 | 8 | 0 |
| 27. குழந்தைவேலு | 0 | 8 | 0 |
| 28. பாலையன் | 0 | 8 | 0 |
| 29. துரைசாமி தேவர் | 0 | 4 | 0 |
| 30. ராமையா தேவர் | 1 | 0 | 0 |
| 31. நாயக தேவர், கீழப்பெருமழை | 5 | 0 | 0 |
| 32. ஆர். கந்தசாமி, மறவக்காடு | 2 | 0 | 0 |
| 33. ஆர். காயாரோகண தேவர், மறவக்காடு | 3 | 0 | 0 |
| 34. குப்பையாண்டி பிள்ளை, மஞ்சவயல் | 10 | 0 | 0 |
| 35. கிருஷ்ண ஐயர், மஞ்சவயல் | 2 | 0 | 0 |
| 36. கி. ப. ராமசாமி அம்பலக்காரர், மறவக்காடு | 4 | 0 | 0 |
| 37. ஆர். கிருஷ்ணசாமி பிள்ளை, மறவக்காடு | 3 | 0 | 0 |
| 38. ஆர். சுப்பிரமணிய பிள்ளை, ,, | 5 | 0 | 0 |
| 39. டி. என். ராமலிங்க தேவர், ,, | 2 | 0 | 0 |
| 40. கே. ஷண்முக தேவர், சுந்தரம் | 3 | 0 | 0 |
| 41. பி. கே. ஷண்முகம், மங்கலூர் | 2 | 0 | 0 |
| 42. கோவிந்தராஜலு நாயுடு, முத்துப்பேட்டை | 1 | 0 | 0 |
| 43. சி. சோமசுந்தரம் செட்டியார், முத்துப்பேட்டை | 1 | 0 | 0 |
| 44. ஜெகந்நாத தேவர், சுந்தரம் | 5 | 0 | 0 |
| 45. எஸ். வெங்கட்டராமையர், உப்பூர் | 1 | 0 | 0 |
| 46. ந. பக்கிரிசாமி, மங்கலூர் | 1 | 0 | 0 |
| 47. கே. என். ஆறுமுக தேவர், நம்மங்குருச்சி | 1 | 0 | 0 |
| 48. முகையதீன் தம்பி கொய்யா, முத்துப்பேட்டை | 10 | 0 | 0 |
| 49. கே. ராஜரெத்தினம், முத்துப்பேட்டை | 2 | 0 | 0 |
| 50. த. பெ. தித்தையா தேவர், ஜாம்புவான் ஓடை | 1 | 0 | 0 |
| 51. சுல்தான் தம்பி, முத்துப்பேட்டை | 1 | 0 | 0 |
| 52. பி. நடராஜன், முத்துப்பேட்டை | 2 | 0 | 0 |
| 53. பி. சகாராம் ராவ், ,, | 1 | 0 | 0 |
| 54. கனகசபை பத்தர், ,, | 2 | 0 | 0 |
| | 134 | 15 | 6 |

நன்கொடையாளர்களுக்கு எமது நன்றி உரித்தாகுக.

ஆசிரியர், "ஜன சக்தி"

# முதலாளித்துவம் 'பாஸிஸமாக' மாறுவதெப்படி?

—[பி. ராமமூர்த்தி]—

*

பாஸிஸம் என்பது எங்கிருந்தோ திடீரென்று முளைத்ததல்ல. முதலாளித்துவத்தின் மூப்புக் காலத்தில், சமூகச் சக்திகளின் நிலைமையை அநுசரித்து, சில சந்தர்ப்பங்களில், 'பாஸிஸம்' என்கிற உருவத்தை முதலாளித்துவம் தாரணம் செய்து கொள்ளுகிறது. ஆகையால், பாஸிஸத்திற்கு மூலாதாரமாயிருக்கும் பொருளாதார தத்துவத்தை அறியவேண்டுமாயின், முதலாளித்துவத்திற்கு அஸ்திவாரமாயுள்ள பொருளாதார அமைப்பையும், முதலாளித்துவம் சரித்திர பூர்வமாகப் பெற்றிருக்கும் வளர்ச்சியையும் நன்கு அறிதல்வேண்டும்.

### முதலாளித்துவத்தின் ஆதாரம்—லாபம்

தனி உடைமை, அதாவது பொருள்களை உற்பத்தி செய்யக்கூடிய நிலம், தொழிற் சாலைகள், கனிகள் முதலியசாதனங்களெல்லாம், தனி மனிதர்களின் ஆதீனத்திற்குட்பட்ட சொத்தாய் இருப்பது, தான் முதலாளித்துவத்தின் மூலாதாரமான பொருளாதார அமைப்பு. இந்த முதலாளித்துவசமூகத்தில், பொருள்கள் உற்பத்தி செய்யப்படுவதன் நோக்கம், தனி மனிதர்களின்,—பொருள் உற்பத்தி சாதனங்களின் சொந்தக்காரர்களின்—லாபத்தைத் தவிர வேறில்லை. இதனால், லாபத்திற்காகவே பொருள்களை உற்பத்தி செய்யும் இந்த சமூகத்தில், முதலாளிகளுக்குள்ளே போட்டி ஏற்படுவது மிகவும் சகஜமாயிருக்கிறது. இந்தப் போட்டி நாளா வட்டத்தில், ஏகபோக்கிய உரிமையாகவும் மாறுகிறது. இந்த ஏகபோக்கிய உரிமைக்கும், போட்டிக்கும் இருக்கும் முரண்பாடு, முதலாளித்துவ சமூகத்திலுள்ள ஒரு விசேஷ குணம்.

### போட்டியினால் நெருக்கடி

முதலாளிகளுக்குள்ளே யுள்ள போட்டியினால், அவர்களுக்குக் கிடைக்கும் லாபமும் குறைந்து கொண்டே போகிறது. மேலும் இந்தப் போட்டியில் வெற்றி பெறுவதற்காக, பொருள்களை உற்பத்தி செய்ய ஏற்படும் சிலவைக் குறைப்பதற்காக எல்லா முயற்சியும் செய்யப்படுகின்றன. அதனால், தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்படும் கூலி குறைக்கப்படுகின்றது. இவ்வாறு தொழிலாளிகளுக்குக் கிடைக்கும் வருவாயில் துண்டு விழுமேயானால், தொழிலாளிகளுக்கிருக்கும் பொருள்களைவாங்கும் சக்திகுறைந்து விடுகிறது. அதனால், முதலாளிகள், தங்கள் சாமான்களைவிற்றுப் பணமாக்கும் சந்தை, நாளுக்கு நாள் சுருங்கிக் கொண்டே போகின்றது. இதனால்தான், சில காலம் வரை வியாபாரம் செழித்தோங்கிய பிறகு, பெரிய வியாபார மந்தம் ஏற்பட்டு, உற்பத்தியான பொருள்கள் கேட்பாரற்று சந்தையில் குவிந்து கிடக்கின்றன. இப்படிப்பட்ட நெருங்கடியான சமயத்தில், முதலாளித்துவம், வேறு மார்க்கத்தைத் தேடுகின்றது.

### இங்கிலாந்தின் ஏகபோக்யம்

19வது நூற்றாண்டின் முற்பகுதியில், முதலாளித்துவத்தின் இளமைக் காலத்தில், இங்கிலாந்திற்கு உலகம் பூராவும் பரவியுள்ள ஸாம்ராஜ்யம் இருந்தது. ஆகவே, இங்கிலாந்து, தனது இயந்திர வளர்ச்சியால் உற்பத்தி செய்யும் பொருள்களை விற்பனை செய்வதற்கு, ஏக போக்கிய உரிமையை அநுபவித்து வந்தது. முதலாளித்துவத்தின் வளர்ச்சிக்கு இடையூறாக இருந்த, நிலச்சுவான்தார்களின் ஆதிக்கமும், அதிகாரமும், தகர்த்தெறியப்பட்டன.

### வல்லரசுகள் தோன்றுதல்

ஆனால், இங்கிலாந்து அநுபவித்து வந்த இந்த ஏகபோக்கிய உரிமை நீடித்து நிற்கவில்லை. நாளாவட்டத்தில், பிரான்ஸ், ஜெர்மனி, அமெரிக்கா, ஜப்பான், முதலிய நாடுகளும், இங்கிலாந்துடன் போட்டி போட ஆரம்பித்தன. இந்த நாடுகளுக்குள்ளே ஏற்பட்ட இந்த வியாபாரப் போட்டி, அரசியல் துறையிலும் பிரதிபிம்பித்தது. மேலும், இந்த முதலாளித்துவ தேசங்களில் உள்ள முதலாளிகளுக்குள்ளேயே ஏற்பட்ட போட்டியின் காரணமாக, சிறிய சிறிய முதலாளிகள், ஒடுக்கப்பட்டனர். இதனால், பெரிய பெரிய கம்பெனிகளும், பாங்கிகளும் தோன்றி, இது வரையில் கண்டிராத பிரும்மாண்டமான தொழிற்சாலைகள் தோன்றின.

### ப்ணம் ஏற்றுமதியாகிறது

1875ஆம் ஆண்டிற்குள், உலகம் பூராவும், இந்த முதலாளித்துவம் பரவி விட்டது. இந்த முதலாளித்துவ நாடுகளின் வியாபாரிகள் தங்களுக்குள் போட்டி போட்டுக் கொண்டிருக்கும் சந்தை இல்லாத தேசம் ஒன்றுகூட உலகில் இல்லை எனலாம். இந்தப் போட்டியில், வெற்றி பெறுவதற்காக, ஒருவரை ஒருவர் நசுக்கிவிட வேண்டும் என்ற இந்த முயற்சியில், சில கம்பெனிகள் ஒன்றுக்கொன்று இணைந்து விட்டன. 19-வது நூற்றாண்டின் பிற்பகுவுயில் முதலாளித்துவம் செழித்தோங்கி நிற்கும்போது, இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய பெரிய முதலாளி தேசங்களில், முதல் ஏராளமாகக் குவிந்து விட்டது. அந்த முதலை, உள்நாட்டில் புதிய துறைகளில், புதிய வியாபாரத்திலும் தொழிலிலும், போடுவதற்குவழியில்லாமலும் போய்விட்டது. அந்த நிலையில், வெளி நாடுகளில் போய் முதலைப் போட்டு, தொழிற்சாலைகளை ஸ்தாபித்து, வியாபாரத்தை நடத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டு விடுகிறது.

### ஏகாதிபத்திய யுகம்

இந்த நிலையில் சமான்களுடன், முதலும், ஏற்றுமதி செய்யப்படுகிறது. இவ்வாறு முதலையும் சாமான்களையும் ஏற்றுமதி செய்வதற்காக சந்தைகள் தேடும் முயற்சியில் பிறப்பது ஏகாதிபத்திய யுகம். ராஜீயத் துறையில், இயந்திர வளர்ச்சியடையாத விவசாய நாடுகளை அடிமைப்படுத்தி, குடியேற்ற நாடுகளைத் தேடும் முயற்சியாகவும், உலகத்தை முதலாளி தேசங்களுக்குள் பங்கு போட்டுக்கொள்ளும் முயற்சியாகவும், தோன்றுகிறது ஏகாதிபத்தியம்.

### ஏகாதிபத்தியத்தின் குண விசேஷங்கள்

'ஏகாதிபத்தியத்தின்' முக்கியமான குணவிசேஷங்கள் என்ன? முதலாளித்துவத்தின் ஒரு புதிய ரூபம், முதலாளித்துவத்தின் வளர்ச்சியின் உச்சாணிப்படியேயாகும் ஏகாதிபத்தியம் எனக் கூறுகிறார் லெனின். முதலாளித்துவத்தின் ஜீவாதாரமான சட்டமாகிய போட்டி, நேர்விரோதமாக மாறிவிடுகிறது. "போட்டி நீங்கி, ஏக போக்கிய உரிமையை முதலாளித்துவம் அநுபவிக்கும் நிலைமையே ஏகாதிபத்தியமாகும்" எனக் கூறுகிறார் லெனின். ஏகாதிபத்தியத்தின் முக்கியமான விசேஷங்களை கீழ்க்கண்டவாறு அவர் நிர்ணயிக்கிறார்:—

1. உலகத்திலுள்ள முதல் ஒரு சிறுகோஷ்டியினரிடமே போய் குவிந்து விடுவதால், பொருளுற்பத்தியில் ஏகபோக்கிய உரிமை ஏற்பட்டு, இந்த உரிமை, உலகப் பொருளாதார வாழ்க்கையில் ஒரு முக்கிய அம்சமாய் விடுகிறது.

2. பாங்கிகளின் முதலும், தொழிற்சாலைகளின் முதலும் ஒன்றுக்கொன்று இணைந்து, பாங்கிகளின் முதலை ஆதாரமாகக் கொண்டு, ஒரு சில பாங்கர்களின் ஸர்வாதிகாரம் ஏற்பட்டு விடுகிறது.

3. குடியேற்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் முதல், மிகவும் முக்கியமான ஸ்தானத்தை பொருளாதார வாழ்கையில் அடைந்து விடுகிறது.

4. ஸர்வதேச முதலாளிகளுக்குள்ளே ஐக்கியம் ஏற்பட்டு, உலக மார்க்கட்டு, இவர்களுக்குள்ளேயே பங்கிடப்பட்டு, ஸர்வதேச முதலாளிகளின் ஏகபோக உரிமை ஏற்பட்டுவிடுகிறது.

5. உலகத்தை, பெரிய முதலாளி தேசங்கள், தங்களுக்குள்ளே பங்கு போட்டுக்கொள்ளுகின்றன.

6. முதலாளித்துவம், முற்போக்கு சக்தியாய் இருப்பதிலிருந்து சமூக வளர்ச்சியைத் தடைப்படுத்திப் பிற்போக்குச் சக்தியாய் மாறி, பச்ரம ஜீவியாய் விடுகிறது.

லெனின் கூறியது உண்மைதானா என்பதை கவனிக்கவேண்டும். கடந்த 20 வருஷங்களாக உலகத்தில் ஒவ்வொரு பொருளுத்பத்தித்துறையிலும், உற்பத்திசாதனங்கள் ஒரு சிறு கோஷ்டியிடமே போய் குவிந்து ஏகபோக்கிய உரிமை ஏற்பட்டிருப்பது நன்கு விளங்கும்.

### பாங்கர்களின் ஆதிக்கம்

பாங்குகளை எடுத்துக் கொள்வோம், "1909 ஆம் வருஷத்தின் இறுதியில், பர்லின் நகரத்திலுள்ள, 9 பெரிய பாங்குகளும், அவைகளுடன் இணைக்கப்பட்ட ஸ்தாபனங்களும், 11,30,000 கோடி மார்க்குகளின் மீது (ஜர்மன் நாணயம்) ஆதிக்கத்தைச் செலுத்தி வந்தன. அதாவது, ஜர்மனியிலுள்ள பாங்க் முதலில், 100க்கு 83, இந்த பாங்குகளின் ஆதிக்கத்திலிருந்தது."

இந்த பாங்குகள், தொழிற்சாலைகளின் மீது பெரிய ஆதிக்கத்தைச் செலுத்துகின்றன. பாங்கியிலுள்ள பணம் சும்மா பூட்டப்பட்டு வைக்கப்படுவதில்லை. தொழிற்சாலைகளிலும், வியாபாரத்திலுமே போடப்படுகின்றன. ஆனால் இந்த பாங்குகளின் மீது, இயந்திர முதலாளிகள் ஆதிக்கம் செலுத்துகின்றனர். அவைகளில், டைரெக்டர்களாக இருக்கின்றனர். இயந்திர முதலாளிகள் மேலும், பெரிய பெரிய பாங்குகளில், உள்ள பங்குகளில், பெரும்பான்மை பாகத்தின் மீது ஆதிக்கம் செலுத்துவதன் மூலம், அவைகளில்

உள்ள மூலதனத்தின்மீதும், அவைகளில் இணைக்கப்பட்டுள்ள மற்ற ஸ்தாபனங்களுடைய மூலதனத்தின் மீதும், ஆதிக்கம் செலுத்த முடிகிறது. ஹைமன் என்கிற ஜெர்மன் பொருளாதார நிபுணர் ஓரிடத்தில் கூறுகிறார்:—

"ஒரு டைரெக்டரின் ஆதினத்தில் மூலக்கம்பெனி இருக்கிறது. இந்த மூலக்கம்பெனியின் ஆதிக்கத்தில், இதன் பிள்ளைக் கம்பெனிகள் இருக்கின்றன. இந்தப் பிள்ளைக் கம்பெனிகளின் ஆதிக்கத்திலிருக்கின்றன 8 பேரப்பிள்ளை கம்பெனிகள். ஒரு டைரக்டர் ஒரு கம்பெனியில் மூலதனத்தில் பாதி அளவிற்குப் போடுவாரேயாகில், அந்தக் கம்பெனியின் நிர்வாகம் பூராவும் அவரிடமே வந்து விடுகின்றது. ஆகவே, மூலக்கம்பெனியில் பாதி பங்குகள் வைத்திருப்பதன் மூலம், "பேரப்பிள்ளைக் கம்பெனிகளிலும்" ஆதிக்கம் பெற்றுவிட முடிகின்றது.

கம்பெனிகளின் பங்குகளின் மதிப்பைக்குறைத்து, ஜனநாயக முறையை அநுஷ்டிப்பதனுல், பெரிய முதலாளிகளின் ஆதிக்கம் குறைந்து விடும் என்ற ஒரு அபிப்பிராயம் உலவி வருகிறது. ஆனுல், இது உண்மைக்கு நேர் விரோதமானது. ஒரு கம்பெனியில் சுமார் லக்ஷம் ரூபாய் பெறுமான முள்ள பங்குகள் வைத்துக் கொண்டிருக்கும் ஒரு பங்குதாரர்முன் ஐந்து ரூபாய் பெறுமானமுள்ள பங்குகளை வைத்துக்கொண்டிருப்பவர்கள் என்ன செய்யமுடியும்? ஆகவே, இவ்வாறு முதல் குவிந்து போயிருப்பவர்கள். கம்பெனிகளை ஸ்தாபித்தும், பாங்குகளை நிர்வகித்தும், முதலை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தும், ஏகபோக்ய லாபத்தைக் கறக்கிறார்கள்.

முதல்தரமான முதலாளி தேசங்களாகிய இங்கிலாந்தும், பிரான்ஸும் வெளிநாடுகளில் போட்டிருக்கும் முதல் அடியிற் கண்டவாறு அதிகரித்துக்கொண்டே வந்திருக்கிறது.

| | இங்கிலாந்து | பிரான்ஸு |
|---|---|---|
| 1862 | 3·6 | — |
| 1872 | 15 | 10 |
| 1882 | 22 | 15 |
| 1893 | 42 | 20 |
| 1902 | 62 | 27-37 |
| 1914 | 75-100 | 60 |

பாங்கு முதல் உலகப் பொருளாதாரத் துறையில் செலுத்தும் ஆதிக்கமும், வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் முதலும், மேற்கூறிய புள்ளி விவரங்களிலிருந்து நன்கு விளங்கும். லெனின் கூறிய மற்ற விஷயங்களைப்பற்றி பெரிய ஆராய்ச்சி செய்யவேண்டிய அவசியமே இல்லை. சோவியத் ரஷ்யா நீங்கலாக, உலகத்திலுள்ள மற்ற எல்லா பிரதேசங்களும், இங்கிலாந்து, பிரான்ஸு, இத்தாலி, அமெரிக்கா, ஜப்பான், ஜெர்மனி, முதலிய வல்லரசுகளுக்குள் பங்கு போடப்பட்டு விட்டன. மேலும், சீனவைப் போன்ற தேசங்களில், வல்லரசுகளுக்கு ராஜீய ஆதிக்கம் இல்லாவிடினும், பொருளாதார ஆதிக்கம் போதிய அளவிற்கு இருந்துவருகிறது. எனவே, லெனின் எழுதியது, முற்றிலும் உண்மை என்பதைப் பற்றி சந்தேகமேயில்லை. அடுத்தபடியாக, ஏகாதிபத்தியப் படியை அடைந்த இந்த முதலாளித்துவம், எப்படி பாஸிஸமாக மாறுகிறது என்பதைக் கவனிக்க வேண்டும்.

### உலக நெருக்கடி

ஏகாதிபத்தியம் அரசியல் துறையில் கையாளும் முறையை கவனிக்க இங்கு இடமில்லை. ஆனுல் ஏகாதிபத்திய நிலைமை அடைந்த பிறகு கூட, முதலாளித்துவத்தின் அடிப்படையான ஆதாரங்களில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை என்பதைக் கண்டோம். லாபம் - தனிமனிதர்களின் லாபம் - என்பதையே ஆதாரமாகக் கொண்டிருக்கிறது ஏகாதிபத்தியப் பொருளாதார அமைப்பு. போட்டி, முதலாளித்துவத்தின் கீழ் இருந்ததைக் காட்டிலும், பதின்மடங்கு அதிகரித்து, பெரிய வல்லரசுகளுக்குள்ளே ஏற்படும் போட்டியாக மாறுகிறது. குடியேற்ற நாடுகளில் உள்ள ஏகபோக உரிமை ஒரு குறிப்பிட்ட காலம் வரையில் கொள்ளை லாபம் கொடுக்கிறது. ஆனுல். இவ்வாறு ஏற்படும் லாபம், மீண்டும் முதலாக மாறி, குடியேற்ற நாடுகளுக்கே ஏற்றுமதி செய்யப்பட்டு, அந்த நாடுகளிலும் பெரிய பெரிய தொழிற்சாலைகளும், தொழில்களும் தோன்றுகின்றன. இந்தத் தொழிற்சாலைகள், தாய்நாட்டுத் தொழிற்சாலைகளுடன் போட்டி போடவும் ஆரம்பித்து விடுகின்றன. ஆகவே, உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை விற்பனை செய்வதற்காக மார்க்கட்டுகளைத் தேடிப்பிடிக்கும் முயற்சி மிகவும் மும்முரமாக நடக்கிறது. ஆனுல் இந்த மார்க்கட்டோ நாளுக்கு நாள் குன்றிக் கொண்டே போகிறது. இப்படிப்பட்ட நிலைமையில், பெரிய நெருக்கடி ஏற்பட்டு விடுகிறது. நெருக்கடியைத் தீர்ப்பதற்கு முதலாளித்துவத்தினிடம் ஒரே ஒரு மருந்து தான் உண்டு-யுத்தம். முதலாளித்துவத்தில் உலகம் பூராவையும்பாதிக்கக்கூடிய முதல் நெருக்கடியின் விளைவாக ஏற்பட்டது 1914-18 வது வருஷத்திய உலகமகாயுத்தம்.

### மகாயுத்தம் சாதித்தது என்ன?

உலகமகாயுத்தம், ஒரு நெருக்கடி செய்ய வேண்டிய திருப்பணிகளை யெல்லாம் சரிவரவே செய்தது. உலகமக்களுக்கு "வேண்டாத" அநேக பொருள்களை நாசம் செய்தது. அநேக தொழிற்சாலைகளும், பாங்குகளும், கம்பெனிகளும் 'திவால்' எடுத்தன. பூமிக்கு பாரமாயிருக்கும் கோடிக்கணக்கான மக்களை மடித்தது உலகயுத்தம். வல்லரசுகள், உலகத்தை புதிய முறையில் பங்கு போட்டுக் கொண்டன. ஆகவே முதலாளித்துவத்தில் ஏற்பட்ட நெருக்கடி தீர்ந்து மீண்டும் அது தலை தூக்கி வளர்வதற்குச் சந்தர்ப்பம் அளித்தது இந்த உலக யுத்தம். முதலாளித்துவம் எப்பொழுதுமே எதிர்பார்க்காத—கனவிலும் காணுத ஒரு புதிய விளைவும் ஏற்பட்டது இந்த மகாயுத்தத்தின் பயனுக. அதுதான் சோவியத் சோஷியலிஸ்டு ரஷ்யா. உலகத்தில் முதல் முதலில் ஏற்பட்ட இந்தசோஷியலிஸ்டு சர்க்காரினுல், உலக முதலாளித்துவமே பாதிக்கப்பட்டு வருகிறது. இன்று இயந்திர வளர்ச்சியின் காரணமாக ஏற்பட்டுள்ள உற்பத்தி முறையில் உற்பத்தி வினியோக முறைகள் தனி மனிதர்கள் கையில்—முதலாளிகள் கையில் - இருந்தால் தான் முடியும் என்பதைப் பொய்யாக்கி, சமூகத்தின் கையிலேயே இவைகளை ஒப்படைக்கலாம் என்பதை சோஷியலிஸ்டு ரஷ்யா முதல் முதலாக நிரூபித்து விட்டது. இரண்டாவதாக, உலகத்தில் ஆறில் ஒரு பங்காகிய ரஷ்ய பிரதேசம் முதலாளித்துவ மார்க்கட்டைவிட்டு அகன்றுவிட்டது. மேலும், நாளாக ஆக, முதலாளித்துவ உலகத்தில் ஏற்படும் கொந்தளிப்புகளும், நெருக்கடிகளும், சோஷியலிஸ்டு உலகத்தில் ஏற்படாது என்பதை பகிரங்கமாகக் காட்டுகிறது சோவியத் ரஷ்யா.

### மீண்டும் சுபீட்சம்

உலக மகாயுத்தத்திற்குப் பிறகு சிறிதுகாலம் வரையில் முதலாளித்துவத்தின் நெருக்கடி தீர்ந்து, அது முன்னேறத்துடங்கியது. முதலாளித்துவப் பொருற்பத்தி நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போய், வியாபாரமும் செழித்தோங்கியது. பொருளாதார 'நிபுணர்கள்' நிரந்தர சுபிக்ஷம் முதலாளித்துவ உலகில் ஏற்பட்டு விட்டதாக ஜம்மடித்துக் கொண்டனர். உலக யுத்தத்திற்குப் பின்னுல் ஏற்பட்ட இந்த 'சுபிட்சத்தின்' காரணமாய், பெரிய முதலாளி தேசங்களின் அரசியல் அமைப்பில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. ஆனுல், இத்தாலியும், ஸ்பெயினும் இதற்கு விதிவிலக்கு. யுத்தத்தின் விளைவாக இத்தாலியில் பெரிய பொருளாதார மந்தமேற்பட்டது. அதன் பொருளாதார அமைப்பே கொந்தளித்துச் சாகும் தருவாயில் இருந்தது. ஆனுல், இத்தாலியிலுள்ள முதலாளிகளும், பாங்கர்களும் இந்த நெருக்கடியில் ஒன்றுசேர்ந்து ஒத்துழைத்தார்கள். வாய்ப் பேச்சில் வல்லனுன முஸோலினி, அவர்களுக்குத் துணையாய் நின்று, பொது மக்களை ஏமாற்றி, அவர்களுக்குள்ளே பிளவுகளை உண்டுபண்ணினுன். இதனுல், இத்தாலியில் முதலாளித்துவம் நாசமடையாமல், உயிர்வாழ்வது சாத்தியமாயிற்று. அரசியல் துறையில் ஜனநாயக ஆட்சி முறை தகர்த்தெறியப்பட்டு, பாஸிஸ்டு ஸர்வாதிகாரம் தோன்றியது. ஆயினும், இத்தாலி பொருளாதாரத் துறையில் முன்னேற்றமடைய முடியாமல் தவித்துக்கொண்டே இருந்தது. ஆனுல் 1924-1929 வருஷங்களுக்கு இடையிலுள்ள ஐந்து ஆண்டுகள், உலக முதலாளித்துவத்தின் நன்னுட்களாகவே கருதவேண்டும்.

இந்த வருஷங்களில்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அமெரிக்காவின் | உற்பத்திகள் | 100க்கு | 26விகிதம் | அதிகரித்தது | |
| இங்கிலாந்தின் | ,, | ,, | 16 | ,, | ,, |
| ஜெர்மனியின் | ,, | ,, | 42 | ,, | ,, |
| பிரான்ஸின் | ,, | ,, | 27 | ,, | ,, |
| ஜப்பானின் | ,, | ,, | 42 | ,, | ,, |
| உலக வியாபாரம் | ,, | ,, | 22 | ,, | ,, |

(தொடரும்)

## சென்னை அச்சுத் தொழிலாளர் மகாநாடு

ஜூன் மாதம் நடைபெறும்.

அச்சுத் தொழிலாளர்களின் பொதுத் தேவைகளை சட்டப் பூர்வமாய் பெற வேண்டிய முயற்சி இம்மகாநாட்டில் செய்யப்படும்.

ஒவ்வொரு அச்சுத்தொழிலாளியும் மதருஸ் பிரஸ் லேபர் யூனியனில் சேர்ந்து தங்கள் தங்கள் குறைகளை மே மாதக் கடைசிக்குள் தெரியப்படுத்தவும்,

சங்கக் காரியாலயம்,
2-65, பிராட்வே, சென்னை.

பெண்ணுலகம்

# புதுமைப் பெண்

அன்புள்ள............

தேன்மலரை வண்டுநாடும். சுடுகாட்டுப் பிணத்தைக் கழுகு விரும்பும். மதியூகியாகிய நீ எனது கொள்கையை நேசிப்பாயென்று நினைத்தேன். கொள்கைக் காதலால், ஆசைக் கடிதம் எனக்குக் கிடைக்குமென்றும் எதிர்பார்த்தேன். ஆனால், எதிர்பார்த்ததில் ஏமாந்துபோனேன் என்பது மாத்திரம் உண்மை. சென்ற கடிதத்தில் "பதில் போடாவிட்டால், இனிக் கடிதம் எழுதமாட்டேன்" என்று எழுதி மிரட்டி மீன் பிடிக்க முயன்றேன். அதிலும் தோல்விதான் போலிருக்கிறது. சரி, இருக்கட்டும். உன் பேரால் எனது சகோதரிகளுக்கெல்லாம் சில உண்மைகளைச் சொல்வதற்காகவாவது சந்தர்ப்பம் கிடைக்கிறதே, அதில் எனக்குப் பரம சந்தோஷம்.

அன்பே! இந்தக் கடிதத்தையும் இனிமேல் எழுதப்போகும் கடிதங்களையும் நீ நன்றாகப் புரிந்து கொள்வதற்கு, சென்ற நாலுகடிதங்களிலும் நான் விளக்கிக் காட்டியுள்ள உண்மைகளின் ஞாபகம் அவசியம். சமர்த்தியாகிய நீ பழைய கடிதங்களைப் பத்திரப்படுத்தியிருப்பாய். அவற்றையே எடுத்து ஒரு தரத்துக்கு இரண்டுதரம் கவனமாய்ப்படி பின், கீழ்வரும் உண்மைகளை வாசிக்கத் தொடங்கு. உலக முழுவதிலுமுள்ள பெண் மக்களின் சரித்திரம், கூட அல்லது குறைய, நான முன்னால் வர்ணித்த பாதைகளில் தான் தொடர்ந்து வந்திருக்கிறது. சிறு சிறு விஷயங்களில் மாறுபாடுகளும் வேறுபாடுகளும் இருக்கலாம். ஆனால், அடிப்படையான விஷயங்களில் பேதமிருக்காது. "அண்டத்துக் குள்ளது ...ண்டத்துக்கும்" என்பார்கள். ...துபோல், உலகத்துக்குள்ளது ...ான் இந்தியாவுக்கும். இந்தி...ப் பெண்களின் சரித்திரம் ...தி விலக்கானதல்ல. எனவே, ...துவரையில் நான் கூறி வந்தி...க்கும் உண்மைகளையெல்லாம் ...யாக வைத்துக் கொண்டு, ...தியப் பெண்களின் அந்தஸ்...யும், அபிலாஷைகளையும், ...ரிக்கைகளையும் ஆராய்ந்து, ...க்குச் சொல்ல விரும்புகி...ன்.

...கண்மணியான பெண்மணி! ...று இந்தியாவில் நடந்து ...ம் மாதர் இயக்கம் மற்ற ...களில் நடந்து வருவது போல் பணக்காரவீட்டுப் பெண்களின் ஆதிக்கத்திலேயே நடந்து வருகிறது: ஆகையால் இந்த இயக்கம் தற்கால சமூக அமைப்பைத் தலைகீழாக மாற்றுகிற லட்சியமுடையதாயில்லை. இந்த அமைப்பைவைத்துக் கொண்டே சில சீர்திருத்தங்கள் வேண்டுமென்று மாத்திரமே விரும்புகிறது. எனவே, இந்த இயக்கத்தின் தன்மையும் சாயலும், முதலாளி வீட்டுப் பெண்களின் பிரச்னைகளையும் அவசியங்களையும் படம் பிடிப்பதாகவே யிருக்கின்றன. பெருவாரியான பெண்மக்களின் கோரிக்கைகளையும் பிரச்னைகளையும் சரியாகத் தாங்கி நிற்கவில்லை. இதனால் மாதிரியக்கத்தின் வளர்ச்சி கட்டுப்படுத்தப் படுகிறது., சில விஷயங்களில் உண்மையைவிடக் கற்பனையே ஜாஸ்தியாகத் தாண்டவமாடுகிறது. இவ்வளவுமிருந்தபோதிலும், மாதரியக்கத்திற்குப் போதுமான அஸ்திவாரம் இருக்கிறதென்பதை யாராலும் மறுக்க முடியாது. அஸ்திவாரம் பெண்-ஆண் பிரிவைப் பார்க்கினும்

## ஜீவாவின் கடிதம்—5

விசாலமானதாயிருந்தபோதிலும், மாதரியக்கத்திற்கான அடிப்படையும் ஆதாரமும் அவசியமும் மாத்திரம் ஆக்ஷேபிக்க முடியாதவை. தேசத்தின் அரசியல், பொருளாதார நிலைமைகள், இந்த இயக்கத்தின் நிலைமையையும் செல்வாக்கையும் வெகுதூரம் பாதிக்கிறது. இவ்வுண்மையை மாதரியக்கத்தைச் சேர்ந்தவர்கள்-பெண் மக்களுக்காகப் பாடுகிறவர்கள்—சில சந்தர்ப்பங்களில் அலட்சியப்படுத்தி விடுகிறார்கள். அன்பே! இதனை நீ கூர்ந்து கவனித்து ஆழ்ந்து சிந்தித்துப் பார்ப்பாயாக உனது சகோதரிகளில் பலர்க்கு மேற்கூறிய அபிப்பிராயங்கள் சாதாரணமாக விளங்குவது கொஞ்சம் கஷ்டந்தான். ஆனால், விஷய ஞானமுள்ள உனக்கு அவை எளிதில் விளங்குமென்றே நம்புகிறேன். நிற்க,

இந்தியாவில் மேல் வகுப்புப் பெண்களைவிட, தொழிலாளி வர்க்கப் பெண்கள்தான் அதிகப்படியான சுதந்திரமுடையவர்களாயிருக்கிறார்கள். பட்டணங்களில் பார்த்தாலும் சரி, பட்டித் தொட்டிகளில் பார்த்தாலும்சரி, சுயேச்சையும் விடுதலையும் தாராளமாகக் கொண்டவர்கள் பாட்டாளி வீட்டுப் பெண்கள்தான். குடியானவர்கள் வீட்டில், பெண்களும் பாடுபட்டுச் சம்பாதிக்கிறார்கள். அதனால் அவர்களுக்கு அதிகமான சுயேச்சையுண்டு. பொருளாதாரக் கஷ்டம் இந்த வர்க்கத்தை, சமூக சம்பிரதாயங்களில் வரட்டுப் பிடிவாதம் காட்டுவதிலிருந்து தளர்த்திவிடுகிறது. காசு சுருங்குகிற பொழுது, கண்ணே! பொதுவாகக் கட்டுப்பாட்டின் அட்டகாசமும் கம்மிப்படுவது சகஜம் தான்......இதற்கு ஓர் உதாரணம் கொடுக்கிறேன். மேல் வகுப்பாரிடம் விவாகரத்தைப் பற்றியோ, விதவைகளின் மறுமணத்தைப் பற்றியோ வாயெடுத்தால், தலை பிழைப்பதே தம்பிரான் புண்ணியமாகிவிடும். "ஜாதிபோச்சு, மதம் போச்சு" என்று விண்ணுக்கும் மண்ணுக்குமாகக் குதிப்பார்கள். "ஆசாரஹீனனைச் சும்மா விடுவதா?" என்று உருட்டி மிரட்டுவார்கள். அவ்வளவு கடுமையாக அவர்களால் மேற்கூறிய காரியங்கள் வெறுக்கப்படும். ஆனால், இதே விவாகரத்தும் மறுமணமும் பாட்டாளி மக்களிடையில் சர்வ சாதாரண சம்பிரதாயமாகக் காணக்கிடைக்கின்றன. இதே மாதிரிதான் குழந்தை மணத்திலும் கோஷா முறையிலும். ஏழை மக்கள் "அன்ன விசாரம், அதுவே விசாரமாக" இருக்கிறார்கள். அவர்களுக்குக் கும்பிக்கு இரை தேடுவதே பெரும்பாடாக இருக்கிறது. ஆகையால் உணவுப் பிரச்னை, எளிய பெண் மக்களை அந்தப்புரமென்னும் இருட்குகைகளிலிருந்து ரக்ஷிக்கிறது. பலதார மணமிருக்கிறதே, அது ஏழையின் வழக்கத்திற்கு ஒத்துக் கொள்வதைவிட, பணக்காரனின் போகானுபவத்திற்கே ஒத்துக்கொள்வதாயிருக்கிறது. பல தாரங்களின் பொறுப்பைச் சுமக்க, ஓர் ஏழையால் சாமான்யமாக முடியாது. ஆனால் பழக்க வழக்கங்களையும் விதிவிலக்குகளையும், பணக்கார வர்க்கத்தாரிடமிருந்து இரவல் வாங்கிக் கொள்ளும் பழக்கம் இன்னும் அமுலில் இருந்து வருகிறது. ஓர் சாதாரணக் குடும்பம் செல்வச் செழிப்படைந்தால், அக்குடும்பத்துப் பெண்களும் பழைய சுயேச்சையை இழந்து, மேல் வகுப்புப் பெண்களைப்போல் கட்டுப்பாட்டுக்குள்ளாக நேரும். இவ்வாறு, இந்துக்களிடையில் கோஷா வழக்கமே தெரியாதிருந்த தென்னிந்தியாவில், இன்று, மகாராஜாக்கள், ஜமீன்தார்கள் ஆகியவர்களுடைய குடும்பங்களில் அவ்வழக்கம் மிகக் கடுமையாக அனுஷ்டிக்கப் படுகிறது. இது குடும்பத்தின் அந்தஸ்தை எடுத்துக் காட்டுவதாம். வர்க்கத்தின் உயர்வுக்குத் தக்கவாறு ப...தா முறையின் அனுஷ்டானமும் கடுமையாக வேண்டுமாம். அன்பே! இந்த வழக்கம்தான் பொம்மைக் கல்யாணம் (இளமை மணம்) இந்த ஜாதி, இந்த வர்க்க மென்றில்லாமல் இவ்வளவு விரிவாகப் பரவ நேர்ந்த தென்பதை நீ அறியக் கடவாய்.

விஷயத்தை மேற் கொண்டு தொடர நேரமில்லை. ஒரு வாரமாகக் காங்கிரஸ் பிரசாரத்தின் பொருட்டு வெளியூர்களுக்குச் சென்று விட்டு, முந்தா நாள் தான் ஊர்வந்து சேர்ந்தேன். சுற்றுப் பிரயாணத்தில் கடுமையான ஜுரம். சாப்பாடு இல்லை. அதோடு இடைவிடாத பிரசாரம். அப்படியானால் உடம்பு எப்படியிருக்கு மென்று நீயே ஊகித்துக் கொள். ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போய் நோயாளியாகப் பதிந்து கொள்ளலாமென்று தீர்மானித்தேன். அந்த சந்தர்ப்பத்தில் "ஜன சக்தி" ஆசிரியர் ...ந்தவாரம் 'மேதின' மலர் வெளியிடப் போவதாகவும் 40 பக்கங்கள் கொண்டதாயிருக்குமென்றும், ஆகவே, எவ்வளவு| மொழி பெயர்ப்புகளும் அசல் கட்டுரைகளும் தரமுடியுமோ அவ்வளவையும் நாளை மாலைக்குள் கொடுத்துவிட வேண்டுமென்றும், குறைந்தது 10 பக்கங்களுக்காவது விஷயதானம் செய்ய வேண்டுமென்றும் ஆர்டர் பிறப்பித்துவிட்டார். அவரோ விடாக்கண்டர். இரண்டு தினங்களாக அந்த வேலையில்தான் இடுப்பு ஒடிந்து கொண்டிருக்கிறது. ஆயினும் உன்னை மறக்க முடியவில்லை. இக்கடிதத்தை எழுதினேன். பிறபின்.

H. V. காமத் என்பவர் மத்திய மாகாணத்தில் கடந்த 7 வருஷங்களாக ஒரு ஐ. ஸீ. எஸ். உத்தியோகஸ்தர். ஐ. ஸீ. எஸ். உத்தியோகத்தில் உள்ள எந்த இந்தியனுக்கும் தேசத் தொண்டு ஆற்றுவதற்கு சந்தர்ப்பம் கிடைப்பதில்லை. உயிரற்ற வாழ்க்கையையே நடத்த வேண்டியிருக்கிறது. ஸ்ரீமான் காமத்து துடிதுடிக்கும் ஒரு வாலிபர். மக்களுக்குத் தொண்டாற்ற வேண்டுமென அவருக்கு அபாரமான ஆர்வமிருந்தது. ஆகவே, சர்க்கார் சேவையில் வெறுப்பு ஏற்படுவதும் சகஜம்தானே? எனவே, இந்த உத்தியோகத்தை உதறித் தள்ளிவிட்டார் சென்ற ஜனவரி மாதம். 26வயன்று—புனிதமான சுதந்திர தினத்தன்று—தன் ராஜீனாமாவை இந்தியா மந்திரிக்கு அனுப்பிவிட்டார். அவருடைய ராஜீனாமாவும் ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டது. சர்க்கார் உத்தியோகத் தளைகளிலிருந்து விடுபட்டு, தேச சேவையில் குதித்திருக்கும் ஸ்ரீமான் காமத், அரும்பெரும் சேவை செய்து, ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் தீவிரப் பங்கெடுத்துக் கொள்ளுவார் என எதிர்பார்க்கிறோம்.

[பத்திரிகை நிருபர்களிடம் அவர் கூறிய செய்திகளின் சில பகுதிகளை அடியில் கொடுக்கிறோம். ப-ர்.]



எச். வி. காமத்

# வேண்டாம்! இந்த ஐ.ஸி.எஸ். உத்தியோகம்!

### வெள்ளைநிறம் கருப்பைவிட மேம்பட்டதாம்

சர்க்கார் உத்தியோகத்திலுள்ள ஐரோப்பியர்களுக்குத் தனி உரிமைகள் உண்டு. தலைகால் தெரியாமல் எதேச்சாதிகாரமாய் அவர்கள் நடந்து கொள்ளலாம். அலக்ஷியமாகச் சிறிதும் கவலையின்றி, பெரிய பெரிய குற்றங்களை அவர்கள் செய்யலாம். ஆனால், இந்திய உத்தியோகஸ்தர்களின் நிலை அவ்வாறு இல்லை. சிறிய சிறிய தவறுகளுக்காகவும். அவர்கள் கண்டிக்கப்படுவார்கள். வெள்ளைத்தோல் எத்தனையோ பாவங்களை மறைக்க வல்லது!

ஒரே ஒரு உதாரணத்தை இங்கு குறிப்பிடுகிறேன் 3 வருஷங்களுக்கு முன் ஒரு ஐரோப்பிய ஆபீசர், 'நஜாத்'திலிருந்து (சர்க்கார் காரியாலயம்) சில வெள்ளிசாமான்களை அகற்றிவிட்டார். நான் பெரிய சட்ட நிபுணனல்ல. ஆயினும், இந்த வெள்ளையதிகாரியின் நடத்தை சர்க்கார் சொத்தை அபகரிப்பது; அல்லது திருடுவது அல்ல என நான் திட்டமாகக் கூற முடியாது. ஆனால், இந்த ஸிவில் ஸர்விஸின் ஒழுக்க முறை விதிகளோ ஸர்வசிரேஷ்டமானவை. இந்த அதிகாரி இன்றுவரை யாதொரு தண்டனையும் விதிக்கப்படாமல் உல்லாசமாகவே இருக்கிறார். இந்த விஷயம் மேலதிகாரிக்கு அறிவிக்கப்பட்டது. ஆனால், துரதிருஷ்டவசமாக அவரும் ஒரு ஐரோப்பியர். அந்த வெள்ளிச் சாமான்களைக் கணக்குப் புஸ்தகங்களிலிருந்து அகற்றிவிடுமாறு அவர் உத்திரவு போட்டுவிட்டார்.

ஆங்கிலப் பேராசிரியர், லஸ்கி ஓரிடத்தில் கூறியது எனக்கு இந்த சமயத்தில் ஞாபகம் வருகிறது.

"ஒரு பாங்கியிலுள்ள குமாஸ்தா செய்துவிட்டால், அது மோசடியாகும். அதே கார்யத்தை ஒரு கோடீச்வரன் செய்தால், அது சாதுர்யமான, நிதிப்பெருக்காகும்."

### ஊழல்-யாரிடத்தில்?

சுமார் 2 வருஷங்களுக்குமுன் ஒரு டிபுடி கமிஷ்னர் ஒரு பிரசங்கம் செய்தார். வெள்ளையதிகாரிகள், தங்களுடைய இந்திய சகபாடிகளிடம் கொண்டுள்ள மனப்பான்மையை அந்தப் பிரசங்கம் அப்படியே பளிங்கு போல் காட்டுகின்றன.

"நான் இங்கிலீஷ் ஜாதியில் பிறந்தேன் என்பதற்காக, மிகவும் கர்வம் அடைகிறேன். என்னை போன்று, சம்பளம் வாங்கும், ஐரோப்பிய அதிகாரிகள் இருந்தாலன்றி, கீழ்தர இந்திய உத்தியோகஸ்தர்களிடம் நிலவி வரும் லஞ்சத்தையும், ஊழலையும் ஒழிக்க முடியாது" எனக் கூறினர் அந்தப் பிரசங்கத்தில்,

ஒரு ஐரோப்பிய அதிகாரி, லஞ்சத்தையும் ஊழலையும் ஒழிப்பதாகக் கூறுகிறார். ஆனால், மற்றொருவரோ, சர்க்கார் சொத்தை, தன் சொந்த சாமான்களுடன் சேர்த்து சுருட்டி மூட்டை கட்டுகிறார்! ஐயோ! கடவுளே!

### பாக்கியைச் சீழே வை!

வரிச்சுமை, மிகவும் தாங்க முடியாத அளவிற்கு இருந்த இந்த மாகாணத்தின் ஒரு பிரதேசத்தில், பனியினால் பயிர்கள் பாழடைந்து விட்டன. பயிர்களை புள்ளி போட்டு, நஷ்டத்தை அநுமானிக்கும் வரை, தக்கவி பாக்கிகளை வசூலிக்காமல் நிறுத்தி வைத்திருந்தேன். ஆனால், எனக்கு மேலதிகாரியான ஐரோப்பிய அதிகாரிக்கு இது ஒன்றும் பிடிக்கவில்லை. தக்கவிபாக்கிகளை 'ஜரூராக' வசூலிக்க வேண்டுமென, கண்டிப்பான உத்தரவு பிறந்தது ஏன்? இது சர்க்காரின் வருமானப் பிரச்சினை யல்லவா? பிரிட்டிஷாரின் ஜேப்பியிலேயே் கையைப் போட்டுவிட்டதே இது! இந்தியாவின் வறுமை இங்கிலாந்தின் சுபீக்ஷமாகும்.

மூன்று மாதங்களுக்கு முந்தி கூட உண்மையாகவே கஷ்டப்பட்டும் ஏற்பட்டிருந்த சில சந்தர்ப்பங்களில் தக்கவி பாக்கிக்காக நிலங்களை விற்பனை செய்வதை நிறுத்திவைக்க விரும்பினேன். ஆனால் அப்படிப்பட்ட ஒவ்வொரு தனிப்பட்ட கேஸும் டிபுடி கமிஷனரிடம் அனுப்ப வேண்டுமென உத்தரவு கிடைத்தது. இதற்குக் காரணம் தெரியுமா? மிக மிகக் குறைவான நிலத்தையுடைய ஒரு ரையத்தின், ஒரு, சிறிய தக்கவி பாக்கியை, கொடுபடாத பாக்கியென்று தள்ளுபடி செய்ய வேண்டுமென நான் சிபாரிசு செய்ததுதான் இதற்குக் காரணம். அம்மம்மா! பிரிடிஷ் சர்க்காருக்குக் கொடுபட வேண்டிய பாக்கியில், ஒரு அம்மன் காசு கூடக் குறையலாமா? ஸாம்ராஜ்யமே இடிந்து விடாதா? வானம் இடிந்து விழாதா? உடனே தாக்கீது பிறந்தது தக்கவி பாக்கிகள் சிறுகச் சிறுக, வருஷா வருஷம் வசூல் செய்யப்பட வேண்டுமென்று. யாரிடத்திலிருந்து தெரியுமா? ஏழைக் குடியானவனிடமிருந்து. பாவம் அவன் உயிர்வாழ்வதே அரிதாயிருக்கிறதே? நாகரீக, நல் வாழ்வைப்பற்றிய பேச்சே எதற்கு?

### பேடன் பவல் சாரணர் இயக்கம் காதிபத்திய ஸ்தாபனம்

நான் பேடன் பவல் சாரணர் இயக்கத்திலிருந்து ஒரு வருஷத்திற்கு முன் ராஜீனாமா செய்த போது, சர்க்காரின் பிரதம காரியதரிசி—ஒரு ஐரோப்பியர்—நான் ராஜீனாமா செய்த சந்தர்ப்பங்களைப் பற்றி கவலையுடன் விசாரணை செய்தார். ஒரு இந்திய உத்தியோகஸ்தர் கூறினார்:—

"பேடன் பவல் சாரணர் அஸோஸியேஷன் ஒரு ஏகாதிபத்திய ஸ்தாபனமாகும். நானோ ஒரு ஏகாதிபத்திய ஊழியன். ஆகவே, என் ராஜீநாமா ஏகாதிபத்திய—எதிர்ப்பாகவே கருதப்படும்."

* * *

### காங்கிரஸ் மந்திரி சபையினால் நிலைமை மாறிவிட்டதா?

காங்கிரஸ் இப்பொழுது பதவியிலிருப்பதால் நான் ராஜீனாமா செய்வதில் அர்த்தமேயில்லை என வாதிக்கப்பட்டது. சிறிது கூட தடையின்றி, பரிபூர்ணமாக, காங்கிரஸின் ஆட்சியில் ஊழியம் செய்ய முடிந்தால். நான் அளவுகடந்த ஆனந்தத்துடன் செய்திருப்பேன். ஆனால் நான் இரண்டு எஜமானர்களின் கீழ் வேலை செய்ய வேண்டியிருந்தது. அந்த நிலைமையில், காங்கிரஸ் ராஜ்யத்திற்கு பூரண ஒத்துழைப்பைக் கொடுப்பதென்பது முடியாத விஷயம்.

* * *

### பிரிட்டிஷ் ஆதிக்கம் ஒழிக!

உத்தியோகஸ்தனாயிருந்தாலும் சரி, சாதாரண பாமர மக்களுள் ஒருவனாயினும் சரி, பணக்காரனாயினும் சரி, ஏழையாயினும் சரி, பிரிட்டிஷ ஆட்சி முறை நீடித்திருக்கும்வரை எந்த இந்தியனுக்கும் நியாயமும், சுதந்திரமும் இருக்க முடியாது. அந்த பிரிட்டிஷ் ஆதிக்கத்தை அழிப்பதற்காக, நாம் அனைவரும், நமது திறமைக்குத் தக்கவாறு முயற்சி செய்வதே நமது வேலை மற்றவையெல்லாம் வீண் ஜம்பம், வெறும் பைத்தியக்காரத்தனமாகும்.

# சோவியத் ரஷ்யாவில் சோஷியலிஸத்தின் வெற்றி

—(கே. முருகேசன்)—

1917-ம் வருஷம் அக்டோபர் மாதம் ரஷ்யாவில் நடந்த பெரிய சோஷியலிஸ்டு புரட்சியில் உண்டான வெற்றியே, சர்வதேச தொழிலாளர்களின் முதல் வெற்றி என்று சொல்லலாம். இன்று சோவியத் ரஷ்யாவில் முதலாளித்வத்தையே அடியோடு ஒழித்த சோஷியலிஸத்தின் வெற்றி, சர்வதேச தொழிலாளர்களின் இரண்டாவது பெரிய வெற்றி என்றே சொல்ல வேண்டும்.

சோவியத் ரஷ்யாவில் சோஷியலிஸம் வெற்றிபெற்றதானது, உலக தொழிலாளர்களின் புரட்சிக்கோட்டையை பொருளாதார துறையிலும் அரசியல் துறையிலும் பலப்படுத்திக்கொண்டே போவதற்கு பேருதவியாக இருக்கிறது. அதோடு, உலகத்திலுள்ள சக்திகள் சோஷியலிஸத்திற்கு சாதகமாய் இருப்பதையும் முதலாளித்வத்திற்கு பாதகமாய் இருப்பதையும், இந்த சக்திகளே சர்வதேச தொழிலாளர்களின் புரட்சி வெற்றிக்கு ஆரம்பமென்று சோஷியலிஸ வெற்றி எடுத்துக் காட்டுகிறது. சோவியத் யூனியனிலுள்ள கம்யூனிஸ்டுக் கக்ஷியின் தலைமைப் பதவியின் கீழ் உள்ள தொழிலாளர்கள், கூட்டு பண்ணை விவசாயிகள் அனைவரும் "லெனினிஸ்டு முத்ய கமிட்டியாரின், தோழர் ஸ்டாலின் உலக தொழிலாளர்களின் ஜரூரான உதவியினால், அக்டோபர் புரட்சியின் பலனாகப் பிறந்த மூன்றாவது கம்யூனிஸ்டு இன்டர்நாஷனலின் வெற்றியையும், அதன் திட்டம், போக்கு, சாமர்த்தியம் இவைகளின் வெற்றியை உலகத்திற்கு எடுத்துக்காட்டுகிறார்கள்.

## சோஷியலிஸ்டு நாட்டின் புதிய வாழ்க்கை

உலக சரித்திரத்திலேயே, முதன் முதலாக மனிதன் மனிதனாக வாழ ஆரம்பித்தது சோவியத் ரஷ்யாவில்தான். மற்ற தேசங்களில் வாழும் மக்களுக்கு சோவியத் ரஷ்யா, சோவியத் ஆட்சியில்தான் மக்கள் மக்களாக முடியுமென்பதை எடுத்துக் காட்டுகிறது. சோஷியலிஸம் மனிதனுக்காக இருக்கிறது. மனிதனே சோஷியலிஸ வழிகாட்டியாய் இருக்கிறான். 1917-ம் வருடம் அக்டோபர் மாதம் ரஷ்யாவில் ஏற்பட்ட புரட்சியின் பலனாக முதலாளித்வத்தை குழி தோண்டி புதைத்துவிட்டு, சென்ற 20 வருடங்களாக சோஷியலிஸத்தை கட்டி வருகின்றனர்.

சோஷியலிஸம் என்பது வறுமையும் தனிவுடமைத் திட்டத்தையும் வறுமையையும் இல்லாமையையும் அடியோடு ஒழித்து, ஜனசமூகமே பொதுவுடமைத் திட்டத்தை கையாண்டு இன்பகரமாக வாழ்வது என்பதை சோவியத் ரஷ்யா உலகத்திற்கு எடுத்துக் காட்டி வருகிறது. சோவியத் ரஷ்யாவில்தான் மக்கள் அனைவருக்கும் சாப்பாட்டிற்கு முழு உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது என்பதோடு எல்லோருக்கும் வேலையும் இருக்கிறது. இன்று ரஷ்யாவில்தான், எந்த முதலாளித்வ நாடுகளிலும் எப்பொழுதும் நாம் எதிர்பார்க்க முடியாதபடி மக்களின் வாழ்க்கை நிலை மிகவும் உயர்ந்திருக்கிறது. முதலாளித்வம், பல நூற்றாண்டுகளாக இந்த பிரச்சினையை தீர்க்கவில்லை. ஆனால் 20 வருஷங்களுக்குள் சோஷியலிஸத்தைக் கைக்கொண்ட சோவியத் சர்க்கார் மக்களுக்கு செய்திருக்கும் மேலான காரியங்களை, சரித்திரத்தில் எந்த விஷயத்தோடும் ஒப்பிட்டு கூறவே முடியாது. சோஷியலிஸ்டு நாட்டின் மக்களது இன்பகரமான வாழ்க்கையானது, ஒரு தனி நபரின் வேலைப்பாடாலல்ல. சோவியத் ரஷ்யாவில் மக்களின் இன்பகரமான வாழ்க்கை, சில சோம்பேரிகள் சொல்வதுபோல் 'அதிர்ஷ்டத்தை' பொருத்திருக்கவில்லை. ரஷ்யமக்கள் ஒவ்வொருவரும் ஒன்று சேர்ந்து கூட்டுறவில் உழைத்து இன்பத்தை அடைகிறார்கள். இன்று ரஷ்ய மக்களின் நிலைமைகள் உயர்ந்திருப்பதற்குக் காரணம் சோஷியலிஸத்தின் வெற்றியினால்தான் என்பதை உலகத்திற்கு ரஷ்யா எடுத்துக் காட்டுகிறது.



V. I. லெனின்

சோவியத் ரஷ்யாவில் வேலையில்லாத் திண்டாட்டம் மருந்துக்குக் கூட இல்லை. வேலையில்லாத் திண்டாட்டம் அங்கு தலைகாட்ட இடமேயில்லை. சோவியத் ரஷ்யாவில் தொழிலாளர்கள் சம்பளம் 5, 6 மடங்கு அதிகரிக்கிறது.

சோவியத் ரஷ்யாவில் வேலை நேரம் 6 மணிக்குக் குறைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் முதலாளித்வ நாடுகளிலெல்லாம் தொழிலாளர் சம்பளம் பாதாளத்தில் இருக்கிறது; அதோடு வேலை நேரம் 8 மணி முதல் ஓர் எல்லையில்லாத அளவிற்கு உயர்ந்திருக்கிறது. ரஷ்ய நாடு விவசாய நெருக்கடியை காண்பதில்லை. நிலத்தின் எல்லைக்கோட்டில் எவனாவது கைவைத்தானென்றோ, சரியாக கோதுமை கண்டு முதலாகவில்லை என்றோ, போதுமான நிலமில்லை என்றோ, விதை வேண்டிய அளவு இல்லை என்றோ! சோவியத் ரஷ்ய விவசாயிகள் கொஞ்சங்கூட கவலைப்பட இடமே இல்லாதிருக்கிறது. குடியானவர்களை இதர நாடுகளில் விலங்கிட்டு கேஸ் நடத்தி அவர்கள் சொத்துகளை ஜப்தி பண்ணும் கொடுமை, அவர்களை ஜெயிலில் அடைக்கும் கொடுமை முதலியவைகளை ரஷ்யாவில் பார்க்கவே முடியாது.

ரஷ்யாவில்தான் கல்வி உலகத்திலேகிய முதன்மை ஸ்தானம் வகித்திருக்கிறது. சார் காலத்தில் விவசாயப் பெண்மணிகள் எப்பொழுது பார்த்தாலும், அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகவேவே இருந்தார்கள். வயலிலேயே குழந்தைகளைப்பெற்று பசியிலும் பிணியிலும் வாழ்ந்து வந்தனர். ஆனால், இன்று சோஷியலிஸ ஆட்சியில் ரஷ்ய கூட்டுப் பண்ணையில் விவசாய பெண்கள் உழைப்பதால், பழைய 'சனியன்களை' தரிசிக்காது, இன்பகரமாக வாழ்கிறார்கள். சோஷியலிஸ்டு ஆட்சியில் சம்பந்தத்தோடு பிரசவ பெண்களுக்கு, பிரசவ்ம் ஆவதற்கு 2 மாதத்திற்கு முன்னும், பிரசவம் ஆன பிறகு 2 மாத லீவ் வசதியும் கொடுக்கப் பட்டு வருகிறது. பெண்மணிகள் கூட்டுப்பண்ணை மானேஜர்களாக தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அதோடு கிராம சோவியத்துகளுக்கும், ஜில்லா சோவியத்துகளின் நிர்வாகக் கமிட்டிகளுக்கும், மாகாண கமிட்டிகளுக்கும் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். கணக்கற்ற பெண்களுக்கு 'ஆடர் ஆப் லெனின்' கொடுக்கப்பட்டிருக்கிறது.

ரஷ்யாவில்தான்பெண்களுக்கு சமூகத்தில் உண்மையாகவே ஆண்களைப் போலவே சம உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. எந்தவிதத்திலும் பெண்களை எவரும் இழிவாகவோ, கேவலமாகவோ நடத்தவேமுடியாத ஓர் நிலைமை நிலவி இருக்கிறது. ஒருவரை ஒருவர் அடிமைப்படுத்தாது, சுதந்திரத்தோடு அனைவரும் வாழ்ந்துவரும் முறையைக்கொண்டதே சோஷியலிஸம் என்பது நன்கு சோவியத் ரஷ்யாவிலிருந்து தெரிகிறது. ரஷ்யாவில் பெண்மக்கள் பொதுவுடமையாக்கப் பட்டிருக்கிறார்கள் என்று சில விஷமிகள் கூறுவது முழுப்பொய் அல்லவா?

ரஷ்ய தேசத்துக் குழந்தைகள் பெற்றோரிடம் பெறும் அன்பு, கவனம் முதலியவைகளை முதலாளித்வ நாடுகளில் அதுபோல பெறவே முடியாது. எந்த குழந்தையும் அதனதன் 'தலையெழுத்து'ப்படிதான் நடக்கும் என்று கைவிடப்படுவதே ரஷ்யாவில் இல்லை. ஏனெனில் சர்க்காரும், சமூகமும் குழந்தை வளர்க்குமிடங்களை ஏற்படுத்தி குழந்தைகளை வளர்த்து வருகின்றனர்.

ரஷ்யாவில் சோஷியலிஸத்தால் ஏற்பட்டுள்ள நன்மைகள் எல்லாவற்றையும் சொல்ல இந்த வெற்றிகள் பெரிதாய் இருந்தாலும் இவைகளைக் கண்டு ரஷ்ய மக்கள் திருப்தி அடைந்துவிடவில்லையாம். ஏற்கனவே சார் சக்ரவர்த்தி காலத்தில் இருந்த நிலைமையோடு, இன்று சோவியத் ஆட்சியிலுள்ள நிலைமையை ஒப்பிட்டுப் பார்த்து சந்தோஷப்படுவதோடு நின்றுவிடவில்லை. இன்னும் அதிகப்படியான சுகத்தை அடைய தொழிலாளர்கள், கூட்டுப்பண்ணை குடியானவர்கள், விருப்புகிறார்கள். அதோடு முதலாளித்வ நாடுகளில் மக்கள் குடிசை வீடுகளில் வாழ்வதையும் வேலையில்லாத் திண்டாட்ட கொடுமைக்களாகி மக்கள் தற்கொலை செய்து கொள்வதையும் திண்டாடி தெருவில் நிற்பதையும், வயிற்றுக்கு போதாத கூலியைப் பெற்று மக்கள் கஷ்டப்படுவதையும், திடீர் திடீரென்று நெருக்கடியின் பெயரால் ஆயிரக் கணக்கான மக்கள் வேலையை விட்டு தள்ளப்படும் கொடுமையையும், மக்கள் உலக சுகபோகங்களை அடைய வசதியே இல்லாதபடி செய்துவரும் முதலாளித்வத்தையும், இதைப் படைத்துக்காக்கும் ஏகாதிபத்யத்தையும்—பாஸிஸத்தையும், ரஷ்ய மக்கள், அடியோடு ஒழித்து சோவியத் ஆட்சியை ஆங்காங்கு ஏற்படுத்தி, உலகிலுள்ளோர் சுத்தமாகவும், சுகமாகவும் சகல வசதிகளையும் பெற்று வாழ வேண்டுமென விரும்புகிறார்கள். ஓர் மனிதர்கூட, ஓர் மனுஷிகூட உலக வாழ்க்கையைக் கண்டு வெறுப்பு அடையாது, வாழ்க்கையில் சந்தோஷமடைய வேண்டுமென ரஷ்ய மக்கள் விரும்புகிறார்கள். இதை சாதிக்கவே, இனி ஏற்படும் உலக தொழிலாளர்களின் புரட்சியில் ரஷ்ய மக்கள் முக்கிய பங்கெடுத்துக் கொள்வோமென கர்ஜிக்கின்றனர்.

முதலாளித்வம் ஒரு வேளை சோவியத் ரஷ்யாவில் தலை காட்டினாலும் காட்டலாம் என்று முன் சில விஷமிகள் பேசிய பேச்சுகளையே இன்று யாராவது சொல்வார்களானால், அது உள்ளதை மறைத்து கூறும் விஷயமாகவே நாம் கருத வேண்டும். உண்மையான ஜனநாயகம், புராலிடேரியன் ஜன நாயகம், சோஷியலிஸ்டு ஜனநாயகம் ரஷ்யாவில் தான் இருக்கிறது. இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய நாடுகளில் ஜனநாயகம் இல்லையா என்று யாராவது கேட்க முன் வந்து விடாதீர்கள்?

அதைத்தான் பூர்ஷ்வா ஜனநாயகம் என்று சோஷியலிஸ்டுகள், கம்யூனிஸ்டுகள் கூறுகிறார்கள். அதாவது விரல்விட்டு எண்ணக்கூடிய சில பூர்ஷ்வாக்கள் 'ஜனநாயகம்' என்ற போர்வையை போர்த்திக்கொண்டு அந்நாடுகளிலுள்ள மக்களை வறுமையிலும்—இல்லாமையிலும் வருந்தி வாடச்செய்து, மக்களை சுரண்டி ஆட்சி நடத்திவரும் கேவலக் கூத்துதான்.

உலகத்தில் மூன்றில் ஓர் பாகம் பிரிட்டிஷ் சாம்ராஜயமாம்! அட்லாண்டிக், பசபிக், ஆர்டிக், இந்துமகா சமுத்திரம் ஆக நான்கு சமுத்திரங்களும் பிரிட்டிஷ் சாம்ராஜயத்தின் கரைகளில் அலை அடித்துக்கொண்டே இருக்கின்றன. 50 கோடி மக்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின்கீழ் இருக்கிறார்கள். கப்பற்படை நினைத்த விடங்களிலெல்லாம் 'பாதுகாப்பிற்காக' வைத்திருக்கிறார்களாம்! கடல் மார்க்கங்கள், ஜல சந்திகள் எல்லாம் ஏகாதிபத்யத்திற்கு அடக்கமாம்! ஆனால் இங்கு நாம் ஓர் சிறிய விஷயத்தை கவனிக்கவேண்டும். பிரிட்டிஷ் முதலாளித்வம் ரொம்ப பழைமையானது. சுமார் 400 வருடமிருக்கலாம். சோவியத் ரஷ்யா 20 வருடத்திற்குள் முன்னேறிவிட்டது. ஆனால் பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் 50 கோடி மக்களை இன்று எந்த நிலைமையில் வைத்திருக்கிறது? பெரும்பாலான மக்களை முழுப் பட்டினி அரைப் பட்டினி, கால் பட்டினியில் வாழ்ந்து வரும்படி செய்திருக்கிறது. வருடக்கணக்காக மக்களை ஏகாதிபத்தியம் சுரண்டிப் போனதும் சுரண்டி வருவதையுமே நாம் பார்க்கிறோம். சென்ற உலக மகா யுத்தத்திற்குப் பிறகும் அதாவது ஜெர்மனியிடமிருந்து மார்க்கெட்டுகளை பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் கொள்ளை அடித்துங்கூட, பிரிட்டிஷ் மக்கள் நிலைமை உயரவில்லை. டிரான்ஸ்வால் தங்க சுரங்கங்கள் இருந்தும்கூட, பிரிட்டனால் நெருக்கடியை தீர்க்க முடியவில்லை-- கொழுத்துக்கொண்டே போகும் பூர்ஷ்வாக்களாலும் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஐரோப்போ, ஆப்பிரிக்கா, ஆசியா, அமெரிக்கா, ஆஸ்டிரேலியா ஆகிய ஐந்து கண்டங்களிலும் பிரிட்டிஷ் கொடி பறந்தும்கூட, பிரிட்டனில் உள்ள 30 லக்ஷம் வேலையில்லாதோருக்கு பிரிட்டிஷ் ஏகாதிபதியத்தால் வேலை கொடுத்துக்காக்க முடியவில்லை. சென்ற உலக மகா யுத்தத்தில் பிரிட்டன் ஜெயித்துங்கூட 50 கோடி மக்களின் வாழ்க்கை உயர்ந்தா? இன்று மக்கள் அவதியுறுவதுதான் கண்ட பலன். பிரிட்டிஷ் ஏகாதிபதிய நாடுகளில் தாண்டவமாடும் அடக்கு முறைகளுக்கு அளவேயில்லாதிருக்கிறது. மற்றோர் பூர்ஷ்வா ஜனநாயக ஆட்சி நடைபெறும் ஐக்கிய அமெரிக்காவை எடுத்துக் கொள்வோம். இந்த நாடு "குபேர" நாடு என்று சொல்லப்படுகிறது. இயற்கைச் செல்வம் நிறைந்த பெரியதேசம். அதோடு அமெரிக்காவின் விருத்தி அடைந்திருக்கும் விவசாய வருமானம் தாராளமாக அமெரிக்காவைப் போன்ற இருபெரும் தேசங்களுக்கு போதுமானது. கணக்கற்ற தொழிற்சாலைகளும் அமெரிக்காவில் இருக்கின்றன. ஆனால் இங்கே ஒரு கோடி பேர் வேலையில்லாது திண்டாடுகிறார்கள். அமெரிக்க பூர்ஷ்வாக்கள் பருத்தும் கொழுத்தும் வருகிறார்களே ஒழிய, ஒரு கோடி மக்களை "ஜனநாயக" ஆட்சி கவனிக்கவில்லை, போலி ஜனநாயக ஆட்சி நடைபெறும் இந்த தேசங்களின் வண்டவாளங்களை, சோவியத் ரஷ்யா உலகத்தொழிலாளர்களுக்கு, தனது நாட்டு சோஷியலிஸத்தின் வெற்றி மூலம் ஏற்பட்ட உண்மையான ஜன நாயகத்தோடு ஒப்பிட்டுக்காட்டி, பிற முதலாளித்வ நாடுகளில் உள்ள 'ஜன நாயக'மென்பது "பூர்ஷ்வா ஜனநாயகமே" என்பதை விளக்கிக்காட்டுகிறது. பூர்ஷ்வா ஜனநாயகத்தின் அண்ணன்தான் பாசிஸமாகும். பூர்ஷ்வாக்களின் கை ஆட்களாக இருந்து, சர்வாதிகாரி என்ற பெயரால் ஒரு ஹிட்லரோ ஒரு முசோலினியோ மக்களை சுரண்டி, மிருகத்தனமான அடக்கு முறையால் அடக்கி ஒடுக்கி ஆள்வதோடு, யுத்தத்தை கிளப்பிவிட்டு, யுத்தகளத்தில் ஆயிரக்கணக்கான மக்களை பலி கொடுப்பதாகும்.

பாசிஸ்டு ஜெர்மனி, பூர்ஷ்வாக்களின் நன்மையை உத்தேசித்து இன்று வெறி பிடித்து அலைகிறது. ஜெர்மனியில் ஆயுத விஸ்தரிப்பு அளவகடந்தே போகிறது. முதலாளிகளின் சர்வாதிகாரி ஹிட்லர் 6 வருஷங்களாக, கம்யூனிஸ்டுகளைகொலை செய்து, பிரபல தொழிலாள தலைவர்களை சித்ரவதை செய்து, தொழிலாள சங்கங்களை கலைத்து, முதலாளிகள் இட்டது பிச்சை என்று தொழிலாளர்கள் இருக்கும்படி செய்து மிருகத்தனமாக ஆட்சி செய்து வருகிறான். வர்செயில்ஸ் ஒப்பந்தம் கிழித்தெரியப்பட்டதும், ரைன்லந்து பிரவேசமும், ஆஸ்டிரியாவை வாயில் போட்டுக் கொண்டதும், ஸ்பெயின் கலகத் தலைவன் பிராங்கோவிற்கு முழு உதவி அளித்து வருவதும், இன்றுவரை ஜெர்மனி நடத்திய காரியங்கள். கையிருப்பில் இருக்கும்குண்டு மருந்துகளை பொசுக்க, உலக யுத்தத்தை என்றைய தினம் ஜெர்மனி கிளப்பிவிட்டு நம்மை பலியிடப் போகிறதோ என்று ஜெர்மனியிலுள்ள மக்கள் பலர் அஞ்சுகின்றார்கள்.

இதாலி 16 வருடங்களாக பாஸிஸ்டு சர்வாதிகார ஆட்சியில் இருக்கிறது. சர்வாதிகாரி முசோலினி அபிசீனியாவில் குண்டு மருந்துகளை போட்டு, மக்களை பொசுக்கி, நாட்டை கைப்பற்றி, நாகரிகப்படுத்தி வருவதாக கூறுகிறான். ஸ்பெயின் கலகத் தலைவன் பிராங்கோவிற்கு முழு உதவி அளித்து வருகிறான். இதாலி தேசத்தில் தொழிலாளர்களின் சம்பளம் குறைந்துகொண்டே போகிறது—வேலையில்லா திண்டாட்டம் வளர்ந்துகொண்டே போகிறது. விவசாயம் பாழாய்க்கொண்டே வருகிறது. கொடிய வறுமை இதாலிய மக்களின் பெரும்பாலோரை வாட்டுகிறது. 16 வருடத்திற்கு முன் இருந்த நிலைமை, சரிபாதிக்கு இப்பொழுது வந்துவிட்டது, எதியோப்பியாவை கைப்பற்றியும் இதாலிய மக்களின் நிலைமை சிறிதுகூட உயரவில்லை.

---

முதலாளித்வ முறைப்படி சென்ற 50 வருட காலமாக ஜப்பானில் துரிதமாக தொழில் அபிவிருத்தி அடைந்தது. பாஸிஸ்டு ஜப்பானின் தொழில் பெருகியது. ஆனால் ஜப்பானிய தொழிலாளர்கள்நிலைமைக்ஷீணித்துக் கொண்டே வருகிறது. ஐரோப்பாவில் மிக குறைந்த சம்பளம் எவ்வளவு உண்டோ அதில் அரை வாசிதான் ஜப்பான் தொழிலாளி பெறும் சம்பளம். சந்தைகளில் அடிமைகளை விற்பதுபோல், ஜப்பானில், தொலாளர்களின் — விவசாயிகளின் பெண்கள், முதலாளிகளுக்கு அடிமைகளாக விற்கப்படுகிறார்கள். ஜப்பானில் உற்பத்தி செய்யும் சாமான்கள், ஜப்பானில் விற்க முடியாமையால், வெளியூர் மார்க்கெட்டுகளைப் பிடிக்க வலுச் சண்டைக்கு ஜப்பான் பூர்ஷ்வாக்களின் சர்க்கார் போகிறது. மஞ்சூரியாவை ஜப்பான் பிடித்துக்கொண்ட பிறகும்கூட, ஜப்பானிய மக்களின் நிலைமை உயரவில்லை. வசிப்பதற்கு தகுந்த அரைகள் இல்லாமல் இருந்த பெரும்பாலான ஜப்பானிய மக்களுக்கு, மஞ்சூரியாவை ஜப்பான் பிடித்த பிறகும்கூட, இடவசதி கிடைக்கவில்லை. ஜப்பானிலுள்ள நெருக்கடி சீன-ஜப்பான் யுத்தத்தினால் ஓங்கிக் கொண்டே போகிறது. இன்று சீனப் படைகள் ஜப்பானிய படைகளை விரட்டி அடித்து வருவதைக்கண்ட ஜப்பானிய பூர்ஷ்வாக்கள், சீன-ஜப்பான் விவகாரத்தில் தலையிட்டு ஓர் சமரசம்

(23-ம் பக்கம் பார்க்க)

# மைசூரில் 'ராமராஜ்யம்'

[ பி. ஸ்ரீனிவாசராவ் ]

இந்தியமக்கள் வேண்டாத சமஷ்டி என்னும் அவியலை இந்திய மக்களின் நெஞ்சில் திணிக்க பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் சூழ்ச்சி செய்து கொண்டிருக்கிறது. காங்கிரஸ் மகாசபை இந்த சமஷ்டியைக் கண்டிப்பாய் நிராகரித்து, சமஷ்டி எதிர்ப்பு பிராசராம் தீவிரமாகச் செய்து கொண்டு வருகிறது. ஆகவே, சுதேச சமஸ்தானங்களின் உதவியை நாடுகிறது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம். சுதேச மன்னர்களின் உதவியால் ஏகாதிபத்திபத்தியச் சுரண்டலை நீடிக்கச் செய்ய முயற்சி செய்யப்படுகிறது.

## சமஸ்தான மக்களுக்கு வாயில்லையா?

ஆனால் சமஸ்தானப் பிரஜைகளைப்பற்றி யாதொரு கவலையும் இல்லை ஏகாதிபத்தியத்திற்கு. அவர்களுக்கு இந்த சமஷ்டி திட்டத்தில் இடமே கிடையாது. சமஷ்டி சட்டசபையில் சமஸ்தானங்களின் அதிபதிகள் தங்கள் கையாட்களை நியமிக்கப் போகிறார்கள். இந்தப் பிற்போக்காளர்கள் தான், சமஸ்தானங்களின் 'பிரதிநிதிகளாம்!

## ஏமாந்த சோணகிரிகளல்ல

ஆனால், சமஸ்தானத்து மக்கள் ஆடுமாடுகளைப் போன்று வாயில்லாப் பூச்சிகளாயிருந்த காலம் மலையேறிவிட்டது. ஏகாதிபத்தியம் செய்யும் இந்தச் சூழ்ச்சியை நன்குணர்ந்துவிட்டனர். என்றும் காணாத உத்சாகமும், விழிப்பும், இன்று சமஸ்தான மக்களிடையே காணப்படுகின்றன. பொறுப்பாட்சி வேண்டுமென்ற கிளர்ச்சி இன்று சமஸ்தானங்களிலெல்லாம் தீவிரமாக நடைபெறுகிறது. இந்தக் கிளர்ச்சி வெற்றிபெற்றால், மன்னர்களின் ஸர்வாதிகாரத்தில் மண் விழுந்து விடுமல்லவா? ஆதிக்கத்திலிருக்கும் எந்த கோஷ்டி யாவது தன் அதிகாரத்தை லேசில் விட்டுக் கொடுத்ததுண்டா? இந்த சரித்திர பூர்வமான மனித சுபாவத்திற்கு இந்திய சுதேச மன்னர்கள் விதி விலக்கல்ல. ஆகவே, அடக்குமுறை தர்பார் இன்று சமஸ்தானங்களில் தாண்டவமாடுகின்றது. கைதி செய்வதும், சிறைவாசமும், நாடுகடத்தலும், துப்பாக்கி, தடியுடிப் பிரயோகமும் தினசரிச் சம்பவங்களாய்விட்டன.

## 'மைசூருக்கு முதல் பிரைஸ்'

இந்த அடக்குமுறைப் பந்தயத்தில், மைசூருக்கு முதல்பரிசு கிடைத்துவிட்டது. மைசூரில் ஒரு சட்டசபையுண்டு. அதில் மக்களால் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகள்தான் மெஜாரிட்டியிலிருக்கிறார்கள். ஆயினும் அவர்களுக்கு யாதொரு உரிமையும் இல்லை. பேரளவிற்கு இந்த சட்ட சபைக்குச் சில அதிகாரங்கள் இருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால், நடைமுறையில், இந்த சட்ட சபை ஆண்மையற்றதாகவே இருக்கிறது. சட்ட சபைக்குத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை கிடையாது! ஆகா! என்ன ஜனநாயகம்! அதிகார வர்க்கத்தின் சிகரமான, திவான்தான் சட்டசபையின் தலைவருமாவார். மக்களின் பிரதிநிதிகளால் கொண்டு வரப்படும் தீர்மானங்களையெல்லாம், அவர் 'தள்ளுபடி' செய்துவிடுகிறார். ஆகவே, மைசூர் மக்கள் மிகவும் அதிருப்தியடைந்து சென்ற ஒரு வருஷ காலமாக பொறுப்பாட்சி வேண்டுமென்று கிளர்ச்சி செய்து வருகின்றனர். மைசூர் சட்ட சபையும் பொறுப்பாட்சி வேண்டு மென்ற தீர்மானத்தை நிறைவேற்றி விட்டது.

## காங்கிரஸ் கிளர்ச்சி

மைசூரில் பல வருஷங்களாகவே காங்கிரஸ் கமிட்டிகள் இருந்து வருகின்றன. ஆனால் அவைகள் சரிவர வேலை செய்யவில்லை. சென்ற வருஷத்தில் அவைகள் திருத்தியமைக்கப் பட்டன. உடனே காங்கிரஸின் திட்டத்திற்காகவும், பொறுப்பாட்சிக்காகவும் அவைகள் தீவிரக்கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தன. தேர்தலில் அவைகள் ஸ்தாபன ரீதியாகக் கலந்து கொண்டு, முதலில் 4 ஸதானங்களைக் கைப்பற்றின. பிறகு ஸமஸ்தானப் பிரஜைகளின் சம்மேளனமும் காங்கிரஸுடன் சேர்ந்தவுடன், காங்கிரஸிற்கு சட்டசபையில் 14 ஸதானங்கள் கிடைத்தன.

இவ்வாறு காங்கிரஸ் கமிட்டிகளும், ஸமஸ்தானப்பிரஜா சம்மேளனமும் ஒன்று சேர்ந்து செய்த கிளர்ச்சியினால் மைசூர் மக்களுக்கு புதிய உத்சாகமும், விழிப்பும் உண்டாயிற்று. காங்கிரஸ் கொடியின் கீழ் ஏராளமாக வந்து சேர்ந்தனர். பிரிட்டிஷ் இந்திய சட்டசபைத் தேர்தல்களில் காங்கிரஸிற்குக் கிடைத்த வெற்றியும், மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரிசபைகள் ஏற்பட்டதும் சமஸ்தானங்களில் காங்கிரஸ் இயக்கத்திற்கு இன்னும் ஊக்கத்தை ஊட்டியது.

## அதிகாரிகளுக்கு திகில்

இவ்வாறு காங்கிரஸ் நாளுக்கு நாள் பலம் பொருந்திய ஸ்தாபனமாக மாறுவதைக்கண்ட அதிகாரவர்க்கம் திகிலடைந்தது. உடனே எடுத்தது அடக்குமுறை ஆயுதத்தை. கூட்டங்களுக்குத் தடையுத்தரவு. தலைவர்கள் சிறைக்கனுப்பப்பட்டனர். பலருக்கு வாய் பூட்டு போடப்பட்டது. தேசியக்கொடியும் பறக்கக்கூடாது என்று கண்டிப்பான உத்தரவு பிறந்தது. எங்கு பார்த்தாலும் 144. சமஸ்தானங்களுக்குள் இந்த எதேச்சாதிகாரதர்ப்பாருக்கு ஒத்து ஊதுபவர்களைத்தவிர, வேறெந்த அரசியல் வாதியும் அநுமதிக்கப்படுவதில்லை. சென்ற வருஷம் பம்பாய் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீமான் கே. எப். நாரிமான் பங்களூருக்குச் சென்றிருந்தபோது, அவர் பிரசங்கத்தைக் கேட்க வேண்டுமென்று ஆவலுடன் பல்லாயிரக் கணக்கில் மக்கள் குழுமியிருந்தனர். அந்தக்கூட்டத்தில் பேச முயன்றபோது, நரிமான் கைது செய்யப்பட்டார். இதை ஆக்ஷேபித்தமக்கள்மீது போலீசார் துப்பாக்கிப்பிரயோகப் செய்து தடியடி ராஜ்யம் நடத்தினார்கள்.

## நீதியை மாற்றுகிறது சர்க்கார்

ஆனால், இந்த அடக்க முறையினால் பொது மக்கள் பயந்துவிட வில்லை. இயக்கமும், கிளர்ச்சியும் துள்ளிக் குதித்து மும்முரமாக நடந்தன. இதைக்கண்ட சர்க்கார் வேறு நீதியைக்கையாளமுற்பட்டது. சில தலைவர்களை விடுதலை செய்துவிட்டு, ஒரு அரசியல் கமிட்டியை நியமித்தது மைசூர் தர்ப்பார். ஆனால், அந்தக் கமிட்டி சிபார்சு செய்ய வேண்டிய விஷயங்களில் சுய ஆட்சியைப் பற்றிய பேச்சே இல்லை. மக்கள் தூங்கவில்லை. இந்தக் கமிட்டியை காங்கிரஸ் கமிட்டி, நிராகரித்து, பஹிஷ்கரித்து விட்டது. அரசாங்கத்தின் சூழ்ச்சி பலிக்கவில்லை.

## ஹரிபுரா காங்கிரஸ்

இந்த சந்தர்ப்பத்தில் ஹரிபுராவில் கூடிய காங்கிரஸ், சமஸ்தானங்களில் காங்கிரஸ் கமிட்டிகள், அரசியல் துறையில் கலந்துகொள்ளக் கூடாது எனத் தீர்மானித்தது. மைசூர் ஜன நாயக போராட்டத்தை தாக்கியதற் கொப்பாகவே இத்தீர்மானம் இருந்தது. ஆனால்,மைசூர்மக்கள் சும்மா இருக்கவில்லை. மைசூர் சமஸ்தான காங்கிரஸ் என்ற புதிய ஸ்தாபனத்தை அமைத்து, போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தினார்கள்.

## மீண்டும் அடக்குமுறை

அதிகார வர்க்கத்தினருக்கு இது சகிக்கவில்லை; அடக்குமுறைப் பேய் மீண்டும் தலைவிரித்தாடத் துடங்கிவிட்டது. தினந்தோறும் சிலர் கைதியானார்கள். தடியடிப் பிரயோகம்—என் துப்பாக்கிப் பிரயோகம் வரையில் ஆய்விட்டது. சமீபத்தில் சமஸ்தானக் காங்கிரஸ் சிவபுராவில் கூடியபோது, 144 சாதரா செய்யப்பட்டது.

## கோடிப் போர்

பல தலைவர்கள் கைது செய்யப்பட்டு, சிறைவாசம் செய்கின்றனர். மாஜிஸ்திரேட்டின் உத்திரவை மீறி, தேசியக் கொடியை ஏற்றியதுதான் அவர்கள் செய்த குற்றம். ஆனால் மக்கள் ஆயிரக் கணக்கில் தேசியக் கொடியின் கௌரவத்தைக் காப்பாற்ற முன் வருவதைக்கண்ட அதிகார வர்க்கம் தோல்வியை ஏற்றுக்கொண்டு, கொடியைப் பறக்கவிட அநுமதித்திருக்கிறது. இதற்கப்பால், காங்கிரஸ் இயக்கம் சமஸ்தானத்தின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் பரவி விட்டது.

## விதுராச்வதம்-அடக்குமுறையின் சிகரம்

இதைக்கண்ட அதிகார வர்க்கம் திகில் கொண்டு, என்றுமில்லாத அடக்கு முறையைக் கையாளத் துடங்கியது. எங்கு பார்த்தாலும் 144 உத்தரவுகளும், தடை யுத்தரவும் தாண்டவமாடுகின்றன. ஆனால். அடக்குமுறையின் சிகரம், சென்ற 26உயன்று பெங்களூரிலிருந்து 40 மைல் தூரத்திலுள்ள விதுராச்வதம் என்கிற கிராமத்தில் நடந்த துப்பாக்கிப் பிரயோகம்தான். அங்கு சுமார் 25,000 மக்கள் காங்கிரஸின் செய்தியைக் கேட்கக் கூடியிருந்தனர். கூட்டம் ஒரு தோட்டத்தில்நடந்துகொண்டிருந்தது. சில அதிகாரிகள், ஒரு போலீஸ் படையுடன் அங்கு சென்றனர். (தங்கள் மிருகத்தன்மையினால் பெயர் சம்பாதிக்க விரும்பினார்கள் போலும்) 1919-ஞூத்தில் ஜலியன்வாலா பாக்கில் டயர் செய்தது போலவே, மக்களைச் சுட்டனர். 35 பேர் மாண்டனர். 65 பேருக்குக் காயம். பிணங்களைக்கூட அப்புறப்படுத்தவில்லை. அதிகாரிகள்.

## 'ராம ராஜ்யம்'

மைசூரில் நடக்கும் 'ராமராஜ்யம்' இதுவே! 'ராமராஜ்யம்' இப்படியிருக்குமானால், 'பிரஜைகள் அதிலிருந்து ஓடி விடுவார்கள் என்பதில் சந்தேகமேயில்லை.

(38ம் பக்கம் பார்க்க)

ஜன சக்தி

சென்னை, 30—4—'38.

# மே தினமும் நமது போராட்டமும்

மே மாதம் முதல் தேதி மே தினம் என்று அழைக்கப்படுகிறது. இந்த நன்னாளில்தான் சர்வ தேசங்களிலுமுள்ள தொழிலாளிகள் தங்கள் உயிரினுமினிய செங்கொடியை வானமளாவப் பறக்கவிட்டு நிற்கிறார்கள். இந்த திருநாள் சரித்திர பூர்வமான மகிமை வாய்ந்த பெருநாளாகும். பொங்கல் பண்டிகை, போகிப் பண்டிகை, முகரம் பண்டிகை, கிருஸ்மஸ் பண்டிகை, முதலிய ஜாதி சமயப் பண்டிகைகளை நாம் அறிவோம். அவைகள் பழமை தட்டிய குறுகிய சம்பிரதாயப் பண்டிகைகள். ஆனால் உலகத்தின் பெருவாரி மக்களான பாட்டாளர்களின் இம் "மே தின"ப் பண்டிகையோ வரவர உயிரும் உற்சாகமும் பெற்றுவரும், சாரம் நிறைந்த அவசியமான பண்டிகையாகும்.

இந்த நாளில்தான் உலக முழுவதிலும் ஒவ்வொரு தேசத்திலும் லட்சோப லட்சம் தொழிலாளிகள் தொழிற்சாலைகளிலிருந்தும், காரியாலங்களிலிருந்தும் கங்கைப் பிரவாகம் போல் திமுதிமு என்று வெளியில் வந்து, தங்கள் திருவிழாவை அற்புதமாகக் கொண்டாடுகிறார்கள். இந்த நாளில்தான் கிருஷிகர்களும் தொழிலாளர்களும் ஒன்று திரண்டு சென்ற வருஷத்தின் லாப நஷ்ட கணக்கைப் பார்க்கிறார்கள். இந்த நாளில்தான் உழைத்துக் கொடுத்து இளைத்துப்போன உத்தமர்கள் கோடானு கோடியாகக் குவிந்து நின்று, ஒற்றுமையின் வலிமையையும், தங்கள் வர்க்கத்தாரிடம் தங்களுக்குள்ள அசையாத நம்பிக்கையையும் பாரறியப் பகிரங்கப்படுத்துகிறார்கள். இந்த நாளில்தான் சுய சிரம ஜீவிகளான உழைப்பாளி மக்கள் ஓர்முகமாக நின்று வருகிற வருஷத்தில் தங்களை எதிர் நோக்கி நிற்கும் போராட்டத்தை எவ்வாறு நடத்துவதென்று திட்டம்போடுகிறார்கள்.

ஆகவே நாமும் 1938-வது வருஷ "மே தின"த்தின் போது இந்திய மகா ஜனங்களை எதிர்நோக்கி நிற்கும் போராட்டத்தின் இயல்பு என்ன என்று ஆராய்வோம். தொழிலாளர் பண்டிகையன்று, இந்திய மகாஜனங்களின் போராட்டத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்வானேன்? என்று கேட்கலாம். இன்று உலக ரீதியாக ஒரு போராட்டம் நடந்துகொண்டிருக்கிறது. அதில் நாமும் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறோம். இந்தப் புதிய நிலைமையில், தொழிலாளி வர்க்கம் தங்களுடைய உடனடியான வர்க்கப் போராட்டமும், பெருவாரியான இந்தியப் பொது ஜனங்களின் போராட்டமும் இரண்டறக்கலந்து நிற்கிறதென்பதை உணர்கிறது. இந்தியாவிலுள்ள மொத்த ஜனங்களுக்கும் அவசியமான கோரிக்கைகளோடு, மற்றக் கட்சிக்காரர்களும் வர்க்கத்தார்களும் எந்தப் போர் முனைக்குச் செல்கிறார்களோ அந்தப் போர் முனைக்குத் தான் இன்று தொழிலாளிகளும் செல்கிறார்கள். ஆகவே, இந்த மே முதல் தேதியில் இந்தியப் பொது ஜனங்களை எதிர்நோக்கி நிற்கும் வேலைகளை ஆராய்கிறோம்.

முதலில், மேற்கூறிய புதிய நிலைமையை உண்டு பண்ணிய அம்சங்கள் எவை? இத்தக் கேள்விக்குப் பதில் சொல்ல, சர்வதேச முதலாளித்வத்தின் சமீப காலப் போக்கு, அதனுடைய வீழ்ச்சி, சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தின் வளர்ச்சி ஆகியவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டும். சுருங்கச் சொன்னால், உலகப் பொருளாதார நெருக்கடி, முதலாளித்வத்தின் ஆணிவேரில் பலமான ஓர் வெட்டு வெட்டிற்று; கைச் சரக்கையெல்லாம் காட்டினாலொழிய தப்பிப்பிழைக்க முடியாதென்ற நிலைமை முதலாளித்வத்துக்கு ஏற்பட்டது. நெருக்கடியைச் சமாளிக்க முதலாளித்வம் கையாடும் முறைகள் என்ன தெரியுமா? சில தேசங்களில் அது பகிரங்கமாக மிலேச்சத்தனமான பாஸிஸமாக உருவெடுத்திருக்கிறது. இன்னும் சில தேசங்களில் அது நாடுபிடிக்கும் யுத்தங்களில் சரண் புகுந்திருக்கிறது. பொருளாதார வலுவும் அரசியல் அதிகாரமும் முதலாளிகளுக்கு ரொம்ப பலமாயிருக்கிற தேசங்களில், அது, பாஸிஸ உருவெடுக்காமலே கன்சர்வேடிவ் கட்சிகளின் மூலமாகவே, கூலியைக் குறைப்பதும் தொழிலாளர்களின் நிலைமையை மிக மோசமாக்குவதுமாகிய திருவிளையாடல்கள் புரிகின்றது. வேறு சில தேசங்களில் முதலாளித்வம் தனது வீழ்ச்சியின் சுமையை ஈவிரக்கமின்றி குடியேற்ற நாடுகளின்மீது சுமத்தி அதனால் ஏற்படும் அதிருப்தியைத் தடுக்க கொடிய அடக்கு முறைச் சட்டங்களையும் கையாளுகிறது. அதே சமயத்தில் பொதுவாக உலக முழுதும் உள்ள தொழிலாளரியக்கமும் சிறப்பாக குடியேற்ற நாடுகளிலுள்ள தொழிலாளரியக்கமும் ஸ்தாபனத்திலும், சக்தியிலும் அபிவிருத்தி அடைந்து வந்திருக்கின்றன. வர்க்க உணர்ச்சியும் முன்னைவிடப் பன்மடங்கு அதிகரித்திருக்கிறது. தொழிலாளிகளும், விவசாயிகளும், படித்தவர்களில் பெரும்பாலோரும், நடுத்தர வகுப்பு ஜனங்களும் இல்லாமையாலும், பசிப் பிணியாலும் கஷ்டமடைந்திருக்கின்றார்கள். முதலாளித்துவ சமூக அமைப்புத் தட்டுக்கட்டுத் தடுமாறுவதை தெரிந்து கொண்டிருக்கிறார்கள். முதலாளித்துவம் சாஸ்வதமானது என்ற மயக்கம் தெளிந்து போனதால் புதிய போராட்டத்திற்குப் பலம் அதிகரித்திருக்கிறது. பழைய முதலாளித்துவத்தைவிட ஏகாதிபத்தியமும், பாஸிஸமும், கோடானு கோடி மக்களை மிகக் கொடூரமாக நசுக்குகின்றன என்பதோடு மாத்திரமல்ல. இன்றைய முதலாளித்வ சமூக அமைப்பு அடக்கு முறைகளையும், நசுக்கு முறைகளையும் கையாளாமல் அரை நிமிஷங்கூட காலந் தள்ள முடியாது என்கிற அளவுக்கு இத்துப்போய்விட்டது என்பதை உலக முழுவதிலும் பொதுஜனங்கள் உணரத் தலைப்பட்டுவிட்டார்கள். இதன் பலனாக பொது ஜனங்களின் போராட்டம், மும்முரமும், ஆழமும் அடைந்திருப்பதோடு, விரிவும் அடைந்திருக்கிறது. இந்த மாதிரியான நிலைமையில் ஒரு காலத்தில் விட்டுக் கொடுக்கும் தன்மையோடிருந்து இன்று விழிப்படைந்து விட்ட இந்தியாவிலுள்ள கோடானு கோடி மக்களின் போராட்டத்தோடு தொழிலாளர்களின் போராட்டமும் இணங்கி நிற்கிறது.

மேற்கூறிய விரிவான போராட்டம் எப்படி நடைபெறுகிறது? உலக ரீதியாக பாஸிஸ்ட்களுக்கும், பாஸிட் அல்லாதார்களுக்கும் போராட்டம்நடைபெறுகிறது. நமது தேசத்தைப்பொறுத்தவரையில் ஏகாதிபத்தியத்தார்க்கும், ஏகாதிபத்திய எதிரிகளுக்குமிடையில் போராட்டம் நடைபெறுகிறது. ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் இன்று கலந்திருப்பவர்கள் அத்தனைபேரும் சோஷியலிஸ்டுகள் அல்ல. வர்க்கப் போராட்டத்தில் தொழிலாளர்களுக்கு எதிரிகளாக வேண்டியவர்களும் ஏகாதிபத்ய எதிரிகளாக இருக்கிறார்கள். ஆனால் இன்று அவர்கள் ஏகாதிபத்திய எதிரிகளாக இருந்து தீரவேண்டிய அவசியத்திலிருக்கிறார்கள். வெறும் கொள்கையை மட்டும் பிடித்துக்கொண்டு எதிரே நடக்கும் போராட்டத்தை அலட்சியம் செய்து அவர்களோடு ஒத்துழைக்க மறுத்தால் அது ஏட்டுச் சுரைக்காய்த் தத்துவமாகுமே யொழிய சமூக இயக்க ஞானம்படைத்த மார்க்ஸிஸமாகாது.

நிலைமைகளைச் சீர்தூக்கிப் பார்த்தால் இந்த மே தினத்தின்போது தொழிலாளர்களின் வர்க்கப் போராட்

டம் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நிகழும் தேசீயப் போராட்டத்தோடு ஐக்கியப்பட்டிருக்கிறது என்பதை தெளிவாக அறிந்து கொள்ளக்கூடும். தேசீயப் போராட்டம் முன்னைவிடப் பன்மடங்கு அதிகரித்திருக்கிறது. ஏகாதிபத்ய எதிர்ப்புப் போராட்டம் வெற்றிபெற வேண்டுமானால் அதில் பொது ஜனங்கள் பூரணமாக பங்கெடுத்துத் தீரவேண்டும். பொதுஜனப் போராட்டத்தின் இறுதியான தலைமைப் பதவி தொழிலாளி வர்க்கத்திற்கே உரியது என்பதில் கிஞ்சிற்றும் சந்தேகமில்லை. ஆகவே இன்று காங்கிரஸைத் தலைமையாகக் கொண்டு நடைபெறும் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் இந்தியத் தொழிலாளி வர்க்கம் முழு மூச்சுடன் இறங்கி இருக்கிறது. தமிழ் மாகாணத் தொழிலாளர்களும் தேசீயப் போராட்டத்தில் போதியவாறு பங்கெடுத்துக் கொண்டிருந்த போதிலுங்கூட மிச்ச சொச்சமில்லாமல் அத்தனை பேரும் ஏகாதிபத்ய எதிர்ப்புப் போராட்டத்தில் பூரணமாகப் பங்கு கொள்வோம் என இம் "மே தின"த்தில் உறுதி செய்துகொள்ள வேண்டும்.

சோவியத் ராஜ்யமும் முதலாளித்வ ஒழிப்பும் தொழிலாளி வர்க்கத்தின் மறுக்க முடியாத லக்ஷியங்கள்தான். ஆனால் அவை தூரத்திலுள்ளவை. பொதுஜனங்களை உடனடியாக நேரடியான போராட்டத்திற்கு இழுப்பதுதான் அவசர அவசியமான கோரிக்கையாகும். அப்படியானால் பொதுஜனப் போராட்டத்தின் தலைமை வகிக்கப் போகும் தொழிலாளி வர்க்கத்தின் அவசரமான கோரிக்கை எது?

எங்கே பார்த்தாலும் வர்க்கங்களும், கோஷ்டிகளும், ஸ்தாபனங்களும் இந்நாட்டில் இன்று தங்களின் கோரிக்கைகளை முன்னிறுத்தி கிளர்ச்சி செய்யத் தொடங்கி இருக்கிறார்கள். மாணாக்கர்கள், டாக்டர்கள். விஞ்ஞானிகள், நடுத்தர வகுப்பு வியாபாரிகள், கிருஷிகர்கள், தொழிலாளிகள், ஓரளவிற்கு இந்திய மில் முதலாளிகள் ஆகியவர்கள் இன்றைய வாழ்க்கையில் அதிருப்திப்பட்டு தங்களுக்கு அவசியமான கோரிக்கைகளை வகுத்து கிளர்ச்சி செய்கிறார்கள். சிறிது கூர்ந்து கவனித்தால் இவர்களுடைய அதிருப்திக்கு அஸ்திவாரமான அல்லல்களுக்கும், இடையூறுகளுக்கும் மூலகாரணம் ஏகாதிபத்ய ஆட்சி முறை என்பது விளங்காமல் போகாது. ஆகவே வரவர அவர்கள் ஏகாதிபத்திய எதிரிகளாகி வருகிறார்கள்.

சென்ற வருஷத்தில் இந்த நாடு முழுதும் நடந்த தொழிலாளர், மாணாக்கர் வேலை நிறுத்தங்களும் கிருஷிகர் ஜதாக்களும், சமஸ்தானக் குடி மக்களின் கிளர்ச்சிகளும், பொதுஜன எழுச்சியை நல்லமாதிரியாக எடுத்துக் காட்டுகின்றன. சென்ற ஆண்டு காங்கிரஸ் அங்கத்தினர் தொகை 30 லக்ஷமாக உயர்ந்திருப்பது ஒன்றே பொது ஜனங்கள், காங்கிரஸ் கொடியின் கீழ் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போருக்கு எவ்வளவு தயாராக இருக்கிறார்கள் என்பதை எடுத்துக் காட்டுகிறது. ஆகவே தொழிலாளி வர்க்க ஸ்தாபனத்தை என்றுமில்லாத வண்ணம் பலப்படுத்திக் கொள்வதோடு பொது ஜனங்களை அவரவர் வர்க்க ஸ்தாபனத்தில் பலப்படுத்தி காங்கிரஸ் கொடியின் கீழ் தேசீய ஐக்கிய முன்னணியை பலப்படுத்துவதே முதற் பெரும் வேலை என்று இந்த 'மே தின'த்தில் உறுதி செய்துகொள்ள வேண்டும்.

வருகிற வருஷத்தில் வேண்டாத சமஷ்டி அரசியல் திணிக்கப்படலாம். உலகம் இன்றிருக்கும் நிலையில் பாஸிஸ்ட் வெறியர்களின் மூலம் ஓர் மகா யுத்தம் தோன்றினும் தோன்றலாம். சமஷ்டி அரசியல் சுமத்தப்பட்டால் பொதுஜன எழுச்சியின் மூலம் தகர்த்தெறியவேண்டும். உலக யுத்தம் ஏற்பட்டால் இந்திய விடுதலைக்கு அதை உபயோகித்துக்கொள்ள வேண்டும். அந்த இரண்டு காரியத்திற்கும் தங்களையும் பொது ஜனங்களையும் தயார் செய்வோம் என்று தொழிலாளி வர்க்கம் உறுதி செய்துகொள்ள வேண்டும், இந்த 'மே தின'த்தில்.

கடந்த இருபது வருஷங்களாக இந்தியாவில் தொழிலாளர் ஸ்தாபனம் வரவர வளர்ந்து வருகிறது. கடந்த இருபது வருஷங்களுக்குள்ளாக சோவியத் ஐக்கியக் குடியரசு சரித்திரம் காணாத புதிய வாழ்வை நிர்மாணித்து சோஷியலிஸத்தின் ஜெயக் கொடியை நாட்டி, உலகத் தொழிலாளி வர்க்கத்திற்கு ஆதர்சத்தையும், உத்வேகத்தையும் அளிக்கும் தாயகமாக ஜ்வலிக்கிறது. சோவியத் ஆட்சியை உடைத்தெறிந்துவிட வேண்டுமென்று பாஸிஸ்ட் பிசாசுகள் உலக முழுதும் திட்டமிட்டு வேலை செய்துவருகின்றன. ஆகவே இந்த "மே தின"த்தில் தொழிலாளர்கள் சோவியத் ரஷ்யாவிற்கு வாழ்த்துக்கூறி, அதன் வெற்றிக்கு சந்தோஷம் தெரிவித்து, சோவியத் ரஷ்யாவின் எதிரிகள் யாராயிருந்தாலும் அவர்கள் உலகத் தொழிலாளி வர்க்கத்தின் எதிரிகள் என்று உலகறியக் கூறுவார்களாக!

இந்த "மே தின"த்தில் பாஸிஸ்டுக் கொலைகாரர்களின் எமகண்டத்தில் சிக்கி, உயிருக்குத் துடி துடித்துப் போராடும் ஸ்பெயின் தேச பொதுமக்களின் மகா உறுதியைப் போற்றுவதோடு அவர்களுடைய ஜனநாயகப் போராட்டம் வெற்றிபெற இந்தியத் தொழிலாளிகள் கோரி நிற்பார்களாக! மேலும், இந்திய தொழிலாளர்கள் தங்களுடைய தோழர்களாகிய சீனமக்கள் ஜப்பானிய வெறியர்களை புறமுதுகிட்டோடத் துரத்தித்துரத்தி அடிக்கும் விறல் வீரத்தை மகிழ்ச்சிப் பெருக்குடன் போற்றிப் புகழ்வார்களாக!

**உலகந்தொழிலாளிகளே ஒன்றுபடுங்கள்!**

## ஸ்பெயின் தேசத்தின் அசையாத உறுதி

சர்க்கார்—குடி அரசு யூனியன் தீவிர குடி அரசுக் கட்சி, சோஷியலிஸ்ட் கட்சி, கம்யூனிஸ்ட் கட்சி, யூ. ஜி. டி. எப். ஏ. ஐ. முதலிய சகல கட்சிகளும் அடங்கிய ஸ்பெயின் தேச பொதுஜன முன்னணி, ஏப்ரல் 2உ வெளியிட்ட அறிக்கை பின் வருமாறு:—

"பாஸிஸம் திட்டமிட்டு, அடித்து வருகிற சர்வதேசக் கொள்ளையில், இன்றைய முறையாக நிற்பது ஸ்பெயின் தேசம். எதியோப்பியாவையும் பின்னர் ஆஸ்திரியாவையும் எவ்வளவு பேராசையோடு தாக்கினார்களோ, அவ்வளவு பேராசையோடுதான், பாஸிஸ்ட் வெறியர்கள் ஸ்பெயினையும் தாக்கிக்கொண்டிருக்கிறார்கள். பின்னால் வலுத்த தேசங்களின் முறையும் வருமென்ற நம்பிக்கையோடு நாளைக்கு இளைத்த தேசங்களையும் இன்றைக்கு இரக்கமில்லாத மிலேச்சத்தனத்தோடு தாக்குவார்கள். இன்று ஸ்பெயினில் நடைபெறும் சம்பவம் உலகம் எதற்குத் தயாராகிக் கொண்டிருக்கிறது. எதிர்கால உலகத்தை எத்தகைய பயங்கரம் சூழப்போகிறது என்பதற்குரிய ஓர் முன்னறிவிப்பும் எடுத்துக் காட்டும் மாத்திரமே ஆனால், இந்த சம்பவத்தை ஸ்பெயினால் தடுக்க முடியும்; அதோடு பாஸிஸத்தின் கொலைகார ஆக்ரமிப்பைத் தகுந்த நிர்ணயமான ஓர் முட்டுக்கட்டை போடுவதற்குரிய சக்தியைத் திரட்டிக் கொள்ளவும் முடியும். ஸ்பெயினிலுள்ள ஒவ்வொரு ஜனநாயக வாதியினுடைய வாழ்வும் இதற்காகவே நிவேதிக்கப்பட்டிருக்கிறது. பொதுவாக உலகத்தினுடையவும் சிறப்பாக ஐரோப்பாவினுடையவும் சமாதானத்திற்காக, தன்னுடைய வாழ்க்கையைத் தத்தம் செய்வதில் பெருமைப்படாத ஒரு ஸ்பெயின் தேசத்தான்கூட இருக்கமாட்டான். என்ன நேர்ந்தாலும் நேரட்டும்; எங்களுக்கு எவ்வளவு கஷ்ட நிஷ்டூரமான நிலைமை யேற்பட்டாலும் ஏற்படட்டும். நாங்கள் போராடுவதென்றே அசையாத உறுதியுடன் நிற்கின்றோம்."

# —: குறிப்புகள் :—

## இது என்ன காங்கிரஸ் கக்ஷி?

ஆகியஸ் என்பவனுக்கு பெரியதொரு குதிரை லாயம் இருந்தது. பல வருஷங்களாகச் சேர்ந்திருந்த மப்பை அந்த லாயத்தின் தரைகளிலும், சுவர்களிலும் ஒட்டி ஐக்கியப்பட்டுவிட்டனவாம். அதைச் சுத்தம் செய்வதற்காக என்ன முயற்சி செய்தும் முடியாதவுடனே, ஹெர்குலீஸ் என்கிற அதிபராக்கிரம சாலி ஒருவன், அதை சுத்தம் செய்ய முன் வந்தானாம். அவனும் கடைசியில் அதைச் சுத்தம் செய்ய செய்த முயற்சிகளெல்லாம் பயனற்றுப் போகவே, ஆல்பியஸ் என்கிற நதியையே, திருப்பி அந்த லாயத்தில் பாயும்படி செய்தானாம். அதன் பிறகுதான் அந்த லாயம் சுத்தமடைந்ததாக ஒரு கதை கிரேக்க புராணத்தில் உண்டு. இது பழமொழியாகவே மாறி விட்டது. அசுத்தமும் ஊழலும் நிறைந்த இடங்களையெல்லாம் "ஆகியின் லாயங்கள் (Augeam Stybls) என்க் கூறுவார்கள்.

ஸ்தல ஸ்தாபனங்களெல்லாம் —அதிலும் குறிப்பாக சென்னை கார்ப்பொரேஷன்—ஒரு பெரிய ஆகியின் லாயமாகவே கூறப்பட்டது. இதைச் சுத்தம் செய்ய காங்கிரஸ் மகாசபை சென்ற வருஷம் ஸ்தாபன ரீதியாக தேர்தலில் போட்டியிட்டது.

ஆனல் சென்னை, கார்ப்பரேஷனில் நடக்கும் சம்பவங்களைப் பார்த்தால், அங்கு மெஜாரிட்டியில் காங்கிரஸ் கக்ஷிதானா எனச் சந்தேகம் எழுகிறது. சென்ற வருஷத்தில் இந்தக் கக்ஷியில் பெரிய ஊழல்கள் இருப்பதாகக் கூறப்பட்ட சில அங்கத்தினர்கள் மீது நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. ஆனல், ஊழல் நின்றுவிட்டதாகத் தெரியவில்லை. இரண்டு மாதங்களுக்கு முன் கார்ப்பொரேஷன் கூட்டத்தில், எம். அண்டு எஸ். எம். ரயில்வே அட்வைஸரிக் கமிட்டிக்குப் பிரதிநிதித் தேர்தல் நடந்தபோது, காங்கிரஸ் கக்ஷி அங்கத்தினராகிய ஸ்ரீமான் ஸ்ரீராமுலு நாயுடுவைக் காலைவாரி விட்டது காங்கிரஸ் கக்ஷி. அவரை எதிர்த்த காங்கிரஸ்காரரல்லாத ஸ்ரீமான் பாசுதேவ் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அதற்கப்பால் இரண்டு தினங்களுக்குமுன் நடந்ததொரு கூட்டத்தில், ஸ்ரீமான் எம். எஸ். சுப்பிரமணிய ஐயர் சுகாதாரக் கமிட்டிக்கு கட்சியின் அபேக்ஷகராக நின்று தோல்வியுற்றார். இப்படிப்பட்ட நிலையில், சிறிதும் கூட்டுப்பாடின்றி, சந்தி சிரிக்கும்படியான இந்தக் கட்சி இருந்தாலென்ன, இல்லாதொழிந்தாலென்ன? இந்தக் கட்சியே ஒரு பெரிய ஆகியன் லாயமாக ஆய்விட்டது. முதலில், இந்த லாயத்தைப் பெருக்கி குப்பை வார வேண்டியது அவசியமாயிருக்கிறது. இதற்கு ஒரே ஒரு வழிதான். இந்தக் கட்சியையே கலைத்து விடுவது தான் சரியான மார்க்கமாகும். த. நா. கா. கமிட்டி இதைக் கவனிக்குமா?

மற்ற இடங்களிலும் காங்கிரஸ் நடவடிக்கை சரியாயிருப்பதாகத் தெரியவில்லை. தேர்தல்களில் காங்கிரஸ் காரார்களுக்கே போட்டி! நேற்று காங்கிரஸை எதிர்த்தவர்கள் இன்று பக்காக் காங்கிரஸ் காரார்கள்! மன மாற்றம் ஏற்பட்டு ஏகாதிபத்திய-எதிர்ப்பு வீரர்களாகவும் ஆய்விடுகிறார்கள்!

உண்மையில் காங்கிரஸ் தேர்தல்களில் கலந்து கொண்டவுடன், காங்கிரஸின் நிர்வாகிகள் ஸ்தானங்களைப் பிடிக்க வேண்டுமென்கிற லக்ஷ்யத்துடன், கண்டவர்களை யெல்லாம் அபேக்ஷகர்களாக நிறுத்தி வந்ததனுல், காங்கிரஸ் ஸ்தாபனத்திலேயே கூளை குப்பம் நிறைந்து கொண்டிருக்கிறது. இது இவ்வாறே போய்க்கொண்டிருந்தால், காங்கிரஸ் மகாசபையே பெரிய 'ஆகியன் லாயமா'க ஆய்விடும் போலிருக்கிறது. அதைச் சுத்தம் செய்வதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. மக்களின் நேரடியான போராட்டம் ஆரம்பித்தால்—அந்த நதியின் வெள்ளத்தில், இந்தக் குப்பைகூளங்களெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும். ஹெர்குலீஸிற்கு இருந்த சக்தியைப் போன்று பலம் பொருந்தியது ஜன சக்தி. அந்த ஜன சக்தியைக் கொண்டுதான், இந்த வெள்ளத்தை சீக்கிரம் கொண்டுவர வேண்டும்.

## ஏமாற வேண்டாம்!

வைசிராய், லோதியன் பிரபுவுக்கும், மகாத்மா காந்திக்கும் மற்றுமுள்ள தலைவர்களுக்கும் சமீபத்தில் நடந்த சம்பாஷணைகள் சமஷ்டியைக் குறித்ததே என்பதைப்பற்றி இனி சந்தேகமே யில்லை. ஸ்ரீமான் சத்தியமூர்த்தி, இதைக் குறித்து ஒரு பத்திரிகை நிருபருக்கு பேட்டியளிக்கையில், "சமஷ்டியைப் பற்றிய பேச்சுகள் மிகவும் 'நாஸூக்'காக இருப்பதால் அதைப்பற்றி இப்பொழுது ஒன்றும் வெளியிடுவதற்கில்லை" எனக் கூறினர்.

இது மிகவும் மோசமான நிலைமையாகும். இந்த சமஷ்டியில் என்ன நாஸூக்கான சம்பாஷணை இருக்க முடியும் என்பது தான் நமக்குத் தெரியவில்லை. காங்கிரஸ் பகிரங்கமாகவும், கண்டிப்பாகவும், இதை நிராகரித்து விட்டது. ஆகவே, இதைப்பற்றிய பேச்சிற்கே இடமில்லை.

யுத்த நெருக்கடி அதிகரிக்க அதிகரிக்க, இங்கிலாந்தின் நிலைமை கவலைக்கிடமாயிருக்கிறது. ஆகவே, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், எப்படியாவது காங்கிரஸை சரிக்கட்ட வேண்டுமென சூழ்ச்சி செய்கிறது. அதனுல்தான் ஏதாவது மேல்பூச்சு பூசி, இந்த சமஷ்டியை உலக யுத்தம் வருவதற்கு முன்னமேயே இந்தியாவின் தலையில் சுமத்தப்பார்க்கிறது. இந்த சமயத்தில் நாம் ஏமாறுமல், மிகமிக ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

தன் காரியம் ஆனவுடன் ஏகாதிபத்தியம் பழைய ரூபத்தையே எடுத்துக் கொள்ளுமென்பதில் சந்தேகமில்லை. சென்ற மகா யுத்தத்தில் கொடுக்கப்பட்ட வாக்குறுதிகள் போன இடமே தெரியவில்லை. ஏன்? 1931ம் வருஷத்தில், முதல் சட்ட மறுப்பு இயக்கத்தை எப்படியாவது தொலைத்து விடவேண்டுமென்பதற்காக காந்தி—இர்வின் ஒப்பந்தத்தை செய்து கொண்ட சர்க்காரால், மகாத்மா காந்தி சீமைக்குப் போனவுடன்; இங்கு ஒப்பந்தம் கிழிக்கப்படவில்லையா? அந்த ஒரு வருஷகாலத்தில், மீண்டும் சட்ட மறுப்புத் துடங்கினல், அதை நசுக்குவதற்காக எல்லாவித ஏற்பாடுகளையும் தயார் செய்து வைத்துக்கொண்டு, மகாத்மா காந்தி இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்ததும் அவரைச் சிறைக்கனுப்ப வில்லையா? அவருக்கு ஒரு பேட்டிகூட அளிக்க மறுக்கவில்லையா வைசிராய் பிரபு? ஆனல், இன்றைக்கோ வைசிராய் பிரபு தானகவே மகாத்மாவை அழைத்துப் பேசுகிறார். காரணம் என்ன? காரியம் எப்படியாவது ஆகவேண்டும்.

இந்தப் பழைய சம்பவங்களெல்லாம் நாம் மறக்க முடியாது. மறந்தால் நமக்கே போராபத்து. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன் எப்பொழுதும் ஒப்பந்தமும், சமரசமுமே இருக்க முடியாது. அதை முறியடிப்பது ஒன்று தான் நமது கடமை. 'சாணக்கியம்' செய்து அதைக் கவிழ்த்து விடலாம் என்பதெல்லாம் வெறும் பகற்கனவு. அதை முறியடிக்க இந்திய மக்கள் நேரடிப் போராட்டத்தில் இறங்கினுல்தான் முடியும். ஆகவே, மக்கள் ஏமாறுமல், இந்த தேசத்து மக்கள் யாவரும் வேண்டாமென்று நிராகரித்திருக்கும் இந்த சமஷ்டியை—அதற்கு எப்படிப்பட்ட முலாம் பூசினுலும் சரிப்புகுத்தி, அடிமைத்தளைகளை இறுக்க முயற்சி செய்தால், ஏகாதிபத்தியத்தையே முறியடித்து, ஜனநாயக சுய ஆட்சியை ஸ்தாபிக்க முற்பட வேண்டும். இதில் சிறிதளவும் ஏமாற வேண்டாம்.

## புது வாழ்வு

மலர்சூடி விளையாட என்ற மெட்டு.

பல்லவி

பேற வேணும் புதுவாழ்வு
தொழிலாளரே—நீங்கள் (பேற)

சரணங்கள்

கறையான்கள் புத்தெடுக்கும் கருநாகம் குடியிருக்கும்
காதை காட்டும் பேதைவாழ்வைத்
தீதென்றோட்டச் சேர்ந்துநீங்கள் (பேற)

ஒற்றுமை ஊக்கத்தாலே உன்னத நோக்கத்தாலே
உடைந்து தகர்ந்து சிதைந்த வாழ்வை
மூடைந்து வலிமை யடைந்து நீங்கள் (பேற)

சங்கங்களி லபிமானம் தக்க விஷயஞானம்
சார்ந்து பேதம் தேய்ந்து இன்பம்
சூழ்ந்துவாழத் தேர்ந்துநீங்கள் (பேற)

அற்புதம் கலகலக்கும் ஆனந்தம் தழைதழைக்கும்
அருமையான புதியலோகம்
பெருமையாக உதித்த நீங்கள் (பேற)

—ப. ஜீவானந்தன்.

(18-ம் பக்கத் தொடர்ச்சி)

செய்து வைக்க வேண்டுமென வல்லரசுகளை கெஞ்சுகிறார்கள்.

சென்ற உலக மகா யுத்தத்தினால் கொள்ளை லாபம் பிரெஞ்சு பூர்ஷ்வாக்களுக்கு கிடைத்தது. முன்னேற்றமும் அடையவில்லை. மற்றோர் உலக யுத்தத்தில் பலியிட மக்களை பழக்கி வருகிறார்கள். ஜெர்மன் பூர்ஷ்வாக்களின் ஆயுத விஸ்தரிப்பைக் கண்டு, இதாலி பூர்ஷ்வாக்களின் ஆயுத விஸ்தரிப்பைக் கண்டு; பிரெஞ்சு பூர்ஷ்வாக்களும் ஆயுதங்களை விருத்தி செய்து கொண்டே போகிறார்கள்.

மேலே குறிப்பிட்ட பிரிட்டன், அமெரிக்கா, ஜெர்மனி, இதாலி, ஜப்பான் போன்ற நாடுகளில் பொருள்கள் உற்பத்திக்கு முக்கியமான நிலம், தொழிற்சாலை, இயந்திரம், விளைபொருள்கள் முதலியன அந்தந்த நாட்டு முதலாளிகளுக்கே சொந்தமாக்கப் பட்டிருக்கிறது அந்தந்த நாட்டு முதலாளிகள் அவரவர்கள் இஷ்டப்படி உலக மார்க்கட்டுகளில் எந்த சாமான்கள் தேவையோ அதை செய்கிறார்கள்.—அதோடு எந்த சாமான்களில் அதிக லாபம் வருமோ அதையே பிரதானமாக செய்கிறார்கள். இவர்கள் ஜனங்களுக்கு எந்த பொருள்கள் மிக அவசியம் என்பதை கவனிப்பதுமில்லை; அதைப்பற்றி கவலைப்படுவது மில்லை. ஆனால் சோவியத் ரஷ்யாவில் மட்டும், மற்ற முதலாளித்வ நாடுகளில் உற்பத்திக்கு உரிய சாதனங்கள் பொருள்கள் முதலியவை முதலாளிகளுக்கு சொந்தமாக இருப்பது போல் இல்லாமல், ரஷ்யமக்களின் பொதுச் சொத்தாவே இருந்து வருகிறது. ஜன சமூகத்திற்கு எது எது தேவை என்று முன் கூட்டியே கணக்கெடுத்துக்கொண்டு, அந்த சாமான்களை செய்ய எவ்வளவு காலம் பிடிக்குமென்றும் தெரிந்துக்கொண்டு, மக்களிடையே வேலைகள் ஒப்படைக்கப்படுகின்றன. மக்கள் கூட்டுறவில் குறிப்பிட்ட வேலைகளை செய்து முடித்துவிடுகிறார்கள். மக்களுக்கு எவ்வளவு தேவையோ எவ்வளவு அவசியமோ அவ்வளவு தான் வேண்டிய பொருள்கள் செய்யப்படுவதால், எல்லா மக்களும் அவைகளை அனுபவிக்கிறார்கள். முதலாளித்வ நாடுகளில் தொழிற்சாலை ரயில், கப்பல், டிராம், பஸ், கட்டிடம் சினிமா, நிலம் முதலியன முதலாளிக்கு சொந்தமென்றிருப்பதால், நிலத்தின் விளைவையும், மற்றவைகளில்வரும் லாபத்தையும் சிலரே அடைகின்றார்கள். சோஷியலிஸத்தின்படி நிலத்தில் வேலை செய்தவர்களுக்கும், பொருள்களை உற்பத்தி செய்தவர்களுக்குமே அதன் பலன்கள் கிடைக்க வேண்டும். ஆனால் முதலாளித்வ நாடுகளில் ஜன சமூகத்திற்கு சேரவேண்டியதை, சொந்தம் என்ற பெயரைக் கூறிக்கொண்டு அந்தந்த நாட்டு முதலாளிகள் ஆண்டு அனுபவித்து வருகின்றனர். அதோடு முதலாளிகள் தங்களது என்று சொல்லிக் கொள்ளும் பொருள்களை என்ன செய்தாலும் ஏன் என்று யாரும் கேட்ககூடாதாம்! அமெரிக்காவில் சில வருடங்களுக்குமுன், அம்பாரம் அம்பாரமாக கோதுமைகளையும் காப்பிக்கொட்டைகளையும் குவித்து நெருப்பிட்டு கொளுத்தினார்கள் முதலாளிகள் (தகரடப்பாவில் அடைத்திருந்த)—பால் டின்களை கடலில் கொட்டினார்களாம். ஆனால்அதே அமெரிக்கா தேசத்தில் சாப்பாட்டிற்கு கோடிக்கு மேலான மக்கள் லாட்டிரி அடித்துக் கொண்டிருந்தார்கள். ஆயிரக் கணக்கான குழந்தைகள் பாலின்றி கத்திக் கொண்டிருக்கின்றன. முதலாளிகள் கூறியது என்னவெனில், இந்த பொருள்களை நாசமாக்குவதின் மூலம், இந்த பொருள்களுக்கு மார்க்கட்டில் கிராக்கியை உண்டாக்கி, பிறகு அதிக லாபத்திற்கு இனி விளையும் பொருள்களை விற்கலாமென்றார்கள். இந்த பைத்யக்கார செயல்களை சோவியத் ரஷ்யாவில் காணவே முடியாது. அந்தந்த தேசத்திலுள்ள முதலாளிகளே, ஆட்சியை கைப்பற்றி தங்கள் சௌகரியப்படியே மக்களை அடக்கி ஒடுக்கி ஆண்டு வருவதால், இந்த முதலாளிகளின் பைத்யக்கார செயல்களைநிறுத்த முடிவதில்லை. அதோடு நிலக்கரி, இரும்பு, எண்ணெ, முதலியவைகளை ஒரு தேசத்தாரிடமிருந்து மற்றொரு தேசத்தார் கைப்பற்றிக் கொள்ளவே ஒரு நாட்டின்மீது மற்றோர் நாடு வலுச்சண்டைக்குப் போகிறது. ஸார், ரூர், மெசபடோமிய ஜர்மன் கீழ் ஆப்பிரிக்கா முதலிய நாடுகளிலுள்ள மண்ணெண்ணெ, நிலக்கரி முதலிய சுரங்கங்களை கைப்பற்றவே முதலாளித்வ நாடுகளால் சென்ற உலக மகாயுத்தம் கிளப்பப்பட்டது. இந்த சுரங்கங்களை பொதுப் பொருளாக்கி விட்டால் இதன் விஷயமாக மூர்க்கமான போர்கள் ஏற்படப்போவதில்லை. லக்ஷக் கணக்கான மக்கள் யுத்தத்தில் மாளவேண்டியது மில்லை, அந்தந்த முதலாளித்வ அரசுகள், சண்டைகளைக் கிளப்பிவிட்டு மக்களை கொல்லவும் முடியாது. இந்த சுரங்கங்களில் வேலை செய்வோரை அரைப்பட்டினி போட்டு வதைக்கவும் முடியாது. அதிகப்படியான மக்களுக்கு அதே சுரங்கங்களில் வேலையும் கொடுக்கலாம் என்று சோவியத் ரஷ்யா உலகிற்கு எடுத்துக்காட்டுகிறது.

# சோவியத் ரஷ்யாவில்
# சோஷியலிஸத்தின் வெற்றி

முதலாளித்வ நாடுகளில் கோடிக்கணக்கான மக்கள் வேலையில்லாமல் திண்டாடுகிறார்கள். திடீர் திடீரென்று தொழிற்சாலைகளை லாபம் சரியாகக் கிடைக்கவில்லை என்று கூறி முதலாளிகள் மூடிவிடுவதால் லக்ஷக்கணக்கான மக்கள் பசியோடும் பட்டியோடும் சாகின்றனர். இவைகளைப் போக்க ஓர் வழிதான் உண்டென சோவியத் ரஷ்யா தெரிவிக்கிறது. அதாவது நிலம் பொருள் உற்பத்திக்குரிய சாதனங்கள் பொதுவுடமையாக்கப்பட்டால் வேலையில்லாமை ஒழிந்து போகுமென்கிறார்கள். இது உண்மை என்பதையே இன்று நாம் சோஷியலிஸம் வெற்றி அடைந்திருக்கும் ரஷ்யாவில்பார்க்கிறோம். தனிவுடமைத் திட்டத்தை ஒழித்து பொதுவுடமைத் திட்டத்தை அந்த தேசத்து மக்கள் ஏற்படுத்திக் கொண்டால், நாட்டிலுள்ள சகல மக்களும்சாஸ்வதமாக வேலைகொடுக்கலாமென்கிறார்கள் கம்யூனிஸ்டுகள். வேலைநேரத்தை குறைத்து அதிகப்படியாக தொழிலாளர்களை வேலை செய்யச் சொல்லலாமென்றும், ரோடு போக்கு வரத்திற்கு வசதி, சுகாதார வசதி, ரயில் பஸ் வசதி, முதலியவைகள் சகலருக்கும் அவசியமாதலால் இந்த வேலைகளை இப்பொழுதுள்ள மக்களைப் போன்று பல மடங்கு மக்களுக்கு வேலை கொடுக்கலாம். மக்கள் வாழ கோடிக்கணக்கான வீடுகள் தேவையாய் இருக்கிறது. துணிகள் பேல் பேல்களாக வேண்டிகிறது. தொழிலாளர் விவசாயிகளுக்கும் அவர்களது குடும்பங்களுக்கும் கல்விகற்றுக் கொடுக்க லக்ஷக் கணக்கான உபாத்தியார்கள். தரிசாகக்கிடக்கும் நிலங்களை உழுது பயிரிட கோடிக் கணக்கான மக்களுக்கு வேலை கொடுக்கலாம். இதை நடை முறையில் இன்று சோவியத் ரஷ்யா, தனது நாட்டில் செய்து காண்பித்ததினாலேயே, சோஷியலிஸம் வெற்றியடைந்ததென நாம் கூறுகிறோம். குரங்கின் கையில் பூமாலை அகப்பட்டுக் கொண்டிருப்பது போல் முதலாளிகள் கையில் மூலதனம் அகப்பட்டிருப்பதாலேயே உலக திண்டாட்டம் நிலவி வருகிறது. குரங்கின் கையிலுள்ள பூமாலையை பிடுங்க கோல் எடுத்தால் போதும், அதுபோல் முதலாளிகளிடமுள்ள சொத்து, உற்பத்தி சாதனங்கள், நிலங்கள், தொழிற்சாலைகள், பாங்குகள், போக்குவரத்து சாதனங்கள் முதலியவைகளை பொதுவுடமை யாக்க வேண்டியது அவசியமாதலால் முதலாளித்வ அரசாங்கங்களையும் தொழிலாளர்களின் புரட்சியின் மூலம் அடியோடு கவிழ்த்து உழைப்பாளர்களின் சர்வாதிகாரத்தை ஏற்படுத்த வேண்டுமென கம்யூனிஸ்டுகள், கூறிவருகிறார்கள். இதைத் தவிரவேறு வழியில்லை என்று சோவியத் ரஷ்யாவும் உலகிற்கு எடுத்துக் காட்டிக்கொண்டே வருகிறது. மேதினத்தன்று ஒவ்வொரு தொழிலாளியும் பூர்ஷ்வா ஆட்சியை புரட்சி மூலம் அழித்து, உழைப்பாளர்களின் சர்வாதிகாரத்தை நிலைநாட்டவேண்டும் என்ற விரதம் எடுத்துக்கொள்ள வேண்டும். அதோடு இதையே அக்கம்பக்கத்திலுள்ளவர்களுக்கு பிரசாரம் செய்துவர வேண்டுமென்றும், முதலாளித்வ நாடுகள் கிளப்பும் யுத்தங்களையே உள் நாட்டு யுத்தங்களாக மாற்றி தொழிலாளர் ஆட்சியை ஸ்தாபிக்கப் பயன்படுத்திகொள்ளவேண்டுமென்றும் சோவியத் யூனியனை இன்று முதலாளித்வ நாடுகளின் எதிர்ப்பிலிருந்து காப்பாற்ற உலகத்திலுள்ள சகல தொழிலாளர்களும் உறுதி கொள்ளவேண்டுமென்றும் சதா பிரசாரம் நடத்திவருவதே சோஷியலிஸ்டுகளும் கம்யூனிஸ்களும் அவர்களது கடமையில் முக்கியமானதாக எண்ணி நடந்துவர வேண்டுமென்று சோவியத் ரஷ்யா பறை சாற்றுகிறது. அதோடு நின்றுவிடாது கஷ்டப்படுகின்ற பெருவாரியான மக்களிடம் சோஷியலிஸத்தின் கீழ் அவர்கள் சுகமாக வாழலாமென்பதையும், வகுப்புகளற்ற சமூகம் ஏற்பட்டாலொழிய மக்கள் துன்பம் நீங்காதென்பதையும் புரியும்படி அவர்களிடம் பிரசாரம் புரிதல் வேண்டும்.

ரஷ்ய நாடு உலகில் ஆறில் ஒரு பாகமென்பதற்காகவோ, அல்லது அதன் கரைகளில் 5 கடல்களின் அலைகள் அடித்துக் கொண்டிருக்கின்றன என்பதற்காகவோ அல்லது அழகிய மலைத் தொடர்கள், அகலமான வயல்கள், அடர்ந்த காடுகள், ஆழமான ஆறுகள் இருக்கின்றன என்பதற்காகவோ இன்று கம்யூனிஸ்டுகள், சோஷியலிஸ்டுகள் ரஷ்யாவைப் போற்றிப் புகழவில்லை. கணக்கற்ற தொழிலா வேலை நிறுத்தங்கள், பிரமாண்டமான ஊர்வலங்கள், தொழிலாளரின் மாபெரும் கிளர்சிகள், முதலாளித்வத்தோடு — ஏகாதிபத்யத்தோடு நடத்திய போராட்டங்கள், தோழர்கள் லெனின், ஸ்டாலின் தலைமையின் கீழ் உலக தொழிலாளர்கள்புரட்சியை ரஷ்யாவில் நடத்தி அடைந்தவெற்றிகள்-ரஷ்யாமீது படையெடுத்த14 முதலாளித்வ ராஜயங்களின்படைகளை ரஷ்யபடைகள் விரட்டிஅடித்தவைகள், உலகப்புர புரட்சிக்கு இடையராது பாடு பட்டுக் கொண்டிருக்கும் சோவியத்ரஷ்யாவை ஒவ்வொரு

சோஷியலிஸ்டும் கம்யூனிஸ்டும் பாராட்ட, காப்பாற்ற, கடமைப் பட்டிருக்கிறான். சோவியத் ரஷ்யாவிற்கு விரோதமாக எந்த காரணத்தைக்கொண்டும் எந்த சோஷியலிஸ்டும் கம்யூனிஸ்டும் எதிரான பிரச்சாரம் புரிய மாட்டான். இன்று முதலாளித்வ நாடுகளில் சில பூர்ஷ்வாக்களின் கையாட்கள் தாங்களும் கம்யூனிஸ்டுகள், சோஷியலிஸ்டுகள் என்று கூறிக்கொண்டு, ரஷ்யாவிற்கு விரோதமாக பிரச்சாரம் செய்கிறார்கள். இவர்கள் போலிகள் என்பதை மக்கள் உணர வேண்டும்.

சோவியத் ரஷ்யாவில் கம்யூனிஸ்டுக்கக்ஷி ஒற்றுமையைக் கெடுக்க, டிராட்ஸ்கிஸ்டுகள், ஜினோவிஸ்டுகள் முதலானோர் செய்த சதிகளெல்லாம் கண்டு பிடிக்கப்பட்டு, அந்த சதிகளுக்கு உடந்தையாய் இருந்தவர்களுக்கு தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது. பாஸிஸ்டு ஏஜெண்டுகளாக மாறி மேற்குறிப்பிட்டவர்கள் செய்த பயங்கரச் செயல்களையும்—சின்னஞ் சிறு கலகங்களையும் ரஷ்யமக்கள் சகலரும் தெரிந்துகொண்டார்கள். அந்த பாஸிஸ்டு கைஆட்கள் கூட்டங்கள் அடியோடு ஒழிக்கப்பட்டாய் விட்டபடியால் சதிகார கூட்டம் ஒன்றுகூட ரஷ்யாவில் இன்று இல்லையென தெரிகிறது.

ரஷ்ய தேசத்து மக்கள் மட்டுமல்ல ஆனால் உலக உழைப்பாளி மக்கள் அனைவரும் ஐக்கியசோவியத் சோஷியலிஸ்டு ரஷ்யாவில் வெற்றி பொருந்திய சோஷியலிஸத்தை பரிட்சிக்கலாம். தோழர் ஸ்டாலின் தலைமையின்கீழ் ரஷ்ய கம்யூனிஸ்டுக் கக்ஷி, கக்ஷி வேலைகளை சரிவர நிறைவேற்றி வருவதையும் பரிட்சிக்கலாம். இந்த வேலைப்பாடுகளெல்லாம் கட்சி வேலையாய் இருப்பதோடு, ரஷ்ய நாட்டின் வளர்ச்சி வேலையாய் இருக்கிறது. அதோடு ரஷ்ய மக்களின் சதையும் ரத்த மும்மேரஷ்யாவில் நடந்தேறிவரும் வேலையாய் இருக்கிறது. ரஷ்ய மக்களும் தொழிலாளர்களும்—கூட்டுப் பண்ணை விவசாயிகளும், ரஷ்யாவில் போடும் திட்டங்களை நிறைவேற்றுவதில் நீ முந்தி—நான் முந்தி என்று போட்டி போடுகிறார்கள். சோவியத் ரஷ்யாவின்மேல் படை யெடுக்கும் எந்த நாட்டாரையும் எதிர்க்க செஞ்சேனையும், ரஷ்யாவிலுள்ள ஒவ்வொரு ஆணும் பெண்ணும் எப்பொழுதும் தயாராய் இருக்கின்றனர். ரஷ்ய ஆகாயப்படை எதிர்க்கும் நாட்டை சாம்பலாக்கும் வலிமை பெற்றிருக்கிறது. எங்கு நோக்கினும் தோழர் ஸ்டாலின் நீடூழி வாழ்க, உலக தொழிலாளர்கள் புரட்சி ஓங்குக! என்ற கோஷங்களை சர்வ சாதாரணமாக கேட்கலாம்.

—:O:—

# தொழிலாளர் உலகம்

## சென்னை

20ம் தேதி பல சங்கங்களின் சார்பில் ஓர் பொதுக்கூட்டம் சென்னையில் நடைபெற்றது. அச்சமயம், 22ம் தேதி கூடப் போகும் மகாநாட்டில் தொழிலாளர்களின் உரிமைகளைப்பற்றி சர்க்கார் கொண்டு வரும் மசோதாவைப்பற்றி தொழிலாளர்களின் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்காக ஆலோசிக்கப் பட்டது.

* * *

இதற்கு முன்னதாக மதராஸ் பிரஸ் லேபர் யூனியன் வரப்போகும் தொழிலாளர் சட்டத்தைப்பற்றி ஆழ்ந்து ஆலோசித்தது.

* * *

22ம் தேதி தொழில் மந்திரி கனம் வி. வி. கிரி ஓர் தொழிலாளர் முதலாளி மகாநாடு கூட்டினார். வேலையில்லாத் தொழிலாளர்களுக்கு உதவி, சங்க அங்கீகாரம், சமரஸ போர்ட்டு, என்ற மூன்று விஷயங்கள் ஆலோசிக்கப்பட்டன. சீக்கிரத்தில் சட்டம் வருமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

* * *

சனிக்கிழமை (23-4-38) சென்னை சர்க்கார் அச்சுத் தொழிலாளர் சங்கத்தின் வருடாந்திர அங்கத்தினர் கூட்டம் நடைபெற்றது. அதில் தோழர் பி. ஆர். கே. சர்மாவைத் தலைவராகவும், ஐசாமி, நாராயணசாமி இருவரும் முறையே, காரிய தரிசி, உப காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

* * *

மதராஸ் பிரஸ் லேபர் யூனியன் தொழிற் சங்க சட்டப்படி ரிஜிஸ்டர் ஆகிவிட்டது. தற்சமயம் 630 அங்கத்தினர்கள் இருக்கின்றனர்.

* * *

### டிராம்வே தொழிலாளர்கள் வெற்றி

வேலையிலிருந்து தள்ளப்பட்ட 8 தொழிலாளர்கள் மீண்டும் வேலைக்கு எடுத்துக் கொள்ளப் பட்டார்கள். இது டிராம்வே தொழிலாளர்களின் தைரியத்தினாலும் கட்டுப்பாட்டினாலும் கிடைத்த வெற்றியாகும்.

இன்னும் வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டிய 5-பேர்களுடைய விஷயத்தை சமாதான போர்டிற்கு அனுப்பப் போகிறார்கள் சர்க்கார்.

* * *

## அரக்கோணம்

அரக்கோணம் எம். எஸ். எம். பிரான்சு ரயில்வே தொழிலாளர்களின் 5-வது மகாநாடு சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் 48 ஆயிரம் தொழிலாளர்களின் நிலைமை குறித்து ஆழ்ந்து யோசித்ததுடன் தொழிலாளர்களுக்கு விரோதமான தொழில் தகராறுச் சட்டத்தைக் கண்டித்தும், இன்னும் தொழிலாளர்களுக்குச் சாதகமான பல தீர்மானங்களும் நிறைவேறியது. அது சமயம் பல தொழிலாள தோழர்கள் பிரசங்கம் செய்தார்கள்.

## விழுப்புரம்

திண்டிவனம் மோட்டார் தொழிலாளர் சங்கத்தின் ஆண்டு விழா தோழர் ப. ஜீவானந்தன் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. அது சமயம் தோழர் தயனந்தபாரதி சிகப்புக் கொடியை ஏற்றிவைத்தார். தோழர் ப. ஜீவானந்தம் தொழிலாளர் இயக்கத்தின் சரித்திரத்தைப் பற்றி நீண்டதோர் பிரசங்கம் செய்தார்.

## மதுரை

மதுரை மில் தகராறு தீர்ந்தது. மீண்டும் மில் வேலை செய்து வருகிறது. தொழிலாளருக்கும், முதலாளிக்கும் ஏற்பட்ட தகராறை விசாரணை செய்வதற்காக லேபர் கமிஷனர் டி. என். ஸ்டாதியை நியமித்திருக்கிறார்கள்.

விசாரணை ஆரம்பமாய் விட்டது. லேபர் யூனியன் காரியதரிசியும் மில் மானேஜரும் தங்கள் கோரிக்கைகளை எழுதி கோர்ட் முன் சமர்ப்பித்தார்கள்.

## ஆலப்புழை

ஆலப்புழையில் சமீபத்தில் போலீஸார் செய்த தடியடிப்பிரயோகத்தால் ஒரு தொழிலாளி உயர் துறந்தான்.

இச்சம்பவம் தொழிலாளர்களிடையே சர்க்கார் மீது அதிருப்தியையும், ஆத்திரத்தையும் உண்டு பண்ணியிருப்பதோடு பொது ஜனங்கள்கூட சர்க்கார் மீது அதிருப்தி அடையும்படி செய்து விட்டது. இதை சமாளிப்பதற்காக திருவிதாங்கூர் சர்க்கார் வெளியிட்ட அறிக்கை தொழிலாளி ஓடும்போது கால் இடறி கீழே விழுந்து உயிர் நீத்ததாக சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

## தூத்துக்குடி

23-4-38 மாலை மில் தொழிலாளிகள் கூட்டம் ஒன்று தோழர் சாமுவேல், தலைமையில் கூடியது. தோழர்கள் சங்கர நாராயணன், முத்து நாயகம் முதலியவர்கள் பேசியபின் கீழ்கண்ட தீர்மானம் நிறைவேறியது.

"மதுரை மில் தகராரில் தலையிட்டு ஓர் விரும்பத்தக்க முடிவு கட்டியசென்னைமந்திரி சபையை இக்கூட்டம் பாராட்டுகிறது.

* * * *

## துறைமுகத் தொழிலாளர் சங்கம்

25-4-38 மாலை மேற்படி தொழிலாளர் சங்க காரியதரிசி தோழர் சங்கர நாராயணன் தலைமை வகித்தார். பலர் சங்கத்தின் அவசியத்தைப் பற்றிப் பேசியபின் நிர்வாகக் கமிட்டி ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்ட பின் கீழ்க் கண்ட தீர்மானம் நிறைவேறியது.

தொழிலாளர்களுக்கு துறைமுகத்தில், ஜலவசதி, சாப்பாட்டு வசதி போன்ற வசதிகள் செய்து கொடுக்கப்பட வேண்டு மென்றும், வாராவாரம் கூலி உயர்த்தப்பட வேண்டு மென்றும், தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

* * * *

### அச்சுத் தொழிலாளர் மகாநாடு

மே மாதம் இரண்டாவது வாரத்தில் மேற்படி மகாநாடு நடைபெறும். மகா நாட்டிற்கு பல தேசிய வாதிகளும், சோஷியலிஸ்டுகளும் அழைக்கப்பட்டிருக்கின்றனர்.

## கொச்சி

கொச்சி தொழிலாளர் யூனியன் மே தினத்தன்று 5-வது வருட ஆண்டு விழாவைக் கொண்டாடும்.

## மங்களூர்

மங்களூர் பீடித் தொழிலாளர சங்கத் தலைவராகயிருந்த R. R. தபால் சேகர் காங்கிரஸ் அபேட்சகரை முனிசிபல் தேர்தலில் எதிர்த்ததால் தபால், யூனியனிந்து வெளியே தள்ளப்பட்டார்.

## ஆமதாபாத்

இங்குள்ள காலிக்கோ மில்லின் முதலாளிகள் ஏற்கனவேயிருந்த சம்பளத்தை விட தொழிலாளர்களின் சம்பளத்தைக் குறைத்து நிர்ணயம் செய்திருப்பதால் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்கின்றனர்.

## நாகபுரி

நாகபுரியில் நடந்த தொழிலாளர் மகாநாட்டில் தொழில் சங்க காங்கிரஸ் கொடி சிவப்புக்கொடியாய் இருந்தபோதிலும், தனி ஹோதாவில் சங்கங்கள் சம்மட்டி அரிவாள்கொடியில் போட்டுக் கொள்ளலாம் என்று தீர்மானிக்கப்பட்டது.

# முதலாளித்துவத்தின் முடிவு

—(பா. நடராஜன்)—

வாழைக்குத் தானீன்ற குலேயே கூற்றம். முதலாளித்துவமும் தன் பலா பலன்களாலேயே தன் நாசத்தைத் தேடிக் கொள்ளுகிறது. தான் வளர வளர முரண்பாடான சக்திகளைத் தன்னுள்ளேயே தோற்றுவிக்கிறது. இந்த முரண்பாடான சக்திகள் ஒன்றோடொன்று போர் செய்து இறுதியில் முதலாளித்துவத்தையே அழித்து விடுகின்றன. உற்பத்தி முறையில் அபரிமிதமான முற்போக்கை அடைகிறது. பல்லாயிர மக்கள் காலாலும், கையாலும் மெய்வருந்திச் செய்ததை ஒரு சிறு கருவி செய்துவிடுகிறது. இம்முன்னேற்றத்துக்கு ஏற்றபடியாக மக்கள் வாழ்க்கை நலம் முன்னேறவில்லை. புது முறைகளால் பொருள்கள் குவிகின்றன. கொள்வாரில்லை. வாங்க, மக்களுக்குப் பண ஆற்றல் இல்லை. கோடிக்கணக்கான மக்கள் வேலையில்லாது திண்டாடுகின்றனர். உற்பத்திப் பெருக்கம் ஒருபால்; வறுமைப் பிணி மற்றொரு பால்.

காவிரியாறு கரைபுரண்டோடினும் நாய்க்கு நக்கித்தானே குடிக்கலாம். வாங்க ஆற்றலற்றவர்கள் பெருக உற்பத்திப் பெருக்கெல்லாம் நாசத்திற்கே இழுத்துச் செல்கின்றது. பொருளாதார நெருக்கடி தோன்றுகின்றது. ஆலைகள் மூடப்படுகின்றன. வேலையில்லாதார் தொகை விரிகின்றது உற்பத்தி குறைகின்றது. பொருள்கள் விலை ஏறுகின்றன. மீண்டும் புத்தப்புது இயந்திரங்களும், ஆலைகளும் கண்டபடி தோன்றுகின்றன. வாங்கும் ஆற்றல் வறள்கின்றது. மறுபடியும் பொருளாதார நெருக்கடி தோன்றுகின்றது.

இவ்வாறாக நெருக்கடிகள் சுழன்று சுழன்று ஒன்றினுக்கொன்று கொடியதாய் வந்து வந்து வாங்கும் ஆற்றல் இல்லாதார் தொகையையும் வேலையில்லாதார் தொகையையும் பெருக்குகின்றது. ஒவ்வொரு நெருக்கடியும் முதலாளித்துவத்தின் வாழ்வில் ஒரு உயிர்க் கண்டம். முதல் ஒரு சில கண்டங்களை முதலாளித்துவம் தப்பிப் பிழைக்கிறது. ஆனால் ஒவ்வொரு பொழுதும் முன்னினும் அதிகமாக இளைத்து விடுகிறது. இறுதியில் தப்ப முடியாத உயிர்க் கண்டம் வந்துபற்ற அழிவடைகிறது.

இது தடுத்தற்கரிய கர்மபலன். இதை முதன் முதலில் உலகுக்கு எடுத்தோதியவர்கார்ல் மார்க்ஸ்......மார்க்ஸ் பெரிய தீர்க்கதரிசி. தீர்க்கதரிசியென்றால் தான் தேவனின் பிள்ளையென்றோ ஆண்டவனின் அருள் தூதனென்றோ அவர் சொல்லிக் கொள்ளவில்லை. சரித்திரத்தில் சென்ற காலங்களில் நிகழ்ந்ததை வைத்துக்கொண்டு, தன் நுண்ணறிவின் ஆராய்ச்சியால் வருங்காலப் பயன் இதுவாகும் என்று விளக்கினவரே.

ஆனால் முதலாளித்துவம் மார்க்ஸைப் பார்த்து எள்ளி நகைபாடியது. முதலாளித்துவத்தின் வளர்ச்சியினால் தொழிலாளர்கள் வாழ்க்கை நலம் ஓங்கிவிட்டிருக்கிறது என்று சாதித்தது. தொழிலாளர்கள் முன்கண்டறியாத புதுச் சுகங்களை இப்பொழுது அனுபவிக்கிறார்கள் என்று பெருமை அடித்தது. பொருளாதார நெருக்கடிகளின் உக்கிரம் முன்னினும் குறைந்து வருகிறதென்று சொல்லியது. உண்மை இதுவா? புள்ளி விபரமும் சரித்திர நிகழ்ச்சியும் பிறிதன்றோ காட்டுகின்றன.

முதலாளித்துவம் தாண்டவம் செய்வதில் முதன்மையான இரண்டு நாடுகள் பிரிட்டனும், அமெரிக்காவும். பிரிட்டனிலே, மொத்த மக்கள் தொகையில் நூற்றுக்குப் பத்துப்பேர் மொத்த வருமானத் தொகையில் பாதியை அனுபவிக்கின்றனர். மீதிப்பாதி வருமானத்தில் எஞ்சிய தொண்ணூறு பேரும் வாழவேண்டியிருக்கிறது. இவருள்ளே நூற்றுக்குப் பதினைந்து பேர் மிகவறிய இழிந்த நிலைமையில் வாழ்கின்றனர். மொத்த வருமானத்தில் சுமார் கால்பங்கு நூற்றில் ஒன்றரைப் பேருக்கே ஏகபோகமாக ஆய்விடுகிறது. மொத்தச் சொத்தில் சுமார் முக்காற்பாகத்தை மாகாணிப் பங்கு மக்கள் ஆள்கின்றனர். இவற்றின் முழு விபரங்களையும் காலின் கிலார்க்கு National Income and outlay என்ற நூலில் நன்றாகக் காணலாம். அமெரிக்காவிலும் இதே நிலைமைதான். மொத்த வருமானத்தில் சுமார் கால்பங்கு அரை மாகாணிபாகம் குடும்பங்களுக்குப் போய்விடுகிறது. முக்காலே மாகாணிப் பேருக்குமேல் தாழ்ந்த வாழ்வு நிலையில் வாழ்கிறார்கள் என்று "America's Capacity consume" என்ற நூல் முடிவு கட்டுகிறது.

ஜனநாயக முறை வலுத்து முதலாளித்துவம் செழித்திருக்கும் நாடுகளான இங்கிலாந்திலும், அமெரிக்காவிலுமே இவ்வளவு உயர்வு தாழ்வும், வறுமையுமானால் இதர ஜர்மனி, இத்தாலி, ஜப்பான் முதலிய கொடுங்கோல் நிலவும் முதலாளித்துவ நாடுகளைப் பற்றிக் கேட்கவேண்டுமா? இந்த வேற்றுமை—மலைமடு உயர்வு தாழ்வு—சென்ற இருபத்தைந்தாண்டுகளாக இவ்விரு நாடுகளில் எள்ளளவும் குறைவுபடவே இல்லை. ஜனநாயகம் இருந்து என்ன பயன்? முதலாளித்துவத்தோடு கூடின ஜனநாயக ஆட்சி வெறும் பொம்மை ஆட்சியே. வறுமையின் கொடுமைகள் இருநூறு முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்ததை விட அந்த நாடுகளில் ஓரளவுக்கு குறைவுபட்டிருக்கலாம். இருந்தாலும் வறியவர் தொகை குறைந்ததாகக் கூறமுடியுமா? இந்தியாவை எடுத்துக்கொண்டால், முதலாளித்துவம் இங்குத் தலை காட்டினதுமுதல், நாட்டின் பொருள் உற்பத்திப் பெருகியிருப்பினும் வறுமை குறைந்தபாடில்லை; வறுமையின் கொடுமை தணிந்தபாடில்லை. முதலாளித்துவத்தின் சுரண்டலோடு, ஏகாதிபத்தியத்தின் சுரண்டலும் சேர்ந்திருக்கும் பாக்கியத்தைப் பெற்றிருக்கிறோம். போதிய புள்ளி விபரங்கள் இல்லையேயாயினும் பொருளாதாரச் சரித்திரத்தை மேலெழுந்தவாரியாகப் பார்த்து நோக்குவோருக்கும் இதுபுலனாகும்.

கண்ணுள்ளவர்க்கெல்லாம் இந்த உயர்வு தாழ்வு திண்ணமாகத் தெரிகிறது. கருத்துள்ளவர்க்கெல்லாம் அதன் கொடுமை கண்கூடா விளங்குகிறது. நெஞ்சிற் கொஞ்ச மேனும் ஈரமுள்ளவன் அதனைப் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டான். நூற்றிற் பத்துப்பேர் மொத்த வருமானத்தில் நேர் பாதியை அடித்துக் கொள்ள. பாக்கித் தொண்ணூறு பேரும் உழைத்து உழைத்து மீதிப் பாதியை வைத்து வாழும் நிலையிலுள்ள ஒரு சமூகம் நீதியுள்ளதா, நெறியுள்ளதா அதன் வாழ்வு எத்தனை நாளுக்கு?

முதலாளித்துவ அமைப்பென்னும் உடலை மாறி மாறிப் பொருளாதார நெருக்கடிகள் தாக்கின. ஆனால் அவை முன்னிலும் உக்கிரம் குறைந்து விட்டன என்று முதலாளித்துவம் கூறி மார்க்ஸைப் பழித்ததல்லவா? இது எவ்வளவு உண்மை என்று பார்ப்போம், இப்படிப் பழித்தவர்கள் கொட்டமெல்லாம் 1929ல் தொடங்கின பொருளாதார நெருக்கடிக்குப் பிறகு அடங்கிவிட்டது; கூசாது கொக்கரித்த அவர்கள் வாய் இப்பொழுது மண்ணைவாரிப் போட்டுக்கொண்டிருக்கிறது. எள்ளி நகையாடின முதலாளித்துவம் இப்பொழுது இளித்த வாயைக் காட்டுகிறது. 1929ல் தோன்றிய பொருளாதார நெருக்கடி என்றுமில்லாதவாறு எதிர்பாராத முறையில் முதலாளித்துவத்தைக் குலுக்கி மார்க்ஸின் அபூர்வ நுண்ணறிவின் திறனை விளக்கி நின்றது.

இந்த நெருக்கடியின் கொடுமையைக் கண்ட நம்முட் பலர், மார்க்ஸ் கூறின முதலாளித்துவத்தின் கடைசி உயிர்க் கண்டமாக இந்த நெருக்கடி முடியாதா என்று விரும்பினோம். ஆனால் நம் ஆசை நிறைவேற வில்லை. ஒன்றன் பின் ஒன்றாக முதலாளித்துவ நாடுகள் 1929-க்கும் 1932க்கும் இடையில் ஒருவாறாகத் தப்பிப் பிழைத்துக் கொண்டன வென்றே சொல்ல வேண்டும். ஒரு தேசத்திலாவது இந்த நெருக்கடி முதலாளித்துவத்தின் இறுதி நெருக்கடியாக முடியவில்லை. ரஷ்ய சோஷியலிஸ்ட் ஆட்சி எதிர் நின்று மலைபோல் எடுத்துக் காட்டாக விளங்கியும் ஒரு நாட்டிலாவது சோஷியலிஸ்டுப் புரட்சி உண்டாகவில்லை.

1929ல் தொடங்கின நெருக்கடியை முதலாளித்துவ நாடுகள் சமாளித்துக் கொண்டு விட்டன. இங்கிலாந்து வேலை யில்லாத தொழிலாளர்க்கு "டோல்ஸ்" என்ற பிச்சையைக் கொடுத்துச் சமாளித்துக் கொண்டது. இந்த பிச்சை அவர்களுக்கு சாகாமல், உயிர்வாழப் போதியதாக இருக்கிறதே தவிர, நாகரீக வாழ்க்கைச் சவுகரியங்கள் ஒன்றையும் அளிப்பதில்லை. அத்துடன், முதலாளித்துவத்தை எதிர்த்துப் போராடும் சக்தியையும் நசுக்கி விடுகிறது. அமெரிக்காவில் ரூஸ்வல்ட்டின் சற்றுத் தீவிரமான ஏற்பாடுகளால் நிலைமை சமாளிக்கப்பட்டுவிட்டது. இத்தாலி, ஜெர்மனி முதலிய நாடுகளில் முதலாளித்துவம் ஒரு புது அரக்க சக்தியைத் துணையாகக் கொண்டு நிலைமையைச் சமாளித்திருக்கிறது. அதுதான் பாசிசம் எனப்படும் பைசாசசக்தி. இதனால் நெருக்கடியின் காரணமாக இந்த நாடுகளில் முதலாளித்துவம் அழிவதற்குப் பதிலாக அபிசீனியா, ஆஸ்திரியா முதலிய புது வெற்றிகளை அடைந்து வலுக்கொண்டு நிற்கிறது.

முதலாளித்துவம் உதவிக்காகப் படைத்துக் கொண்ட பாசிசம் என்னும் பூதம் பொருளாதாரத் துறைகளைப் பொறுத்த வரையில் முதலாளித்துவத்தின் ஏவலைச் செய்து வருகிறது. ஆனால் அது ஒரு பைசாச சக்தி. கொலையே அதன் உயிர் நாடி.

கொள்ளையே அதன் வாழ்க்கை இன்பம். ஆகவே அந்த அளவில் அது ஆங்கிலேயே முதலாளித்துவமும், அமெரிக்ச முதலாளித்துவமும் நிலைமைகளைச் சமாளித்துக் கொண்டு சும்மாயிருப்பது போல் சும்மா இருந்து விடாது. பாசிசம் எப்பொழுதும் போரிலேயே முனைந்து நிற்கும். அதனால் அந்த நாட்டு முதலாளித்துவங்களுக்கு நிம்மதி இராது. ஆகையால் இன்றோ நாளையோ உலகயுத்தம் வருவது திண்ணம்.

அப்பொழுது தான் சோஷிஸ்டுகள் எண்ணம் நிறைவேறக் கூடும். அப்பொழுது தான் மார்க்ஸின் குறிச்சொல் பலிக் போகிறது. அப்படியான ஒரு யுத்தம் வந்தபோது தான் ரஷியா தன் தளையை அறுத்துக் கொண்டது. பொருளாதார நெருக்கடிகள் போன்ற உட்களைகளால் அழியாத முதலாளித்துவம் உலக யுத்தத்தால் அழியக் கூடும். அழியாவிட்டாலும் தலைகீழ் மாற்றங்களையேனும் செய்து கொள்ளும் நிலைமையை அடையும். இதை அறிந்து தான் ஆங்கில முதலாளித்துவம் இன்று உலகயுத்தத்துக்கு அஞ்சி நிற்கிறது. தன் காலனிகள் போனாலும் போகிறது. மத்தியதரைக் கடலில் தன் வலுக்குறைந்தாலும் குறைகிறது, ஆனாலும் ரஷியப் பொதுவுடமையோடு கலந்து கொள்வதில்லை; அப்படியாக ஹிட்லருடையவும் முசலோனியுடையவும் அதிருப்தியைத் தேடிக் கொள்ளவதில்லை என்றிருக்கிறது. முதலாளித்துவத்துக்கு ஏகாதிபத்தியம் முக்கியமே. ஆனால் ஏகாதிபத்தியத்திலும் தனி உடமையே மிக முக்கியம்.

அங்ஙனமானால் பாசிச நாடுகளும் முதலாளித்துவ நாடுகளாயிற்றே. அவைகள் ஏன் யுத்தத்துக்கு உறுமிக் கொண்டு நிற்கின்றன என்று கேட்கலாம். இதன் விடை முன்னமேயே தரப்பட்டது. பாசிசம் முதலாளித்துவத்தின் ஏவல் சக்தியே ஆயினும் அது இரத்த வேட்கை கொண்டு திரிகிறது. இந்த இரத்த வேட்கை யுத்தத்தினால்தான் அடங்கும். அப்பொழுது வரும் பலா பலன்களை யாரே அறிவர்? இரத்த வெறியைத் தணிக்கும் ஆசையில் தன் காவல் வேலையைக் கைவிட வேண்டிநேரிடும். அப்பொழுது முதலாளித்துவத்தின் கதி அதோகதிதான். முதலாளித்துவம் இதை நன்றாக அறிந்தே இருக்கும். ஆனால் தன்னால் படைத்த பூதத்தைத் தனக்கே அடக்கும் சக்தி முதலாளித்துவத்துக்கு இல்லாமற் போய்விட்டது. இதுதான் பாசிசத்தால் முதலாளித்துவத்துக்கே வரும் ஆபத்து.

ஆகையால் சோஷலிஸ்டுக்களான நாம் என்ன படிப்பினையை உணரல் வேண்டும்? மார்க்ஸின் பொருளாதாரக் கர்ம விதியில் நம்பிக்கை வைத்துக்கொண்டு நாம் வாளா இருந்து விடுவோமானால் முதலாளித்துவம் விரைவில் அழியுமென்று நம்புதற்கில்லை. 1929ல் எழுந்த நெருக்கடியையும் சமாளிக்கக்கூடும்.

முதலாளித்துவம் சூரபதுமனைப்போன்றது. ஒருருவில் அதை அழித்தால் மற்றொரு உருவில் அதுதலை காட்டுகின்றது. ஜன நாயகப் போர்வையை போர்த்துப் பசுப்போல் ஏமாற்றுகிறது. பாசிசப் போர்வையைப் போர்த்துப் புலிப்போல் மிரட்டுகிறது. பொருளாதார சக்திகள் வலு இழக்கும்போது அரசியல் கலந்த சக்திகளைக் கையாளுகின்றது. அதன் தந்திர பலனுக்கு எல்லையே இல்லை. இத்தாலியிலும் ஜர்மனியிலுமிருந்த சோஷியலிஸ்டுக்கள் இதை உணர்ந்திருப்பார்களானால் இன்று பாசிசம் அந்நாடுகளில் தலை யெடுத்தே இராது.

இதற்கு நாம் என்ன செய்வது? முதலாளித்துவத்தை முளையிலேயே கிள்ளுவது எளிது. விடுதலைப்போரே நமக்கு இன்று எல்லாமும். ஏகாதிபத்தியத்தளையை அறுப்பதே மெய்யான சோஷியலிஸ்ட்டின் முதற் கடனாகும். ஆனால் அந்தத்தளை அறுபட்டபின் வரும் விடுதலையும் மெய்யான விடுதலையாக இருக்க வேண்டும். அதைப்பற்றி உருவான திட்டமான அறிவும் இப்பொழுதே ஆணிவேர் விட்டுப் பரவவேண்டும். பின்னும் ஒரு புரட்சி செய்து சோஷியலிஸத்தை நிலைநாட்டுவோம். அப்பொழுது அதைப்பற்றிப் பேசிக் கொள்வோம் என்ற மாயச்சங்கீதங்களுக்குச் செவி சாய்த்தால் பின் முதலாளித்துவம் என்ன தந்திரம் செய்யுமோ? ஜனநாயகப் பசுவேடம் பூண்டு மயக்கலாம்; அல்லது பாசிச உருக்கொண்டு பயமுறுத்தலாம்; அல்லது இன்னும் ஏதேனும் ஒரு புதுப் பூதத்தைப் படைக்கலாம். எதற்கும் நாம் அஞ்சுவோமில்லையாயினும், காலங்கருதிச் செய்யாவினை கட்டுக் கடங்கிப்போகுமே. என்றைக்காவது ஒரு நாள் சோஷியலிஸம் வருவதற்கு நாம் ஏன்?

## கிஸ்தி வசூலை தள்ளிவை

ரயத்துகளின் பொதுக்கூட்டமொன்று பெல்லாரியிலுள்ள சிருகப்பாவில் காங்கிரஸ் ஆபீஸில் நடந்தது. இந்த பிர்காவில் கொடிய பஞ்ச நிலைமையை உத்தேசித்து, சிருகப்பா தாலுக்காவில் கொஞ்சபாகம் வசூலை தள்ளிவைக்க வேண்டுமென்ற தீர்மானத்தைப்பற்றி பலர் பேசிய பின், ஏகமனதாக நிறைவேறியது.



## மான்ஸா கிருஷிகர் மகாநாடு

—:o:—

சென்ற வாரம் இந்திராபூரா கிராமத்திற்கு வெளியே கூடிய மான்ஸா சமஸ்தானத்து கிருஷிகர்கள் மகாநாட்டில், சபர்கந்தா ஏஜன்ஸியுடைய எல்லா சமஸ்தானங்களிலும், மான்ஸா சமஸ்தானத்து கிருஷிகர்களோடு அவ்விடங்களில் உள்ள கிருஷிகர்களும் அவர்களது போராட்டத்தை ஆரம்பிக்கவேண்டும் என ஓர் அறிக்கை மகாநாட்டிலிருந்து வெளிவந்துளது.

படேல் கிருஷிகர்களது நியாயமான கோரிக்கைகளையும், அவர்களது போராட்டத்தையும், தளரா ஊக்கத்தையும் குறிப்பிட்டுவிட்டு, கிருஷிகர்களைப் பொருத்துத்தான் மான்ஸ சமஸ்தானமிருக்கிறதென்றும், சமஸ்தானத்தைப் பொருத்து கிருஷிகர்கள் இல்லை யென்று குறிப்பிட்டார். கிருஷிகர்கள் உறுதியாக கடைசி வரையில் இருக்கும்படி கேட்டுக் கொண்டார்.

சுபர்காரா ஏஜென்ஸியுடைய மற்ற சமஸ்தானங்களின் கிருஷிகர்கள் தலைவர்கள் அடங்கிய கமிட்டி ஒன்று சுபர்காரா ஏஜென்ஸியுடைய எல்லா சமஸ்தான கோரிக்கைகளையும் தயார் செய்வதற்கும், மகாநாட்டை கூட்டவும் எற்படுத்த இந்த மகாநாடு சிபார்சு செய்கிறது என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

நான்கு மாத காலமாக வரிகொடா இயக்கத்தை நடத்தி வரும் மான்ஸா சமஸ்தான கிருஷிகர்கள், வயது வந்தவர்களெல்லாம் ஓட்டு அளிக்கலாமென்ற அடிப்படையை வைத்து 51 நபர்களை ஜனங்கள் சபைக்கு தேர்ந்தெடுக்க துரிதமாக வேலைகள் நடந்தேறி வருகிறது. இந்த சபையே சமஸ்தானத்தின் நிர்வாகத்தை நடத்தும் கிருஷிகர்கசள் கோரிக்கைகளை அங்கீகரிக்கும் வரை, எந்த வித வரியும் சமஸ்தானத்திற்குக் கொடுக்கக் கூடாதென்று தீர்மானிக்கப்பட்டது.

மற்றபடி மேற்படி சமஸ்தானத்திற்கு வரும் இதர வருமானங்களையும் சமஸ்தான கோர்டுகளுக்கு போகாமல் நிறுத்தி விட்டார்கள். பஸ் பகிஷ்காரத்தின் மூலமாகவும் சமஸ்தான ஏகபோக வருமானத்தின் வாயில் மண்ணைப்போட்டார்கள். புது வருடத்திற்கு சாராயக் கடைகளுக்கு லைசென்ஸை புதிப்பித்தால் மறியல் நடக்குமென தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

# ஸ்பெயின் பாஸிஸ்டு மிருக பலத்தை எதிர்க்கிறது !

[கலகக்காரர்களுக்கும், ஸ்பெயின் சர்க்காருக்கும் யுத்தம் நடந்துவரும் பார்ஸிலோனாவிலிருந்து வந்த இக்கட்டுரையை மகிழ்ச்சியுடன் நமது வாசகர்களுக்கு அளிக்கிறோம். காலதாமதமாக வந்ததால், சென்ற வாரத்திலேயே இது பிரசுரிக்க முடியாமற் போயிற்று.]

[வைசெண்டீ ஆரோயோ (பார்ஸிலோனா) ]

ஏராளமான யுத்த தளவாடங்களைக் கொண்டு, இத்தாலியப் படைகளும், ஜெர்மன் படைகளும், தெருவிலிருந்து பிரினீஸ் மலை வரையிலுள்ள ஸ்பெயின் குடியரசு சேனையை பலமாகத் தாக்குகின்றன. குடியரசுப் படைகள் ஒப்பிலா வீரத்துடன் எதிர்த்து நின்றபோதிலும், அவர்களிடமுள்ள யுத்த தளவாடக் குறைவினால், சத்துரு முன்னேறுகிறான். அவர்களுக்கும் நியாயமாகக் கிடைக்க வேண்டிய யுத்த தளவாடங்களை மறுக்கும், 'நடுநிலைமை, நாடகம்தான் இதற்குக் காரணம்.

“ராணுவ நிலைமை கஷ்டமானதே. இதை மறுக்க நான் விரும்பவில்லை. ஆனால் கஷ்டங்கள் தீர்க்க முடியாத அளவாக இல்லை” எனக்குடியரசின் பிரதம மந்திரி நேக்ரின் ஸ்பெயின் மக்கள் யாவரும் கடைசி வரையில் எதிர்த்து நிற்க வேண்டுமென, அவர்களிடம் ஒலி பரப்பும் கருவி மூலம் செய்ததொரு பிரசங்கத்தில். கூறினார்

இதே சமயத்தில், பாஸிஸ்டுக் கொலை பாதகர்கள், திறந்த நகரங்களின் மீது விமானங்களிலிருந்து வெடிகுண்டு வீச்சுகளை மும்முரமாக்குகின்றனர்.

நூற்றுக்கணக்கான வீடுகளைத் த்ரையோடு தரையாய் வீழ்த்தி, ஆயிரக்கணக்கான நிரபராதிகளான தாய்மார்களையும்சகோதரிகளையும், பெண்மணிகளையும், வாயில்லாப் பூச்சிகளான குழந்தைகளையும் மாய்த்து, போர் முனைக்குப் பின்னால் மக்களிடையே பீதியையும், மனத்தளர்ச்சியையும் ஏற்படுத்த பகீரதப் பிரயத்தினம் செய்து வருகின்றனர். குடியரசு மக்களும், குடியரசுப் படைகளும் கீழ்ப்பணிய வேண்டுமென்று துண்டுப் பிரசுரங்களை ஆகாயத்திலிருந்து கீழே எறிகின்றனர் இந்த பாஸிஸ்டுகள் “பாஸிஸ்டுகளின் பலாத்காரத்திற்கு வழி விடு” என்பதுதான் அவர்கள் தொடுக்கும் கூக்குரல்.

ஆஸ்ட்ரியாவிலும், லிதுவேனியாவிலும் இதைப் போன்றே ஆரவாரித்தனர் பாஸிஸ்டுகள். அந்த இரண்டு தேசங்களும் முடி வணங்கியும் விட்டன. அவ்விரண்டு இடங்களிலும், நாஸி பாஸிஸத்திற்கும், போலிஷ் பாஸிஸத்திற்கும் இரையான சர்க்கார்கள் “இந்த மிருக பலத்திற்கு நாங்கள் அடி பணிகிறோம்” எனக் கூறிவிட்டனர்.

“மிருக பலத்திற்கு அடிபணிகிறோம்” என்று ஆஸ்ட்ரிய சர்க்காரும், லிதுவேனியா சர்க்காரும் கூறிய இவ்வார்த்தைகள் அந்த சர்க்கார்களின் சில அங்கத்தினர்கள் மக்களைக் காட்டிக் கொடுத்து அவர்களுக் கிழைத்த பெருந்தீங்கியையும், கோழைத்தனத்தையும் மூடும் போர்வைகளாகும். இரத்த வெறி கொண்டு கர்ஜித்துக் கொண்டிருக்கும் கொலை பாதக பாஸிஸத்தினால் நியாயம், சுதந்திரம், நாகரீகம் ஆகியவைகள் அழிக்கப்படும் போது, ஒதுங்கி நின்று கொண்டு மதில் பூனைக் கொள்கையை அநுஷ்டித்து வரும் மேல்நாட்டு ஜனநாயக நாடுகளின் அரசியல் வாதிகளுக்கு பாஸிஸம் இழைத்த அவமானமும் ஆகும்.

ஆஸ்ட்ரியாவிலும், லிதுவேனியாவிலும் இந்த வெற்றிகளை அடைந்த பிறகு—“நாங்கள் மிருகபலத்திற்கு அடிபணிகிறோம்”—ஸாவதேச பாஸிஸம், மற்ற மக்களையும்—ஸ்பெயின் தேசத்து மக்களுள்பட—அடிபணியுமாறு செய்ய முயற்சி செய்து கொண்டு வருகிறது; நாஜிரைச்வாரின் ஹிட்லர் ஜெர்மனியின் ஆயுதங்கள், சிறிதும் வெட்கமின்றி, ஜிகோஸ்லேவகியாவின் மீது திருப்பப்பட்டிருக்கின்றன; பிரான்ஸின் தென்புறத்திலுள்ள சமாதானமாக வாழ்ந்து கொண்டு வரும், பட்டணங்களுக்கு ஆபத்து ஏற்படும் முறையில், பிரான்ஸ் தேசத்தின் பிரெனிஸ் மலையின் எல்லைப்புறத்தில் ஜர்மான் காலாட்படைகள் ‘முகாம்’ போட்டு விட்டன.

ஆனால் ஸ்பெயின் தேசம் ஆஸ்ட்ரியாவல்ல; லிது வேனியாவுமல்ல. பாஸிஸ்டுக் கொடியர்கள் ஸ்பானியர்களின் வாயிலிருந்து “நாங்கள் மிருகபலத்திற்கு அடிபணிகிறோம்” என்ற வார்த்தைகளைக் கேட்க ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். ஆனால், சென்ற 20 மாதங்களாக வீராவேசத்துடன், பாஸிஸ்டு படைகளை எதிர்த்த ஸ்பெயின் மககள்—ஸ்பெயின் தேசத்தின் உழைப்பாளி, பாட்டாளி மக்கள்—இந்த வார்த்தையை உச்சரிக்கக் கற்றுக் கொள்ளவில்லை; இனி எப்பொழுதும் கற்றுக் கொள்ளவும் மாட்டார்கள். இவ்வார்த்தைகள், ஸ்பெயின் தேசத்து மக்களின் அடிமைத்தளைகளாகும். மற்ற மக்களுக்கும் அவைகள் அடிமைத்தளைகளே என்பதை சரித்திரம் நிரூபித்து விட்டது. இந்த வார்த்தைகளை ஸ்பெயினின் மக்கள், தங்கள் பாஷையிலிருந்தே அகற்றி விட்டனர்.

பாஸிஸ்டுத் துருப்புகளின் முன்னேற்றமும் மத்தியதரைக் கடலோரத்திலுள்ள நகரங்களின் மீது செய்யப்படும் கடுமையான வெடிகுண்டு வீச்சும், ஸ்பெயின் தேசமக்களை பயமுறுத்திவிட வில்லை அதற்கு நேர்மாறாக, பர்ஸிஸத்தின் சொல்லொணாக் கடுமையும், கொடுமையும், ஸ்பெயின் மக்களுக்குள்ளிருக்கும் பாஸிஸ்டு வெறுப்பை பன்மடங்கு அதிகரித்துவிட்டது. சுதந்திரப் போரட்டத்தில் தங்கள் சக்திகளை யெல்லாம் இன்னும் இறுக அணைத்து இணைத்து, கடைசி மூச்சு இருக்கும் வரை பாஸிஸத்தை எதிர்த்து நிற்பது என்று ஸ்பெயின் மக்கள் கங்கணம் கட்டிக்கொண்டு விட்டனர்.

“கடலோனியாவிற்கு ஆபத்து!” இந்தக் குரலைக் கேட்ட மாத்திரத்திலேயே மக்கள் யாவரும் ஒருமித்து, வீராவேசத்துடன் துள்ளிக் குதித்து எழுந்து நின்றனர். பாஸிஸ்டுகளை எதிர்க்கும் வீரப் போராட்டத்தில்,—இன்னும் நெருக்கடியான ஒரு நிலைமையில்—இன்று பார்ஸிலோனாவின் மக்கள், மாட்ரீட் நகர மக்களோடு போட்டி போடுகின்றனர். கடலோனியாவிலுள்ள பல்வேறு ஸ்தாபனங்களிடையே ஒற்றுமையும், ஐக்கியமும் ஏற்படுவதற்கு தடையாயிருந்த முட்டுக்கட்டைகளெல்லாம் தகர்த்தெறியப்படுகின்றன. இதுவரையில் மக்களின் ஐக்கிய முன்னணியில் சேராமலிருந்த அராஜக—ஸிண்டிகலிஸ்டு ஸி. என். டி., ஐபீரியன் அராஜக ஸம்மேளனம், முதலிய ஸ்தாபனங்கள் இன்று முன்னணியில் சேர்ந்து வருகின்றன.

“கடலோனிய, சுய ஆட்சி சங்கம்” என்ற ஸ்தாபனம், யுத்தத்தைக் கடைசிவரை, வெற்றி பெறும் வரையில் நடத்தி, ஸ்பெயின் நிலத்திலிருந்து பாஸிஸ்டுகளைத் துரத்துவதற்கான எல்லா முறைகளையும் மக்கள் கையாள வேண்டுமென ஒரு அறிக்கையை விடுத்திருக்கிறது. கடலோனிய சர்க்காரின் பெயரால்கம்பெனிஸ் என்கிற தலைவர், “கடலோனியாவின் தற்காப்பிற்காக எல்லாச் சக்திகளையும் திரட்ட வேண்டும்” என வேண்டுகோள் விடுத்துள்ளார்.

மார்ச்சு மாதம் 16-ந் தேதி பாஸிஸ்டுக் கொலைகார விமானங்கள், துரெண்ணத்துடன், நகரங்களின் மீது வட்டமிட்டுக் கொண்டிருந்தன. ஆனால் அதே நாளன்று பார்ஸிலோனாவில் மாபெரும் ஆர்ப்பாட்டம் நடந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் குழுமி, பாஸிஸத்தை தலையெடுக்காதவாறு முறியடிக்கும் வரை, யுத்தத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டுமென ஆரவாரித்தனர்.

பாஸிஸ்த்தின் விரட்டல்களுக்கு, இம்மாதிரியான வீராவேசம் கொண்ட பதிலை பார்ஸிலோனாவின் மக்கள் அளித்துக் கொண்டிருந்த அதே சமயத்தில் அதே பார்ஸிலோனா நகரத்தில், ஸ்பெயின் தேசத்திற்கும், சர்வ தேசங்களுக்கும் முக்கியமானதொரு சம்பவம் நடந்து கொண்டிருந்தது. ஸி. என். டி., யூ. ஜீ. டி., என்று இருவகைப்பட்டு பிரிந்து நின்று கொண்டிருந்த மாபெரும் தொழிலாளர் ஸ்தாபனங்கள் ஒற்றுமைப்பட்டு, ஒருமுகப்பட்ட சக்திகளுடன் பாஸிஸத்தை எதிர்க்கும் திட்டத்தில் கையொப்ப மிட்டன. இந்த ஒற்றுமைத் திட்டத்தினால் ஸ்பானிஷ் தொழிலாளி மக்களின் முயற்சிகள் பன்மடங்கு அதிகரித்து, இந்த யுத்தத்தின் கஷ்டங்களையும் அதனால் ஏற்படும் நஷ்டங்களையும் பொறுத்துக் கொள்ள வேண்டிய அளவிற்கு சக்தியையும் அளிக்கும் என்பதில் சந்தேகமேயில்லை.

யூ. ஜீ. டி. யும் ஸி. என். டீயும் சேர்ந்து விடுத்துள்ள அறிக்கை கூறுகிறது:—

“தொழிலாளிமக்களின் எதிர்கால வாழ்க்கைக்கு விரோதமாசக் செய்யப்படும் சூழ்ச்சிகளுக்கு எப்பொழுதும் தொழி

லாளிவர்க்கம் இணங்காது. சத்துருவுடன், செய்து கொள்ளும் ஒப்பந்தத்தையோ, அர்த்தமற்ற பேரத்தையோ அடிப்படையாகக் கொண்டு, தோல்விக்குரித்தான திட்டங்களை எந்தத் தொழிலாளியும் கையாளமாட்டான். தொழிலாளிகளின் கண்கள் இவ்வாறு ஒன்றும் நடக்காவண்ணம் விழிப்புடன் காவல் காத்துக் கொண்டு வருகின்றன. யூ. ஜீ. டீயும், ஸி. என். டீயும், தங்களுடைய ஐக்கிய எதிர்ப்புத் திட்டத்தைப் பிரசுரிக்கும் காலையில், ஸ்பெயின் தேசத்து மக்களுக்கும், உலகம் பூராவிற்கும், உலகத் தொழிலாளி மக்களுக்கும், உலகத் தொழிலாளி மக்களின் சுதந்திரத்திற்காக இன்று ஸ்பெயின் தேசத்து மக்கள் போராடுகின்றனர் — என்று பகிரங்கமாகத் தெரிவித்துக் கொள்கின்றன. அந்த அறிக்கையில் மேலும் நாம் காண்கிறோம்:—

"கடைசிவரையில் எதிர்த்து, நின்று, ஆர்வத்துடன் நடத்திய பெருமுயற்சிகளால் ஏற்படும் சமாதானத்தைத் தவிர வேறெதையும் தொழிலாளிகள் அநுமதிக்கமாட்டார்கள். தொழிலாளி வர்க்கம் ஒரே ஒரு முடிவைத்தான் ஏற்றுக்கொள்ளும்—வெற்றி?.

ஸ்பானிஷ் பாஸிஸ்டு—எதிர்ப்பு மக்களின் மனோநிலையை மேற்கூறிய வார்த்தைகள் நன்கு விளக்குகின்றன. அவர்கள் போராட்டத்தை நடத்துவதற்காக மேற்கொண்டிருக்கும் ஆணையைக் காட்டுகின்றன. சிலநாட்களுக்கு முன்பாக மார்ச்சு மாதம் 15ந் யன்று, ஸ்பானிஷ் கம்யூனிஸ்டு கக்ஷி விடுத்த அறிக்கையையும் ஒட்டியே இருக்கிறது இந்த தொழிற்சங்கங்களின் அறிக்கையும். தொழிலாளர்களுக்கு விடுத்த வேண்டுகோளில் கம்யூனிஸ்டு கக்ஷி கூறியது:—

போராட்டத்தின் நாடி தொழிற்சாலைகளிலும், பாக்டரிகளிலும், அடித்துக் கொண்டிருக்க வேண்டும் ஒவ்வொரு தொழிலாளியும் தன்னல மறுப்பிற்கும் சலியா உழைப்பிற்கும் உதாரணமாய் இருக்க வேண்டும். மெஷின்களிடம் நீங்கள் செய்யும் வேலையில் உறுதியா யிருங்கள்! யுத்த தளவாடங்களைச் செய்யும் தொழிற் சாலைகளில், உச்சாணி ஸ்தானத்தை அடைய வேண்டும் உற்பத்திகள்! யூ. ஜீ. டி ஸீ. என். டி. ஸ்தாபனங்களைச் சேர்ந்த தொழிலாளர்கள், யுத்த தளவாடங்கள் உற்பத்தி செய்வதைப் பன்மடங்கு பெருக்க வேண்டும்! சந்தேகப் பிரஜைகள் ஒழிக! கோழைகள் ஒழிக! தோல்வி மனப்பான்மை ஒழிக! அன்னியப்படை யெடுப்பையும் தேசத்துரோகிகளான ராணுவ அதிகாரிகளையும் எதிர்த்து நிற்கும் சக்திகளைக்குலைக்கும் முயற்சிகள் ஒழிக! பிராங்கோவிற்குப் படு தோல்வி கிடைக்கும் வரை நாம் போராடுவோம்! நமது புண்ணிய பூமியின்மீது படையெடுத்து, நம் நாட்டைத் தன் வசப்படுத்திக்கொள்ள விரும்பும் அந்நியர்களை நாட்டைவிட்டுத் துரத்தும் வரை போராடுவோம்! ஸ்பெயின் மக்களின் முடிவு இதுவே! அவர்கள் ஒரு முகப்பட்டு செய்துள்ள திடமான தீர்மானம் இதுவே! அவர்களுடைய ஒரே விருப்பம் இதுவே! அவர்களுடைய எதிர்காலமும் இதுவேயாகும்?"

ஐக்கிய சோஷியலிஸ்டு வாலிபர் சங்கம் இதுவரை ஆயிரக்கணக்கான வாலிபத்தோழர்களை பாஸிஸ்டு-எதிர்ப்புப் போராட்டத்திற்கு அனுப்பியிருக்கிறது. அதே வாலிபர் சங்கம், இத்தாலியர்களும்; ஜெர்மானியர்களும் ஆரகான் முனையில் சரிந்து வருவதைக் கண்டு, பத்து நாட்களுக்குள்ளே வாலிபர்களின் வாலண்டியர் படைகள் இரண்டு திரட்டப்பட்ட வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தனர். இந்த அப்பீல் மக்களிடையே பரவியதுதான் தாமதம். வயது போதாததால் இது வரையில் படையில் சேராமலிருந்த ஆயிரக்கணக்கான வாலிபத் தொழிலாளிகளும், விவசாயிகளும், படையில் சேர்வதற்காக தாக்கல் செய்து கொண்டனர். தோழர் பாஸனேரியா, "மண்டி யிட்டு உயிர் வாழ்வதைக் காட்டிலும், நிமிர்ந்து நின்று கொண்டு இறப்பதே மேல்" எனக் கூறியதை ஸ்பெயின் மக்கள் இன்று நிரூபிக்கின்றனர்.

மிக மிக அழகான நகரங்களெல்லாம் நாசம் செய்ப்பப்பட்டன. ஆனால் அவைகளுக்குப் பதிலாகப் புதிய நகரங்களும் கோட்டைகளும் காட்டுவதற்காக ஆயிரக்கணக்கான தொழிலாளர்களை ஒன்று சேர்த்திருக்கின்றன ஸி. என். டியும் யூ. ஜீ. டீ. என்ற தொழிற் சங்க ஸ்தாபனங்கள்.

ஸ்பெயினில் பாஸிஸம் மற்ற இடங்களில் கையாளும் முறை—விரட்டலும், உருட்டலும்—தோற்றுவிட்டது. "மிருக பலத்திற்கு முடி தாழ்த்த வேண்டியதுதான்" என்ற குரல் ஒன்று கூடஇன்று ஸ்பெயினில் கிளம்பவில்லை. மக்களில் சில கோழைகளிருக்கலாம் என்றும் வற்றாத ஊற்றாகிய மக்களின் சக்தியிலும் நம்பிக்கையில்லாது எப்படியாவது இந்த யுத்தத்தை நிறுத்தி விட வேண்டும் என நினைப்பவர்கள் சிலர் இருக்கலாம்.

ஆனால், இப்படி நினைப்பவர்கள்கூட, பகிரங்கமாக வெளியே தங்கள் அபிப்பிராயத்தைக் கூறத் துணியவில்லை. ஏனெனில் அப்படிப்பட்ட வார்த்தைகளை மக்கள் வரவேற்க மாட்டார்கள் என்பது அவர்களுக்கு நன்கு தெரியும். தோல்வி மனப்பான்மை கொண்டுள்ள இம்மக்களின் வார்த்தை ஒன்றுக்கும் பிரயோசனமற்ற உதவாக்கரை வார்த்தைகளேயாகும். "மிகமிகக் குரூரமான முறையில் திறந்த நகரங்களின் மீது செய்யப்படும் வெடிகுண்டுவீச்சுக்களைக் கண்டுதிகில் அடைவதாக" எத்தனை சர்க்கார்கள் நீலிக்கண் வடிக்கின்றன? ஆனால், இந்த காரியத்தில், தங்கள் அநுதாபத்தைக் காட்டக் கூடிய காரியங்கள், ஒன்றும் செய்யாத வரையில், இந்தப் பகட்டு வார்த்தைகளுக்கு என்ன மதிப்பு இருக்கமுடியும்? நடைமுறையில் தங்கள் அநுதாபத்தைக் காட்டுவது, எவ்வளவு சுலபமான விஷயம் தெரியுமா? ஸ்பெயின் தேசத்தின் நியாயமான சர்க்காருக்கு—குடியரசிற்கு—ஆயுதங்கள் வாங்கும் உரிமை எப்பொழுதும் உண்டு. இந்த உரிமையை மறுக்காமல், கொடுத்தால் மாத்திரமே போதுமன்றோ! ஸ்பானிஷ் மக்கள் இன்று சலியாத மன உறுதி கொண்டுள்ளனர். 20 மாதங்கள் நடந்த கடும்போரில், அவர்கள் இதயம் வைரம் பாய்ச்சியதைப் போல் ஆய்விட்டது. வெற்றி அடைந்தே தீருவோம் என்ற உறுதி பலப்பட்டு விட்டது. ஆகவே, தோல்விகளெல்லாம்—அவை எந்த யுத்தத்திலும் தவிர்க்க முடியாதன்றோ?—தங்கள் தற்காப்பை அதிகரிக்க பன்முறை ஊக்கமளிக்கின்றன.

ஜனநாயக நாடுகளுக்குவிடுத்த வேண்டுகோளில், "இன்னும் சமயமிருக்கிறது. காலம் தவறி விடவில்லை" எனக் கூறினர் தோழர் லித்வினுப். ஆம்! பாஸிஸத்தின் மார்க்கத்தைத் தடுப்பதற்கு இன்னும் சமயமிருக்கிறது. ஸ்பெயின் தேச மக்கள், அதை எப்படித் தடுக்க முடியும் என்பதை நிரூபித்துக் காட்டுகின்றனர். ஸ்பானிஷ் மக்கள் "மிருக பலத்திற்கு முடி வணங்குகிறோம்" எனக் கூறுவதில்லை.

ஸர்வதேச பாஸிஸம் 'தடதட' வென்று கதவைத் தட்டுகிறது; திடுக்கிடக்கூடிய, துர்நடத்தைகளை வழியெங்கும்பரப்பிக்கொண்டே போகின்றது. ஆகவே, இன்னும் 'வழ வழா'க் கொள்கையிலேயே இருக்கும் சர்க்கார்களுக்கு — உறுதியின்றி மனச் சஞ்சலப்புடன் இருக்கும் சர்க்கார்களுக்கு—ஸ்பானிஷ் மக்களின் தேவைகளை உணருமாறு செய்விப்பது உலகத் தொழிலாளி மக்களின் கடமையாகும்.

—:0:—

(11-ம் பக்கத் தொடர்ச்சி)

நமது மாபெருந் தலைவர்களெல்லாம், இப்படிப்பட்ட ஒருமுறையில் தான் பழைய சமூகம் மாறி, புதிய சமூகம் தோன்றும் எனக் கூறியிருக்கின்றனர். இன்று தினம், நாம் அந்த நிலையை அடைந்துவிட்டோம். கிடுகிடுத்து ஆடிக்கொண்டிருக்கும் இந்த முதலாளித்துவ சமூகத்தைக் கீழே 'சரசர' வென்று வீழ்த்துவதற்கு வேண்டியதெல்லாம் ஒரு தள்ளு—உலகத் தொழிலாளிகளெல்லாம் ஒன்று சேர்ந்து கொடுக்கும் ஒரு உதைதான். ஆனால், மேல் நாடுகளிலுள்ள ஸோஷியலிஸ்டுகளும், கம்யூனிஸ்டுகளும், பீதியடைந்து, முதலாளித்துவத்தின்மீது போர் தொடுக்க மறந்துவிட்டனர். அதற்கு பதிலாக, முதலாளித்துவ "ஜனநாயகத்தை" பாஸிஸ்டு பேயினிடமிருந்து காப்பாற்றுவதற்காக போராட முன் வந்துள்ளார்கள். இன்றிருக்கும் நிலைமையில், இந்தப் போலி 'ஜனநாயக'த்தைக் காப்பாற்றும் முயற்சிகளையெல்லாம் தூரத் தள்ளிவிட்டு, உண்மையான ஜனநாயகத்தை ஸ்தாபிப்பதற்குஇன்றியமையாத சமூகப் புரட்சியை நோக்கிச் செல்லும், புரட்சிகரமான சோஷியலிஸ்டு இயக்கம் இப்பொழுது மிகமிக அவசியமாயிருக்கிறது. அதற்கு வேண்டியசந்தர்ப்பங்களெல்லாம் சரியாக வாய்த்துள்ளன; வேண்டியது சரியான தலைமைதான். பழையயுகம் மாறி, புதுயுகம் பிறக்கும் தருவாயில் நாம் இருக்கிறோம்:—அந்த நவயுகக் குழந்தையைப் பிறப்பிப்பதற்கு வேண்டிய தைரியமும், ஆற்றலும் மாத்திரம் நமக்கு வேண்டும்.

உலகத்தின் முன்னே தோன்றியிருக்கும் இந்த யுத்தப்பிசாசையும், பாஸிஸப் பேயையும் எதிர்ப்பதற்காக, "சமாதானம், ஜனநாயகம்" என்ற சுலோகங்களைக் கிளப்பியிருக்கின்றன ஐரோப்பிய சோஷியலிஸ்டு கம்யூனிஸ்டு இயக்கங்கள்! இப்படிப்பட்ட ஒரு கூக்குரலைக்கிளப்பினால், சோஷியலிஸத்தைக் கண்டு நடுநடுங்கிப் போகக்கூடிய வர்க்கங்களைக்கூட இந்தப்போராட்டத்தில் இழுத்து விடலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. ஆனால், இது சரியான கண்ணோட்டமல்ல என்றே நான் கருதுகிறேன். மத்தியதர வகுப்பினரை ஜாக்கிரதையாக நெருங்கி, அவர்களை நமது பக்கம் இழுக்கவேண்டியது மிகவும் அவசியமானதே. ஆனால், செத்துப்போன 'பூர்ஷ்வா' ஜனநாயகக் கொடியின் கீழ் இருப்பதைக்காட்டிலும், சமூகப்புரட்சிக் கொடியின் கீழ் அவர்களை ஒன்று சேர்த்தால் அதிக பலன் ஏற்படும் என்றே நான் நினைக்கிறேன்.

# இந்திய சோஷியலிஸ்டுகள் செய்யவேண்டியதென்ன ?

சோஷியலிஸ்டுகளாகிய நாம் சமாதானத்தையும், ஜனநாயகத்தையுமே விரும்புகிறோம். ஆனால் முதலாளித்துவம் உயிருடனிருக்கும் வரையில் சமாதானமும், ஜனநாயகமும் ஏற்பட முடியாது என்பதை ஒவ்வொரு மார்க்ஸிஸ்டும் அறிவான். முதலாளித்துவத்தின் கீழ், அரசியல் வேற்றுமைகளும், ஜனநாயகத்திற்கு நேர்விரோதமான, முதலாளித்துவ அரசாங்கமும் இருந்தே தீரும். முதலாளித்துவம் போட்டியைக் கொண்டே ஜீவித்திருப்பதால் உலகம் பூராவும் பரவியுள்ள ஓரே முதலாளித்துவ சமூகம் ஏற்பட முடியாது. அவ்வாறு ஏற்படுவது எனக் கனவிலும் கருதமுடியாது. எனவே உலத்தில் பெருவாரியான நாடுகளில் சோஷியலிஸ்டு சர்க்கார்கள் ஏற்பட்டால் தான், சமாதானமும், ஜனநாயகமும், ஏற்படமுடியும். ஆகவே, சமாதானத்திற்கும், ஜனநாயகத்திற்கும் இன்றியமையாதது, சமூகப் புரட்சி. இதுதான் மார்க்ஸும், லெனினும், நமக்குக்கற்பிக்கும் படிப்பினையாகும்.

"முதலாளித்துவத்தின் கீழ்—அதிலும் குறிப்பாக ஏகாதிபத்திய நிலைமையின் கீழ்—யுத்தங்கள் தவிர்க்க முடியாதவை. தொடர்ச்சியாக நடைபெறும் அநேக புரட்சிகளில்லாமல் ஜனநாயக சமாதானம் ஏற்பட முடியும் என்ற எண்ணம் மிகமிகத் தவறானது" என எழுதினார் லெனின்:

உலகத்திலுள்ள 'ஜனநாயக' நாடுகள், பாஸிஸ்டுவல்லரசுகளை எதிர்த்து நிற்க முடியாமல் இருப்பது, சோஷியலிஸ்டு இயக்கம், சோஷியலிஸ்டு சாஸ்திரத்தின் அடிப்படையான தத்துவங்களை மறந்து போனதின் விளைவேயாகும். "பாஸிஸம் என்பது முதலாளித்துவத்தின் தீவினையேயாகும் "முதலாளித்துவத்தையே! அழிக்கும்படியான சமூகப் புரட்சியால் தான் பாஸிஸத்தையும் நாசம் செம்ய முடியும்" என்கிற உண்மையை மறந்து விட்டதன் பலனை இன்று சோஷியலிஸ்டுகள் அநுபவிக்கிறார்கள்.

ஆனால், இவ்வாறு ஏகாதிபத்ய வல்லரசுகளும், அவர்களுடைய போட்டிகளும் தலைதூக்கி நிற்கும் இந்த உலகத்தில் ஒரு மின்னல் கொடி தோன்றியிருக்கிறது. அதுதான் உலகத்திலிருக்கும் ஓரே ஒரு தொழிலாளிகளின் ராஜ்யம்—ஐக்கிய ஸோவியத் சோஷியலிஸ்டு குடியரசு. இந்த மாபெரும் முதலாளித்துவப் பாலைவனத்தில், அது ஒரு முதல் தரச்சுனைபோல் விளங்குகிறது. ஏகாதிபத்தியத்தின் காலில் கிடந்து நசுக்கப்படும் நாம், அந்தச்சுனையைக் கண்டு அதன் உதாரணத்திலிருந்து உத்சாகமும், மகிழ்ச்சியும் அடைகிறோம். லெனினும், அவர் தோழர்களும், அக்டோபர் புரட்சியை வெற்றிகரமாக நடத்தியவுடன், ரஷ்யத்தொழிலாளி மக்களின் வெற்றி, தங்கள் வர்க்கத்தின் வெற்றி எனக் கண்டனர். மேனாட்டுத் தொழிலாளிகளெல்லோரும். அது மாத்திரமல்ல, கீழ்கோடியிலுள்ள, அடிமைத்தளைகளால் கட்டுண்டு கிடந்த மக்களும், தங்களுக்கு விடுதலை கிடைக்கும் காலம் நெருங்கிவிட்டது என்பதற்கு அறிகுறியாகவே ரஷ்யப் புரட்சியை நினைத்தனர். உலகத்தில் ஒரு புதிய சக்தி தோன்றியிருக்கிறது. ஒரு புதிய வல்லரசு வளர்கிறது. அதன் கொள்கை, தங்கள் நாட்டின் சுய நலத்தையோ, வல்லரசுகளுக்குள்ளேயுள்ள சாணக்யத்தையோ ஆதாரமாகக் கொண்டிராது; தேசம், ஜாதி, நிறம், முதலிய வேற்றுமைகளின்றி, ஒவ்வொரு தேசத்து மக்களுக்குமுள்ள "சுய நிர்ணய உரிமையையும், மனிதவர்க்கத்தின் ஐக்கியத்தையுமே அடிப்படையாக, அஸ்திவாரமாகக் கொண்டிருக்கும். இந்தப் புதிய சக்தியின் கொள்கைகளும், முறைகளும் என்று தேர்ந்திட்டனர் இந்த அடிமை நாட்டு மக்கள். சோவியத் சர்க்கார், பழைய ஜார் மன்னனின் ஸாம்ராஜ்யத்திற்குட்பட்ட அடிமை மக்களிடம் அநுஷ்டித்து வந்த நேச மனப்பான்மை ததும்பும் முறைகளும், சீனாவிலும், பர்சியாவிலும் ஸார் சர்க்காருக்கிருந்து வந்த உரிமைகளைத் தாங்களாகவே மறித்து விட்டதும், கீழ்நாட்டு மக்களுக் குள்ளிருந்த இந்த நம்பிக்கையை அதிகப்படுத்தியது.

இருபது வருஷங்கள் கடந்து போயின. இந்த இருபது ஆண்டுகளில், சோவியத் சர்க்கார் சாதித்தவை அநேகம். சோவியத் மக்கள் அநேக ஆச்சரியகரமான கார்யங்களைச் செய்திருக்கின்றனர். ஆனால், இந்த மகத்தான சாதனைகளோடு, சில தவறுதல்களும் நடந்திருக்கின்றன.

சோவியத் ஐக்கியக் குடியரசின்பாலும், அதன் பிரச்சினைகளின்பாலும், மற்ற நாடுகளிலுள்ள சோஷியலிஸ்டுகள் எவ்வித மனப்பான்மையைக் கொள்ளவேண்டும்? உலகம் பூராவும் பரவியிருக்கும் சோஷியலிஸ்டு சக்திகளின் கோட்டை சோவியத் ரஷ்யா; சோவியத் பரீட்சையை நாம் மிகவும் ஆழ்ந்த அநுதாபத்துடன் கூர்ந்து கவனித்து வருகிறோம்; யுத்தம் நேரிடும்போது, நாம் சோவியத் ரஷ்ய மக்களின் பக்கம் சேர்ந்து நிற்க வேண்டும்; இவையெல்லாம் எல்லா சோஷியலிஸ்டுகளும் சாதாரணமாக ஒத்துக்கொள்ளும் விஷயம். ஆனால் சோவியத் சர்க்காரோ அல்லது ரஷியாவின் கம்யூனிஸ்டுக் கட்சியோ செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் நாம் ஆதரிக்க வேண்டுமா? சோவியத்தைப் பற்றி செயயப்படும் ஒவ்வொரு குணதோஷ விமரிசனத்தையும் நசுக்கி அதற்குப் பரிபூரண ஆதரவு அளிக்க வேண்டியது நமது கடமையாகுமா? இந்தக்கேள்விகள், பெரிய மூளைகளைக் கலக்கிக் கொண்டிருக்கின்றன. உலகம் பூராவுமுள்ள சோஷியலிஸ்டுகள், இவைகளைப் பற்றிப் பரிசீலனை செய்து கொண்டு வருகின்றனர். சோவியத் சர்க்காரின் காரியங்களையும் கொள்கைகளையும், நன்கு பரிசீலனை செய்வதும், அவசியம் ஏற்பட்டால், குண தோஷ விமரிசனம் செய்வதும், நமது உரிமை மாத்திரமல்ல; நமது கடமையுமாகும் என்பதே என்னுடைய அபிப்பிராயம். தவறுதல்களைச் சுட்டிக்காட்டி, நமது புத்திக்கு எட்டியவாறு, திரிகரண சுத்தியுடன் புத்திமதி கூறும் கடமையை செய்யாவிட்டால், ஒவ்வொரு ஆப்த நண்பனும் செய்யவேண்டிய கடமையில் நாம் தவறிவிட்டவர்களாவோம்.

நாம் மனமாரப் போற்றற்குரிய பல நிகழ்ச்சிகள் அங்கே நடந்து கொண்டிருக்கின்றன. ஆனால், நமக்கு வருத்தமும், ஏமாற்றமும் அளிக்கக்கூடிய சில சம்பவங்களும் நிகழ்ந்து வருகின்றன. இவைகளெல்லாம் நாம் எடுத்துக் காட்டாவிட்டால், சோஷியலிஸத்திற்கு நாம் சரியான தொண்டாற்றியவர்களாக மாட்டோம்.

'சத்தியம்' என்பது நாம் என்றும் கைவிட முடியாத ஆயுதமாகும். காங்கிரஸிலுள்ள நமது காந்தி பக்தர்கள், சில சமயங்களில், சத்தியத்தின் மீதும், தங்களுக்கு ஏகபோக்கிய உரிமை இருப்பதாக வாதிக்கிறார்கள். இதை நாம் அழுத்தமாக மறுக்கிறோம்.

வர்க்கவேற்றுமையற்ற சோஷியலிஸ்டு சமூகம் ஒன்றுதான், ஒரு வர்க்கம் மற்ற வர்க்கங்களின்மீது செலுத்தும் பலாத்கார ஆதிக்கத்தை அஸ்திவாரமாகக் கொள்ளாத சமூகம். அந்தச் சமூகத்தில்தான் சர்வதேச சமாதானம் ஏற்பட்டு, பலாத்கார யுத்தங்கள் பூரணமாக ஒழியும். ஆகவே, நாமும், மனித வர்க்கத்தின் வாழ்க்கையிலும், ஒருவருக்கொருவருள்ள உறவிலும் பலாத்காரம் ஒழியவேண்டும் என்றே

விரும்புகிறோம். அது மாத்திரமல்ல. நமது லக்ஷியங்களும், போராட்டங்களும், மறுக்கமுடியாத பொருளாதார, அரசியல் உண்மைகளையும் ஆதாரமாகக் கொண்டுள்ளவையாதலால், நாமும் சத்திய நெறியிலேயே நடக்கிறோம் எனத் துணிவுடன் கூறலாம். ஆனால், எப்பொழுதும் மௌனம் சாதிக்காமல், கண்களை மூடிக்கொள்ளாமல், மனதில் தோன்றியதை பகிரங்கமாகக் கூறினால்தான் நாம் இவ்வாறு கூறமுடியும். சார்லர் பெகுவே என்கிற பேராசிரியர் கூறுவது போன்று, "உண்மை தெரிந்திருந்தும், அதை பகிரங்கமாகப் பறை சாற்றாமல் மௌனமாயிருப்பவன், பொய்யர்களின் துணைவனுவான்."

நாளுக்கு நாள் பாஸிஸத்தின் உருவை எடுத்துக்கொண்டே வரும் முதலாளித்துவத்திற்கும், சோஷியலிஸத்திற்கும் போராட்டத்தில் உலகம் பூராவும் அதிர்ச்சியுற்றுக்கொண்டிருக்கிறது. இந்த நிலைமையில், இந்தியாவிலுள்ள சோஷியலிஸ்டுகளாகிய நாம் எடுத்துக்கொள்ள வேண்டிய பங்கு என்ன? தான் கையாளவேண்டிய சமூக பொருளாதார அமைப்பை நிர்ணயிக்கக்கூடிய நிலைமையை அடையுமுன், முதல் முதலில் இந்தியா அரசியல் அதிகாரத்தை அடையவேண்டும். பிரிட்டிஷ் முதலாளிவர்க்கத்தின் பொருளாதாரச் சுரண்டலுக்குட் பட்டிருப்பதோடு, இந்திய பிரிட்டிஷ் சர்க்காரால் நேரடியாக ஆளப்படும் தேசமாகவும் இருந்து வருகிறது. 'நேரடியாக ஆளப்படும் தேசம்' என்று நான் வேண்டுமென்றே கூறுகிறேன். ஏனெனில் நம்மில் சில கோஷ்டியாரை ஏகாதிபத்தியம் தங்களுடன் ஒரு சிறு கூட்டாளியாகச் சேர்த்துக்கொண்டு ஏகாதிபத்தியத்தின் கேவலமான வேலைகளையெல்லாம் அவர்களைக்கொண்டே செய்வித்து, மக்களுடைய மனதில் ஒரு தப்பபிப்பிராயம் கற்பிக்க முயற்சிகள் செய்யப்பட்ட போதிலும், "மகாண சுயஆட்சி," "நாணயச்சிலாவணி சுதந்திரம்" என்ற போர்வைகளெல்லாம் அவ்வளவு கனமானவைகளல்ல. அவைகளுக்குக் கீழுள்ள உண்மை ரூபத்தைக் காண்பது அவ்வளவு கஷ்டமானதல்ல. ஆகவே இந்திய மக்களின் முதல் வேலை, அன்னியர்களின் கையிலிருந்து, அரசியல் அதிகாரத்தைப் பிடுங்குவதே. தேசிய சுதந்திரத்தை நிலைநாட்டி, ஒரு ஜனநாயக சர்க்காரை அமைப்பதே நமது கடமையாகும். இந்திய சோஷியலிஸ்டுகள், தீவிர தேசிய வாதிகளாக இருப்பதற்குக்காரணம் இதுவே.

"நான் ஒரு ஏகாதிபத்திய—விரோதியும், சோஷியலிஸ்டுமாவேன். என்னுடைய இந்த இரண்டு கொள்கையையும் பகிரங்கமாகக்கூறுவது அவசியமாயிருக்கிறது. ஏனெனில், ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடத்தும் போராட்டத்தை நிராகரிக்கும் சோஷியலிஸ்டுகளும் சிலர் இருக்கின்றனர்" என சமீபத்தில்தான் தோழர் ராம்மனோஹர் லோஹியா எழுதினர்.

அந்நிய ஆட்சியை அறவே ஒழிக்கும் வரை—ஸர்வதேச உறவில் வல்லரசுகளின் ஆட்டத்திற்குட்பட்ட ஒரு தேசமாய் இருக்கும் நிலைமை மாறி, அவைகளைப் போன்றே பங்கெடுத்துக் கொள்ளும் நிலைமையை இந்தியா எய்தும் வரை—இந்திய மக்கள் ஸர்வதேசத்துறையில் யாதொரு பங்கும் எடுத்துக் கொள்ள முடியாது. ஆகவே இந்திய சோஷியலிஸ்டுகளும் இத்துறையில் யாதொரு பங்கும் எடுத்துக் கொள்ள முடியாது என்பது திண்ணம். தேசியப் புரட்சி வெற்றிகரமாக முடியும் வரை இந்தியாவில் சோஷியலிஸ்டு சமூக அமைப்புப் பிரச்சினையும் எழமுடியாது. ஆயினும், சோஷியலிஸ்டு கண்ணோட்டத்துடன் இந்திய தேசியப் பிரச்சினையை கவனிப்பதும், சோஷியலிஸ்டு முறைகளைக் கையாள்வதும், மிக மிக அவசியமானவை.

"நமது பிரச்சினைகளைச் சரிவர அறிந்து கொள்ளுவதற்கும், வரப்போகும் ஸ்வராஜ்யத்தின் வழியைக் காட்டவும், சோஷியலிஸம் இப்பொழுதே நமக்கு உபயோகப் படுகிறது" என்றார் பண்டித ஜவாஹர்லால் நேரு பெய்ஸ்பூரில்.

அடுத்த வருஷத்தில், யுத்தம், சமஷ்டி, என்கிற இரண்டு ஆபத்துக்களில் ஒன்றை நாம் அநேகமாய் எதிர்க்க வேண்டியிருக்கும். அவைகள் இரண்டையும், தேசம் பூராவும் பரவிய பொது ஜனப் போராட்டத்தைக் கொண்டு நேரடியாக எதிர்க்க வேண்டும் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை. நமது நாட்டிலுள்ள முப்பத்தாறு கோடி மக்களையும் பாதிக்கும் படியான பேராபத்துக்கள் இந்த இரண்டும். ஆகவே, இந்திய மக்கள் யாவரும் ஒரு முகப்பட்டு யுத்தத்தையும், சமஷ்டியையும் எதிர்ப்பார்கள் என்பதில் சந்தேகமேயில்லை.

வறுமையையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் விளைவிக்கும்படியான இந்த சுத்த பைத்தியக்காரத்தனமான சமூக அமைப்பை அறவே அழிக்க வேண்டுமென்கிற அவா; தவிர்க்க முடியாத யுத்தங்களையும், புனிதமான மனிதவர்க்கத்தின் கோடிக்கணக்கான மக்களை நாசம் செய்யும் இந்த உலகம் பூராவும் பரவியுள்ள சமூக அமைப்பை தகர்த்தெறிய வேண்டும் என்ற மாசுமறுவற்ற துணிவும், பலவந்தமாக நாசகாரியான வேலைகளில் இன்றைக்கு ஈடுபட்டிருக்கும் உலக மக்கள், இந்த நாள் மாறி, நாளைப்பொழுது விடிந்தால் ஆக்கல் வேலையில் பரிபூரணமாக ஈடுபடலாம் எனத் தோன்றிடும் ஞானம்; இவைகள் தான், நமது தேசத்திலும், உலகம் பூராவும் உள்ள உழைப்பாளி மக்களின் உள்ளத்தில் எழும் உணர்ச்சிகள். மக்களுடைய இந்த உணர்ச்சிகளை ஆதாரமாகக்கொண்டு, மாபெரும் பொது மக்கள் இயக்கத்தை நிர்மாணிப்பதே நமது கடமையாகும்.

பல வருஷங்களுக்கு முன்னே, சோஷியலிஸ்டு கவி, எட்வர்ட் கார்ப்பென்டர்,

"இங்கிலாந்தே! எழுமின்!
நீண்ட நீண்ட இரவு கழிந்து
விட்டது!
மங்கலான வெளிச்சத்துடன்
கீழ்த்திசையில்,
பொழுது புலர்வதைக் காண்
பாய்!"

என எழுதினர்.

அந்தப் பொழுது இன்னும் விடியவில்லை. "சரித்திரத்திற்குக் காலம் யதேஷ்டமாக உண்டு" என்பார்கள். ஆனால். நாம் நமது கடமையைச் செய்வோமாகில் நவயுகம் பிறப்பதற்கு எதிராயுள்ள முட்டுக்கட்டைகளுக்குள் மிகமிகப் பெரிய முட்டுக்கட்டையை—பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்தை-இந்தியா தகர்த்தெறிவதற்கு நாமும் உதவி செய்யலாம். அந்தப்பெருமையும், பாக்யமும், நம்மை எதிர்நோக்கி நிற்கின்றன.

"படிப்பினைகளைக் கற்பிக்கின்றது வாழ்க்கை. நாளுக்கு நாள் மேல் நோக்கி நடந்துகொண்டே போகிறது வாழ்க்கை" என்றார் லெனின். அது நமக்குக் கற்பித்துள்ள படிப்பினைகளை நாம் சரிவரக் கற்றுக் கொள்ளுவோமாக! அதன் நடையைத் துரிதப்படுத்தி, நவயுக சூரியன் சீக்கிரம் உதயமாகும்படி செய்வோமாக!

---

### கழுகுமலை

இவ்வூரில் கல்உடைக்கும் தொழிலாளர்சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. அந்தக்கூட்டத்திலே 70 மெம்பர்கள்மேற்படிசங்கத்திற்கு அங்கத்தினராக சேர்க்கப்பட்டார்கள். தோழர் சிவ சுப்ரமண்யம் தலைமையில் சங்கத்தின் கூட்டம் ஆரம்பமாயிற்று. கூட்டத் தோழர், ராமசாமியும், எஸ். வி. பூசைப்பிள்ளையும் தொழிலாளர் சங்கத்தின் அவசியத்தைப்பற்றி பேசினர்கள்.

இன்னும் இரண்டு தினங்களில் ஓர் பெரிய தொழிலாளர் ஊர்வலம் ஆர்ப்பாட்டங்கள் நடத்தவும் தங்கள் குறைகளை கலெக்டரிடம் தெரிவிக்கவும் ஒரு தூது கோஷ்டி தயாராகிறது.

---

# சீனர்களுக்கு வெற்றிமேல் வெற்றி

## ஜப்பானியர்களுக்கு படுதோல்வி

ஜப்பானியக் கொள்ளைக்காரர் சாயம் வெளுக்க ஆரம்பித்து விட்டது. சென்ற வாரத்தில் நடந்த சம்பவங்கள் யுத்தப்போக்கையே திருப்பி விட்டதெனக் கூறலாம். ஷாங்கேக்கு வடக்கில் ஷான்டுஸ் மாகாணத்தின் தென் பாகத்தில், டேயர்ச்வாங் என்னுமிடத்தில் 20,000 ஜப்பானியத் துருப்புகள் சீர்குலைந்து, தங்கள் ஆயுதங்களை விட்டோடி விட்டன. ஓடிய துருப்புகள் பின் வாங்கும் வழியோ பல இடங்களில் கொரில்லா (querilla) படைகளாலும், கக்ஷிக்காரர்களாலும் தாக்கப்பட்டு நேரில்லை வடக்கில் டியேன்ட்ஸினிலிருந்து வரும் ரயில் பாதை நேரில்லை. உதவிப் படைகளில் வடக்கினின்றும், தெற்கே ஷாங்கேயினின்றும் சேகரிக்கப்பட்டு அனுப்பப்படுகின்றன. அவைகள் சீனர்களின் வலையில் அகப்பட்டு, சீர்குலைந்து நிற்கும் துருப்புகளின் சங்கடத்தை நீக்க முடியாது. டேயர்ச்வாங்கில் இருந்த20,000 துருப்புகளில் பேர்பாதி மாண்டன, மற்றவர்கள் தைரியம் குறைந்து சரணமடையத் தயாராயிருக்கின்றனர். 10,000 கைத்துப்பாக்கிகளும், 900 மெஷின் துப்பாக்கிகளும் (Machine guns) 900 பீரங்கிகளும், 30 ராணுவப்படை மோட்டார்களும் சீனர் வசமாயின.

இவ்விதச் சங்கடத்தை நீக்க ஜப்பானியப் படைகள் மற்ற விடங்களினின்று திரட்டப்படுகையில், அவ்விடங்களில் பொது ஜனப்படைகளாகிய கக்ஷிக்காரர்கள், எட்டாவது ரூட் படையின் சிக்ஷையாலும், தம் யுக்திகளாலும், பல தீவிரத் தாக்கல்கள் செய்கின்றனர். ஷாங்கேயிக்கு 50 மைல் அருகில் புதிதாகப் பாதுகாப்புக் கட்டிடங்கள் கட்டுகின்றனர். ஜப்பானியரை வதைக்கின்றனர்.

வடமேற்கு சீனவில், ஸோவியத் பாதுகாப்பிலுள்ள வெளி மங்கோலியா நாட்டின் எல்லையிருக்கும் ஸபேயின் மாகாணத்தில் ஜப்பானியத் துருப்புகள் 200 மைல் பின் வாங்கிவிட்டன.

இவை எல்லாவற்றையும் விட முக்கியமாக ஷாண்டுங் மாகாண முக்கிய பட்டணமாகிய ட்ஸினன் பட்டணத்தை மறுபடி கைப்பற்றினர். சென்ற மூன்று மாதத்திற்குள் இந்த வெற்றி சீனரது முக்கியமான முதல் வெற்றியாகும். இம் மூன்று மாதங்களுக்குள் சீன பொது ஜனங்கள் ஜப்பானிய எதிர்ப்பில் நன்கு ஈடுபட்டு, அவ்வெதிர்ப்பில் அவர்கள் எடுத்துக் கொள்ளும் ஒரு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் சீர்படுத்தி ஒழுங்கு படுத்தியதற்கு அத்தாக்ஷியாகும்.

சீன மக்கள் ஏகாதிபத்திய எதிர்ப்பில் ஜப்பானியக் கொள்ளையரைத் துரத்தியடிப்பது ஒரு முக்கியமான சம்பவம். இச் செய்திகள் ஜப்பானியர்களால் "திருத்தப்பட்டே" வந்திருக்கும். சில தினங்களாக ஜப்பானியரிடமிருந்து வழக்கமாய் வந்த "கொள்ளை முரசைக் காணவில்லை. ஜப்பானிய ஏகாதிபத்தியம் மஞ்சுகோவில் புகுந்த நாள்முதல் பெரும் தோல்வி படையவேயில்லை என்று நமக்கு வந்த செய்திகளினின்று கூறலாம். சீன தேசம் இராணுவ சேனாதிபதிகளாலும், படைகளாலும் ஒற்றுமை குன்றி சீரழிந்து நின்றது. முதலாளித்துவத்துக்கு சௌகர்யமாயிருந்தது ஷாங்கே ஷேக்கின் அரசாங்கமே. சீன கம்யூனிஸ்டார், சீனப் புரட்சியில் பலன் பெற முடியாமல் முதலாளித்துவப் படைகளால் ஹிம்சிக்கப்பட்டு, தென் சீனவில் ஏழைக் கிருஷிகர்களுக்காகப் பாடுபட்டு, கிருஷிகர் ஸோவியத் சபைகள் ஏற்படுத்தி, சீனவில் உள்ள குழப்பத்தின் நடுவே, ஒழுங்கான நலம் புரிந்து வந்தனர். இந்த சாம்ராஜ்யத்தைத் தொலைக்கப் பன்முறை முயன்றனர் முதலாளிகளும் அந்நிய ஏகாதிபத்திய அரசுகளும், இந்த ஸோவியத் நாட்டின் "ரெட் ஆர்மி" (Red Army) ஜெர்மானியர், ஜப்பானியரால் தயாரிக்கப்பட்ட படைகளை எதிர்த்து பல தடவைகளில் தோற்கடித்து விட்டனர். எதிரிப் படைகள் பல ஸோவியத் படைகளோடு சேர்ந்து விட்டன. ஸோவியத் படையானது ஆயுதக்குறைவான தாயினும் மலைப்பிரதேசங்களில், சண்டை செய்ய வல்லமை உள்ளவை. சிவாஜியின் படைகளைப் போல் சில துருப்புகள், பெரும் படைகளைநேரில் எதிர்க்காவிடினும், நாசமடித்துவிடும். அன்னாரது வீரமும் திறமையும் உலகெங்கும் இன்று பரவிட்டன. எதிரி முன் வந்தால் பின் வாங்கி மறைவர்; எதிரி எங்கேனும் தயங்கி நின்றால் அவர்களை எதிர்த்து முன் வாங்குவர், எதிரி சண்டை செய்ய முயலாவிடில் அவர்களை ஹிம்சிப்பார் எதிரி பின் வாங்கினால், துரத்தியடிப்பார்.இப்படையையும் ஸோவியத்முறையையும்ஒழிக்கவேறு வழியின்றி, ஷாங்கேஷேக் இதை முற்றுகை போட முயன்றார். அம்முற்றுகை வலையில் ஒழிந்துவிடுவரென முதலாளிகளும், ஏகாதிபத்தியங்களும் உற்சாகமாய் குதித்தன. கம்யூனிஸ்ட் வீரர்கள் அதையும் தப்பித்து மேற்கு நாடுகளாகிய, க்வைசோ ஸெச்சுவான் பிரதேசத்திற் சென்றனர். அங்கிருந்து பலர் வடக்கே சென்று ஷான்ஸி, ஷென்ஸி பிரதேசத்தையடைந்தனர். இந்தப்படையின் பல மாகாணப் பிரயாணம், இவ்வீரர்களின் வவல்லமையையும், தீவிரத்தையும் உலகத்திற்குக் காண்பித்தது.

இவ்விதமாகப் பல பிரதேசங்களில் பிரயாணம் செய்த கம்யூனிஸ்ட் படைகள் மற்றைய படைகளைப் போலல்ல. மற்ற படைகளோ ஏழை மக்களை ஹிம்சித்து, தத்தம் சேனாதிபதிகளின் உத்திரவுப்படி ஆடின. அச்சேனாதிபதிகள் படைகளை வைத்துக்கொள்ள ஏராளமான பணத்தை லஞ்சம் மூலமாகவும், பொது ஜன ஹிம்சையாலும் சம்பாதித்து வந்தனர். அன்னாருக்கு சுயநலம் தவிர ஏழை மக்களின் கஷ்டங்களும், ஏகாதிபத்தியத்தினின்று விளையும் கேடுகளும் ஒன்றும் தெரியா. ஏகாதியத்திய எதிர்ப்பு என்னும் எண்ணமே அவர்கள் அறியார். மேலும் அவர்களது காரியங்களுக்கும் பொது ஜனங்களுக்கும் யாதொருவித சம்பந்தமும் இல்லாதிருந்தது. அதுமட்டுமல்ல பொதுஜனங்கள் அப்படைகளை வெறுத்தனர்.

கம்யூனிஸ்ட் படையாகிய எட்டாவது 'ரூட்' படையோ; சீன ஸோவித்துகளைப் பாதுகாப்பதிலேயே ஏழை ஜனங்களை தங்களது பொதுநலத்தைக் காப்பதற்காகச் சண்டை செய்யத் தயாரித்தவர்கள். அவ்வித ஜனப் படைகளே "கக்ஷிக் கூட்டங்களாவன." (Partisan detachments). இப்படை செல்லும் ஒவ்வொரு ஊரிலும், பொதுக் கூட்டங்கள் கூடி, எதிரிகளின் அட்டூழியங்களையும், அக்கிரமங்களையும், அதன் காரணங்களையும் கூறி, அவ்வூரார் எவ்விதம் பாதுகாப்புக்குதவி புரியலாமெனக் கூறுவர். எதிரி ஊரில் வந்தால், மலைக்குச் செல்ல வேண்டுமென்பர்; ஆகாரம் முதலியவைகளை மறைக்கவேண்டுமென்பர். இரவுகளில் ஊரில் சிறு கூட்டங்கள் வந்து எதிரி எந்நேரத்திலும் தாக்கப்படலாமெனத் திகிலடையச் செய்ய வேண்டும். இவ்வாறு எதிரியை ஹிம்சித்தும், பயமுறுத்தியும் வைத்திருந்தால், அவர்களைத் துரத்துவது சுலபம் என பிரசாரம் செய்வார்கள். இவ்விதமாக ஒவ்வொரு ஊரிலும் பொது ஜனங்கள் கொரில்லா சண்டையில் பயிற்சி யடைவர். வெளிப் படையாக இராணுவப் படைகளின் சண்டைக்கு வேண்டிய உதவி புரியலாம்.

ஆதலால் எட்டாவது ரூட் படையின் பிரயாணம், வெற்றிப் படையின் பிரயாணம் போல், ஏகாதிபத்திய எதிர்ப்பின் ஆதாரமாயிற்று. "ஸோவியத் இயக்கத்தின் அபிவிருத்தியும், ஸோவியத் படையின் சக்திப் பெருக்கும், பொதுஜனங்களின் ஏகாதிபத்திய எதிர்ப்புடன் சேர்ந்து பெருக்கவேண்டியது அவசியம்" என்று முன்னமேயே சீன கம்யூனிஸ்ட் கக்ஷியார் கூறினர். அவ்வாறே இப்படை சென்ற ஒவ்வொரு பிரதேசத்திலும் ஏகாதிபத்திய எதிர்ப்பு இயக்கம் எல்லா ஜனங்களுக்கும் பரவ ஹேதுவாயிருந்தது. இதனது முக்கிய பலனே ஜப்பானியத் துருப்புகளின் சங்கடத்துக்குக் காரணமெனக் கூறலாம்.

ஜப்பானிய ஏகாதிபத்தியத்தின் தன்மையை நன்கறிந்த சீன கம்யூனிஸ்டார் 1931ம் வருஷத்திலேயே ஜப்பானியரை எதிர்ப்பதற்காகத் தயாராயிருப்பதாகச் கூறி, மற்றையக் கக்ஷிக்காரரையும் ஆயத்தமாகக் கேட்டுக்கொண்டனர். இந்த ஏகாதிபத்திய எதிர்ப்பு அவாவைப் பின்னர் பலமுறை அன்னாரே காண்பித்திருக்கின்றனர். 1934ம் வருஷத்தில் அன்ஹ்வை (Anhwei) மாகாணத்தார் ஜப்பானியரை எதிர்க்க உதவிபுரிய முயன்றனர். சீனப் புரட்சியின் முதல் தலைவராகிய சன்யாட் ஸேன்னின் மனைவியும், இன்னும் பல பிரமுகர்களும் ஜப்பானிய ஏகாதிபத்திய எதிர்ப்புக்கு ஒரு அறிக்கை செய்தனர்.

ஸி. எஸ்.

1935ம் வருஷம் ஆகஸ்டு சீன ஸோவியத் பிரதேசத்தார் ஜப்பானியரை எதிர்ப்பதற்காக ஒரு "தேசிய பாதுகாப்பு" ஆட்சிக் குட்படத் தயாராயிருப்பதாகத் தெரிவித்தனர். சீனமக்கள் உண்மையான சுதந்திரம் பெறுதற்குப் பாடுபடுவதில் சீன ஸோவியத் நாட்டாரே ஊக்கங்கொண்டு அந்நிய ஏகாதிபத்தியங்களை ஒழிக்க வேண்டுமென எடுத்துக்கூறி, தாங்களும் எதிர்ப்பதற்கு தயாராயிருப்பதைக் காண்பித்தனர். ஆயினும் இவ்வாறு பலமுறை முன் வந்தாலும் ஜப்பானியரை எதிர்க்க சீன தேசிய கவர்ன்மெண்டார் (ஷாங்கேஷேக்)ஆட்சி ஆவலுடன் முன்வரவில்லை. சென்ற வருஷத்தில் ஜப்பானிய அட்டூழியம் அதிகரித்து வட சீனாவில் அவர்கள் படை எடுத்த பொழுது, சீனமக்கள் ஜப்பானிய பகிஷ்காரத்திலும், வெறுப்பிலும் உணர்ந்த ஏகாதிபத்திய எதிர்ப்பு அதிகரித்துவிட்டது. மேலும் தனித்தனியே நின்ற இயக்கங்கள் ஐக்கியமடைந்து திரண்டுவிட்டது. பொதுஜனங்களின்உணர்ச்சியேஷாங்கேஷேக் ஜப்பானியரை எதிர்க்கும் முடிவிற்குக் காரணமாம்.

ஜப்பானிலோ இராணுவக் கக்ஷிக்காரர்களும், முதலாளிகளும் சீனக் கொள்ளையில் ஒன்றுபட்டு ஒத்துழைத்தனர். ஐரோப்பியாவிலுள்ள முக்கியஅரசாட்சிகள் பாஸிஸ்ட் ஆரவாரத்துக்கு அடங்கி கைகட்டி நின்றனர். ஸ்பெயினில் பாஸிஸ்ட் அட்டூழியம் தடையற்று நடந்துவந்தது. பாஸிஸ்ட் கக்ஷிகளுடன் ஜப்பான் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு உடன்படிக்கை யொன்று கையொப்பமிட்டது. இங்கிலாந்தும் பாஸிஸ்ட் அட்டூழியத்தைப் பொறுத்து வருவதைக்கண்டு கீழ் நாடுகளில் ஜப்பான் தனது காரியத்தைநடத்த ஆரம்பித்தது.

ஜப்பானியத் துருப்புகள் சுமார் 10 லக்ஷம், சீன நாடுகளில் சண்டையாரம்பத்தில் இருந்ததென மதிப்பிடலாம். இதில் சுமார் 4 லக்ஷம் படைகள் ஆயுதங்களுடன் ஸோவியத் ருஷியாவின் எல்லையினருகில் இருக்கலாம். ஐந்து அல்லது 6 லக்ஷம் படைகளே சீனச்சண்டையில் உபயோகப்பட்டு வருகின்றவெனக் கூறலாம்.

ஜப்பானிய ஏகாதிபத்தியத்தின் முக்கிய நோக்கம் முதலில் வடசீனாவிலுள்ள ஹோபையை, சஹார், பிரதேசங்களைக் கைப்பற்றிக் கொள்ளுதலெனலாம். முதலில் அதிக நாள் சண்டை செய்வதாகவும் எண்ணமில்லையெனக் கூறலாம்.

சண்டையாரம்பித்த பொழுதே முதலாக சஹார், ஸீய்யான் என்ற மேற்குப் பிரதேசங்களை நோக்கிச் சில படைகள் சென்றன. இதற்குக் காரணம் ஸோவியத், வெளி மாங்கோலியாவுக்கும் சீனாவுக்கும் நடுவில் ஒரு கட்டை போடவே. கைபிஸ் Geipiz Perkuy லிருந்து தெற்கே ஹோபை, ஷான்ஸி பிரதேசத்தையும் நோக்கி படையெடுத்தனர். இதற்கு முன்னமே ஜப்பானிய ஏகாதிபத்தியம் ஷான்ஸி, பிரதேசத்தில் கம்யூனிஸ்டாரை ஒழிக்க உதவி புரியத் தயாராயிருப்பதாக அம்மாகாணக் கவர்னரை ஓர் உடன்படிக்கை கேட்டது. வடசீனாவில் தென்னிருந்து பழைய சோவியத் படை தங்களது பிரசித்திபெற்ற பெரும் பிரயாணத்திற்குப் பிறகுப் பல விடங்களிலிருந்தனர். அங்கங்கே ஜப்பானிய எதிர்ப்பை ஜனங்களுக்குக் கூறி போதித்து வந்தனர் இதையடக்கவே ஜப்பான் முதலில் முயன்றது. ஜப்பானியப் படைகளின் ஆயுதங்கள் உயர்ந்ததாயினும் அவ்வளவு எளிதில் இம்மாகாணத்தைக் கைப்பற்ற முடியவில்லை. முக்கியமாக இரயில் மார்க்கம் தங்கள் படைகளைக் கொண்டுபோய் இராணுவ வண்டிகளால் பல இடங்களைக் கைப்பற்றினர். பைபிங்க்-ஹாங்கோ, டியன்ட்ஸின்-நாங்கின் ரயில் பாதைகள் மார்க்கம் படைகள் திரும்பின.

இதில் ஹோனான் (Honan) மாகாணத்தில் பல விடங்களில் ஜப்பானியர் முன்னேற முடியவில்லை. இச்சமயத்தில் ஷாங்கேயின்மீது ஜப்பானியப் படை தாக்க ஆரம்பித்தது. இவ்வித ஜப்பானியப் படை எழுச்சியில் கடலோரமுள்ள விடங்களில் அவர்களது கப்பற்படை மிகவும் உபயோகமாயிருந்தது. ஷாங்கேயைக் கைப்பற்றியதற்கு முக்கிய காரணம் ஜப்பானியக் கப்பற்படை ஹாங்க்சோவில் இறங்கியதே ஆயினும் சீனர்கள் ஷாங்கேயில் அதி தீவிரமாக எதிர்த்து நின்றனர். நாற்புறமும் சூழப்பட்ட பிறகும் அவர்களுள் ஒரு படை ஜப்பானியத் துருப்புகளில் புகுந்து தப்பித்தனர். இந்த யுத்தத்தில் சீனப் படைகளுக்கு ஆயுதங்கள் போதா. சில ஆகாய விமானங்களும், 1000 பெரிய குண்டுகளுமே இங்கு சண்டை செய்த 4லக்ஷம் சீனருக்கு யுத்த கருவிகள். சீன மக்களின் தீவிர எதிர்ப்பு எங்கும் ஜனங்களுக்கு ஊக்கம் கொடுத்தது.

ஆனால் ஜப்பானியத் துருப்புகளின் வெற்றியை மறுக்க முடியாது. ஜப்பானியத் துருப்புகளுக்கு தீவிரமான எதிர்ப்புஇருந்தாலும் அவர்கள் முடிவில் பல விடங்களில் ஜயம் பெற்றனர். ஷான்ஸியில் மட்டும் ஹசினிசொலில் ஜப்பானியர்கள் திருப்பித் தாக்கப்பட்டுத் தோல்வியடைந்தனர். இத் தோல்வியால் எட்டாவது ரூட் படை சீன ஸோவியத் படையின் பெருமையையும் வன்மையையும் நன்கு நிலை நிறுத்தியது.

ஜப்பானிய வெற்றி யதிகரித்தாலும் சீனர்கள் சமாதானம் கோரவில்லை. ஷாங்கேஷேக் "நாங்கள் கடைசி வரை சண்டை செய்வோ" மென்று கூறினார். ஜப்பானிய ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரில் சீன இராணுவஒற்றுமையும்உணர்ச்சியும் வளர்கின்றன. ஜப்பானின் பொருளாதாரமோ சீர் குலைந்து நீடித்த சண்டைக்கு வழிதேட வேண்டியிருக்கின்றது. ஜப்பானியப் படைகள் பல விடங்களில் சண்டை செய்ய நேரிட்டிருக்கிறது. ஒரு பிரதேசத்தில் வெற்றிக்குப் பிறகு இன்னொரு பிரதேசத்திற்குச் செல்வதற்கு முடியாது. "கக்ஷிக்காரர்கள்" அங்கங்கே ஒன்று கூடி ஜப்பானியர்களுக்கு வேண்டிய ஹிம்சை செய்கின்றனர்.ஜப்பானிய ஏகாதிபத்தியம் கைப்பற்றிய பிரதேசத்திலும் ஒரு படைவைத்துக் கொள்ள வேண்டியிருக்கின்றது. சண்டைப் பிரதேசமும் அதிகரித்து விட்டது. சென்ற வாரச் செய்தியை நோக்கின் சீனக் கக்ஷிக்காரர்கள்" சரிவர 'கொரில்லாச் சண்டை செய்கிறது தெரிகிறது. பல ஜப்பானியா துருப்புகள் சாப்பாடு முதலியவை இல்லாமல் சரண மடைந்ததாகத் தெரிகின்றது.

ஷாங்கேயில் சீனர் தோல்வியடைந்த பொழுது மா-ட்ஸே-டுங் என்ற கம்யூனிஸ்ட் தலைவர் "இதன் நீதி என்ன? இந்த யுத்தம் ஒரு நாட்டின் யுத்தமாயினும் இதில் ஈடுபட்டுள்ள வகைகள் நாட்டின் எல்லா ஜனங்களுமல்ல அதற்குப் பின்னர் சென்ற 3 மாதங்களுக்குள் பல ஜனங்கள் இந்த புரட்சி யுத்தத்தில் வந்து விட்டனர் ஒவ்வொரு ஊரிலும் எல்லாவித சங்கங்களினின்றும் ஆட்கள் கூடி தொழிலாளர், கிருஷிகர்கள் இராஜீய உரிமைச் சங்கத்தார் மாணவர்கள் "தேசிய சண்டையை" நடத்த உணர்ந்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் எங்களுடன் சண்டை செய்வதற்கு நாங்கள் அவர்களுக்கு ஆயுதமளிக்கின்றோம் என்கின்றனர். எட்டாவது படையோர் "எட்டாவது படையார் ஏழை மக்களுக்காகச் சண்டை செய்கின்றனர் நாம் அவர்களுடன் சேர்ந்து சண்டையிடுவோம்" என்கின்றனர், சீன மக்கள். இவ்விதம் ஜனங்களுக்கும் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போருக்கும் ஒரு பிணைப்பு ஏற்பட்டிருக்கின்றது. அப்பிணைப்பின் முதல் பலன் ஜப்பானியர் சென்ற வாரம் அடைந்த தோல்வி. இவ்விணைப்பின் சக்தி அபிவிருத்தியடைந்து ஜப்பானியக் கொள்ளைக்காரர்கள் ஒழிவார்கள். ஏகாதிபத்திய எதிர்ப்பும் வெற்றியடையும். ஏகாதிபத்தியமும் எதிர்ப்பின் முக்கிய அம்சம் ஜனங்களனைவரும் ஒன்று கூடி சண்டையிடுவதே. ஒவ்வொருவருக்கும் ஆயுதக் குறைவாகவிருந்தாலும் ஒன்றுகூடி ஒற்றுமையுடன், ஏகாதிபத்தியத்தை ஒழிக்க உதவி செய்யலாகும். செய்யவேண்டியது அவசியம். அத்தேசத்தோர் பலரும் ஈடுபட்டால் எல்லாவித ஏகாதிபத்தியத்தையும் அசைத்து ஒழிக்கக் கூடும்.

சீனர் செய்யும் சண்டை உண்மை சுதந்திரத்திற்கும் ஜனநாயகத்திற்கும், பொது நன்மைக்குமே.

---

# சோஷியலிசம் பிறந்த கதை

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

இதன் பலனாக, இப்புதிய முறைகள், சோஷியலிஸ வளர்ச்சிக்குப் பெருந்துணை செய்தன. அந்நாளில் தொழில் துறையில் முற்போக்கடைந்திருந்த தேசங்கள் மூன்று. அவை, இங்கிலாந்து, பிரான்ஸு, ஜெர்மனி ஆவன. இந்தத் தேசங்கள் ஒவ்வொன்றிலும், தொழிலாளி வர்க்கத்தின் சக்திக்கும் தன்மைக்கும் தகுந்த மாதிரி சோஷியலிஸம் உருப்பட்டு வளர்ச்சியடைந்தது. மொத்தமாகச் சீர்தூக்கிப் பார்த்தால், இங்கிலீஷ்காரருடைய சோஷியலிஸம் மிதவாதத் தன்மை கொண்டது. ஏன்? மிகப் பிற்போக்கானதென்றுகூடச் சொல்லலாம். அது, படிப்படியாக, மெள்ள மெள்ள, முன்னேறும் மார்க்கங்களில் நம்பிக்கையுடைத்தாயிருந்தது. அமெரிக்காவின் நிலைமைகளோ, மிக விரிவான நிலப்பரப்பின் காரணமாகவும், வேலையின் அத்யந்த அவசியத்தை உத்தேசித்தும், வேறுவிதமாக இருந்தன. ஆகவே, வெகு காலம் வரையில், அங்கு பலமான, தொழிலாளர் இயக்கம் வளரவில்லை.

## ஏகாதிபத்தியச் சுரண்டலில் பங்கு

19வது நூற்றாண்டின் மத்திய காலத்திலிருந்து துவக்கி ஒரு தலைமுறை வரையில், பிரிட்டிஷ தொழிலே உலகத்தில் ஆதிக்கம் வகித்தது. தொழில் முறையின் லாபங்களாலும், இந்தியா முதலிய குடியேற்ற நாடுகளைச் சுரண்டியதாலும் செல்வத்தின் மேல் செல்வம் வந்து குவிந்தது. இந்தப் பெரும் செல்வத்தில், தொழிலாளர்களுக்குக்கூட, ஒரு பகுதி கிடைக்கும்படி நேரிட்டது. அதனால், முன்பு இல்லாதவாறு அவர்களுடைய வாழ்க்கை விகிதம் உயர்ந்தது. செல்வச் செழிப்பும் புரட்சியும் ஒத்துப் போவதில்லை. பிரிட்டிஷ் தொழிலாளிகளிடம் முன்பிருந்த புரட்சி உணர்ச்சி, கொஞ்சம் செல்வச் சௌகரியம் கிடைத்ததும் மறைந்தது. பிரிட்டிஷ்-ரக சோஷியலிஸமும் பழுத்த மிதவாதத் தன்மை பூண்டது. சோஷியலிஸத்தில் இந்த ரகம் பேபியனிஸம் (Fabianism) எனப்படும். (பேபியன் என்பவன் ஓர் பழைய ரோமாபுரிப் படைத்தலைவன். எதிரியைச் சும்மா வைத்தே படிப்படியாகத் துருப்பிடிக்கச் செய்துவிடலாமென்ற உத்தேசத்தோடு, எதிரிக்கு நேரடியான போராட்டத்தைக் கொடுக்க மறுத்தவன்.) 1867ல் வாக்குரிமை முன்னைவிட விரிவடைந்தது. நகரத் தொழிலாளர்களில் சிலரும் வாக்குரிமை பெற்றார்கள். தொழிற் சங்கங்கள் நன்றாக பாவிக்கப்பட்டு, செழிப்போடிருந்ததால், பிரிட்டிஷ் லிபரல் கட்சிக்கு தொழிலாளர்களின் ஓட்டுகள் வழக்கமாகக் கிடைத்து வந்தன. காரல் மார்க்ஸ் அக்காலத்தைப் பற்றி எழுதும்பொழுது கூறுகிறார்:

“இங்கிலீஷ் தொழிலாளர் தலைவனாக இல்லாமலிருப்பது பெருமையே யொழியச் சிறுமையல்ல. ஏனென்றால், இந்தத் தலைவர்களில் பெரும்பாலார் லிபரல்களுக்கு விற்கப்படுகிறார்கள்.” என்று இது ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் எழுதப்பட்டது. ஆனால் இன்றுங்கூட, பிரிட்டிஷ் தொழிலாளர் தலைவர்களுக்கு, தங்களைப் பெரிய மனிதர்களாக்கியவர்களை மறக்கின்ற பெருமையும் தங்களுடைய பழைய கட்சிக்கும் கொள்கைக்கும் துரோகிகளாகின்ற புகழும் உண்டு. இந்த வித்தியாசங்களோடு அவர்கள் இன்னும் ஒரு அடி தாவி, லிபரல்களுடன் சேராமல், கண்சர்வேட்டிவ் (யதாபூர்விகர்கள்)களுடன் சேர்கிறார்கள்.

## அராஜகம்

இங்கிலாந்தானது, செழிப்பால், சதையும் கொழுப்பும் போட்டுக் கொண்டிருந்தபொழுது, ஐரோப்பாக்கண்டத்தில், ஓர் புதிய கொள்கைக்கு உத்ஸாகமும் உத்வேகமும் உணர்ச்சியுங் கொண்ட ஆதரவு கிடைத்தது. இது தான் அராஜகம் (anarchism). இந்த அராஜகம் என்ற வார்த்தையானது, அதைப்பற்றிய அர்த்தமொன்றும் தெரியாத அநேகர்க்கு பெருத்த பீதியை உண்டு பண்ணுவதாகத் தோன்றுகிறது. அராஜகமென்பது, எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு வரையில் மத்திய சர்க்கார் இல்லாது, தனி நபருக்கு அமோகமான சுதந்திரத்தை யளிக்கும் ஓர் சமூக அமைப்பைத்தான் அர்த்தப்படுத்துகிறது. அராஜகர்களின் லட்சியம் அசாதாரணமாக உயர்ந்து காணப்படுகிறது. “தன்னலமறுப்பு, கூட்டுறவு, சகோதர மனித்னின் உரிமைகளை நிர்ப்பந்தமான்றி இச்சாபூர்வமாக மதித்தல் ஆகியவற்றை அஸ்திவாரமாகக் கொண்டுள்ள பொது உடைமை வாழ்வை லட்சியமாக்குவதில் நம்பிக்கை” அரசாங்கத்தின் மூலம் எத்தகைய பலாத்காரமோ நிர்ப்பந்தமோ ஏற்படக்கூடாது, “இவைதான் அராஜகக் கொள்கைகள்”. அமெரிக்க அறிஞனாகிய தொரோ “எந்த சர்க்கார் ஆதிக்கமே செலுத்தவில்லையோ அந்த சர்க்கார்தான் மிகச் சிறந்த சர்க்கார். ஜனங்கள் அதற்குத் தயாராகிவிட்டால், அவர்களுக்கு அந்த தினுசான அரசாங்கம் அமையும்” என்று கூறினார்.

## சர்க்கார் வேண்டாம்

ஒவ்வொருவருக்கும் பரிபூரண சுதந்திரம், ஒவ்வொருவரும் மற்றவரை மரியாதைப் படுத்தல், சுற்றுமுற்றும் சுயநலமின்மை, மனப்பூர்வமானக் கூட்டுறவு—ஆஹா! எவ்வளவு அழகான லட்சியம்! ஆனால் பலாத்காரமும் சுயநலமும் நிறைந்த தற்கால உலகம் இந்த லட்சியத்திலிருந்து வெகு தூரத்தில் விலகியிருக்கிறது. அராஜகர்கள் ஒரு மத்திய சர்க்காரை விரும்பவில்லை. நீண்ட நெடுங்காலம் பொது மக்கள், கொடுங்கோன்மைக்கும் யதேச்சாதிகாரத்திற்கும் இரையானதின் பயனாக, குறைந்த பக்ஷ அதிகார முள்ள ஒரு அரசாங்கம் ஏற்பட்டுத்தீருமென்பதையும் அவர்கள் ஒத்துக் கொள்ளவில்லை. இது வரையில் அரசாங்கங்கள் பொது ஜனங்களை கசக்கிப் பிழிந்து நசுக்கித்துவைத்து வந்திருப்பதால், எந்த மாதிரியான சர்க்காரும் வேண்டாம் என்பது அவர்களுடைய கருத்து. சில தினுசான சோஷியலிஸத்தில், உற்பத்தி சாதனங்கள் (Means of Production) அரசாங்கத்தின் ஆதிக்கத்திலிருப்பதால், அத்தகைய அரசாங்கங்கள் யதேச்சாதிகார முடையவையாயிருக்கலாமென்று அராஜகவாதிகள் நினைத்தார்கள். ஆகவே, அவர்கள் ஸ்தல, தனிமனித சுதந்திர விஷயங்களில் அதிக அக்கரை யெடுத்துக் கொள்ளுகிற அல்லது அவற்றைப் பிரதானப்படுத்துகிற ஒரு வகை சோஷியலிஸ்டுகள் தானென்று உணர வேண்டும். ஆனால் சோஷியலிஸ்டுகளை எடுத்துக்கொண்டால், அவர்களில் பலர், அராஜக வாதிகளின் கொள்கையை வெகு தூரத்திலிருக்கிற லட்சியமாகத் தாங்கள் ஒத்துக்கொள்வதாயும், ஆனால் சோஷியலிஸத்தின் கீழ், குறிப்பிட்ட சிலகாலத்திற்கு ஓர் வன்மையான மத்திய சர்க்கார் அவசியமென்பதே தங்களுடைய அழுத்தமான அபிப்பிராயமென்பதாயும் கூறுகிறார்கள். இவ்வாறு சோஷியலிஸத்திற்கும் அராஜகத்திற்கும் Anarchism பற்பல கருத்து வேற்றுமைகளிலிருந்த போதிலும், பல சந்தர்ப்பங்களில் ஒன்றுக்கொன்று அடுத்தும் தொட்டும் ஒட்டியும் கலந்தும் இருந்தன.

## அராஜகம் சாத்தியமா?

அராஜகத்தை, லட்சியமாகக் கேள்விப்படும்பொழுது இனிப்பாகவும் வனப்பாகவும் தோற்றலாம். ஆனால், அது, அவசரக்காரர்களுக்கும் அதிருப்திக் குடுக்கைகளுக்கும் மாத்திரமல்லாமல்; இந்த லட்சியத்தைப் போர்வையாகப் போர்த்திக் கொண்டு, லாபம் சம்பாதிக்க விரும்பிய சுயநலப்புலிகளுக்கும் தங்க இடங்கொடுத்தது. மேலும் அது, ஒரு தினுசான பலாத்காரத்திற்கும் தூண்டு கோலாயிருந்தது. “அராஜக”மென்ற வார்த்தையைக் கேட்டதுமே பலாத்காரத்தை நினைப்பூட்டி நல்ல லட்சியத்திற்கே இழுக்குத் தேடிக் கொண்டது. விரிந்த அளவில் பெரிய காரியங்களைச் செய்து சமூகத்தை மாற்ற முடியாது போகவே, அராஜக வாதிகள் நூதன வழியில் புகுந்தார்கள். தனி நபர்களும் சிறு கோஷ்டியினரும் பலாத்காரமான எழுச்சிகளால், கொடுங் கோன்மையை வெட்டி வீழ்த்த முயன்றார்கள். இம்முயற்சி படுதோல்வியடைந்தது. தனித்தனி அராஜக வாதிகள் பயங்கர வாதிகளாக மாறி, உயர்தர உத்யோகஸ்தர்களையும் அரசர்களையும் வெடிக் குண்டுகளின் மூலமாகவும் துப்பாக்கிகளின் மூலமாகவும் ஒழித்துவிட ஆரம்பித்தார்கள். பதட்டத்தாலும் பலவீனத்தாலும் எழுந்த இந்த பலாத்காரப் போக்கை, பிரமுகர்களான பல அராஜக வாதிகள்கூட வெறுத்தனர். இந்த அராஜகர்களில் மிக முக்கியஸ்தர்கள், பியாரி பிரேளதான், மைக்கேல் பக்குனின், பீட்டர் குரோப்பாட்கின் என்ரிக்கோ மாலடேஸ்டா முதலானோர் ஆவர். இவர்கள் சொந்த வாழ்வில் மிகவும் புனிதமானவர்களென்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

## கம்யூனிஸ்டு அறிக்கை

மேலே விவரித்தபடி, வளர்ந்து வந்த சோஷியலிஸக் கொள்கையை விஞ்ஞான ரீதியாக உருவிகப்படுத்தியவர்கள் இருவர். அவர்கள் காரல் மார்க்ஸும், பிரடரிக் எங்கல்ஸும் ஆவார்கள். இங்கிலாந்து, பிரான்ஸ், ஜர்மனி முதலாதி தேசங்களிலுள்ள சோஷியலிஸ்ட் சிந்தகர்களுடைய கருத்துக்களையும் அனுபவங்களையும் பின்பலமாகக் கொண்டுமேற்கூறிய இரு மேதைகளும் சோஷியலிஸத்தை சாஸ்திர ரீதியாக உருப்படுத்தினார்கள். 1848ல் ‘கம்யூனிஸ்ட் அறிக்கை’ என்ற ஓர் சின்னஞ் சிறு நூலை முதன் முதலில் வெளியிட்டார்கள். அதுதான் விஞ்ஞான சோஷியலிஸ இலக்கியப் பூஞ்சோலையில் பூத்த முதல் மலராகும். அந்நூல், மனிதவர்க்கத்தின் சிந்தனை லோகத்தில் ஓர் யுகப்புரட்சியை உண்டு பண்ணிற்று.

—:0:—

# மே தினம்

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

க்க தொழிலாளித் தலைவர்கள் செய்துவந்த முயற்சி பயன்படாமற்போய் விட்டது. அது முதல் தொடர்ச்சியாக செய்துவந்த முயற்சியால், தொழிலாளர்க்கென ஏற்பட்டுள்ள காங்கிரஸ் சோஷியலிஸ்டுக் கட்சியார், காங்கிரஸில் அங்கீகரிக்கட்டுள்ளார்கள். "முயற்சி மெய்வருந்தக்கூலி தரும்" என்ற முதுமொழி இன்று பயன் அடைந்தது.

இதுவுமன்றி தொழிலாளர் கிருஷிகர் ஒன்றுபட்டு உழைக்க "ஐக்கிய முன்னணி" என்ற ஓர் பகுதியார் நமது இந்திய நாட்டில் வலுத்து வருகின்றனர். அவர்கள் முக்கிய நோக்கம் ஒன்றே. அதாவது சகல ஏகாதிபத்ய எதிர்ப்பு கட்சிகளும் ஒன்றுசேர்ந்து தொழிலாளர்களும் கிருஷிகர்களும் பூர்ண விடுதலை அடைய வேண்டுமென்பதே. இந்த நோக்கம் இந்த நாட்டில் சம்பூர்ணம் அடையும்வரை, உண்மை சுதந்திரம் வெகு தூரத்தில் உளதென்பதை அறிதல் வேண்டும். ஆனபடியால்தான், நமது நாட்டு சுதந்தரத்தை விரும்பும் ஒவ்வொரு இந்தியனும், அவன் பெரிய முதலாளியாய் இருப்பினும் சரி, நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவனாய் இருப்பினும் சரி-பொருள் பெற்றவனாயினும் பொருள் இல்லாதவனாய் இருப்பினும் சரி — ஒவ்வொருவனும் தொழிலாளர்களையும் கிருஷிகர்களையும் முன்னணியில் வைத்து சுதந்திரப்போரை நடத்தினாலொழிய இதர முயற்சிஎதுவும் இந்த நாடு சுதந்திரம் பெற பயன்படாதென அறிக.

உலகத் தொழிலாளர்கள் முக்கியமான ஓர் விசேஷமான விஷயம் ஒன்றை கவனிக்க வேண்டி இந்தப் பெருநாளில் ஞாபகப்படுத்துகின்றோம். அதாவது அகில தேச உலகத்தின் நிலைமை அபாயமான நிலைமையில் இன்று இருந்து வருகிறது. காலாகாலங்களாக உழைப்பவன் மெய்வருந்திப் பெற்று வரும் சின்னஞ்சிறிய சுதந்திரங்கள் கூட இல்லாமற் போகும் போல் தோன்றுகிறது. மெய்வருந்தி கஷ்டப்பட்டு வந்தும் கால்வயிற்றிற்கும் போதாத உணவு கூட நாசமாக்கப்படும் போல் அகில தேச நிலைமையிலிருந்து தெரிகிறது. நமது உயிரும், நமது பெண்டு பிள்ளைகள் உயிரும் நிலைத்து வருமோ என்ற சந்தேகம், உலகைக் கவர்ந்து வருகின்றது. அது யாதெனில், பாஸிஸமென்ற கோடும் போர் உலகை நாசமாக்கி விடுமோ என்ற சந்தேகமே. இந்த நிலைமைக்குக் காரணம் என்னவெனில், புலி-பசுத்தோலைப் போற்றிக் கொண்டிருப்பது போல் ஐரோப்பிய அமெரிக்க இந்திய ஆட்சிகள் ஒவ்வொன்றும் ஜனநாயகம் என்ற போர்வையை போத்திக் கொண்டு பாஸிஸ்டுகளுக்கு பயந்து, நடந்து கொண்டு வரும் விஷயமே. பாஸிஸத்தை முளையிலேயே கிள்ளி இருப்பார்களேயாமாகில். இந்த உலக கஷ்டம் நேரிடாதிருக்கும். இந்த பயமும் உலகம் அடைந்திராது. உலக ஜனநாயகமும் வலுத்து வந்திருக்கும். தொழிலாளர்களும் கிருஷிகர்களும் பயமற்று தங்கள் சுதந்திரங்களை அனுபவித்திருக்கவும் கூடும்.

உலகம் இந்த பாஸிஸ பேரிருளால் மறைவுற்றாலும் உறலாம். உலகமே பேரிருள் அடையும்போது, நமது இந்திய நாடும் அந்தப்பேரிருளால் மூடப்படும்! அதைத் தடுக்கும் மார்க்கத்தை இந்திய நாட்டு கம்யூனிஸ்டு தலைவர்களும் தேசிய தலைவர்களும், தொழிலாள தலைவர்களும், கிருஷிகர்கள் தலைவர்களும், சோஷியலிஸ்டுகளும், முஸ்லீம் லீக் தலைவர்களும், ஹிந்து மகா சபைத் தலைவர்களும், கிருஸ்தவர்கள் தலைவர்களும், ஆங்கிலோ-இந்திய தலைவர்களும் அற்ப சொற்ப விஷயங்களில் தலையிட்டுக் கொள்ளாமல் இந்த மாபெரும் இருளைப் போக்க முயற்சிப்பார்களென்று நம்புகின்றோம். ஆங்கில நாட்டு விஞ்ஞானிகளின் விற்பன்னரான புரொபஸர் ஜெ. பி. எஸ். ஹால்டேன் என்பார் ஆங்கில நாட்டு சாம்ராஜ்யம் 10 வருடத்திற்குள் பாஸிஸத்தால் சிதரிப்போய் விடும் என்றும் நமது இந்திய நாடு காப்பாற்ற முடியாமல் கைவிடப்படும், என்றும். அந்தநாள் நெருங்கி வருகிறது என்றும் லண்டன் நகரத்தில் நடந்த ஓர் மாபெரும் சபையில் கூறியிருக்கின்றார். அந்நாள் இந்நாளாயிருக்குமேயாயின் ஏன் செய்வோம்!

# சினிமாத் தொழிலை சர்க்கார் ஆதரிக்கவேண்டுமா?

—"அசோகன்"—

### கோகலே ஹால் பிரசங்கம்

சமீபத்தில் கோகலே ஹாலில் நடந்த ஒரு கூட்டத்தில், சர்க்கார் இப்பொழுது தமிழ் சினிமாத் தொழிலுக்கு உதவிசெய்ய வேண்டுமா வென்பதைப் பற்றி பலத்த விவாதம் நடைபெற்றது.

ஸ்ரீமதி ராதாபாய் (கல்வி மந்திரியின் மனைவியல்ல; சென்னை சர்வ கலாசாலையில் பி. ஏ. பட்டம் பெற்று சினிமாத் தொழில் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப்பவர்) "இப்பொழுது சென்னை சினிமாத் தொழில் இருக்கும் லக்ஷணத்திற்கு சர்க்கார் உதவி வேறு வேண்டுமா? உதவி கேட்கக் கூடிய அளவுக்குக் கூட இந்த தொழில் இன்னும் வரவில்லையே!" என்றார்.

" இத் தொழில் குழந்தைப் பருவத்தில் இருக்கும்போது தான் சர்க்கார் உதவி செய்ய வேண்டும்''என்று ஸ்ரீ பி.ஆர்.நாராயணன்ஊக்கத்தோடுபேசினார்.

### எப். ஜி. நடேசய்யர்

ஸ்ரீ எப். ஜி. நடேசய்யர் பேசுகையில், இந்த தமிழ் நாட்டிலே இதுவரை, எரிச்சலைக் கிளப்பாமலிருக்கக் கூடிய படம் ஒன்று கூட தயார் செய்யப்படவில்லையென்றார். (இவர் நடித்த "சேவாதனத்தை இதில் சேர்த்திருக்கமாட்டாரென்றே நினைக்கிறேன் ஏனெனில் இவர் பேசியபோது அப்படம் வெளியில் வரவில்லை) "சர்க்காரே சரித்திர சம்பந்தமான படங்களையும் கல்வி போதிக்கும் படங்களையும் தயார் செய்ய வேண்டும். அல்லது இந்த தொழிலுக்காவது உதவி புரியவேண்டும்'' என்பது இவர் கருத்து.

### முன்னேறவில்லையே!

ஸ்ரீமதி கோல்டன்' சாரதாம் (தங்க தேகமல்ல! நானே நேரில் பார்த்தேன். சாதாரண தேகம் தான்) பேசுகையில், "இதென்னது! இவ்வளவு தமிழ் படங்கள் இதுவரை வெளிவந்திருக்கின்றன.

இன்னும் சமூகம் முன்னேற்றமடையவில்லையே!" என்றார். இதைக் கேட்டு சிரிப்பதா அழுவதா என்று எனக்குத் தெரியவில்லை. இதுவரை வந்த தமிழ் படங்களால் சமூகம் மோசமான நிலைமைக்கு வராமலிருக்கும் பக்ஷத்தில் தாராளமாக, 108 தேங்காய்களை ஏன் 1008 ஆகவே யிருக்கட்டும் எங்கு வேண்டுமானாலும் கொண்டு உடைக்கலாம் என்பதுதான் என்னுடைய பதில்.

### உதவி அவசியமா?

இத்தொழிலுக்கு சர்க்காரின் உதவி அவசியமா வென்பதை சற்று ஆராய்வோம். தெலுங்கு 'கிருஹலக்ஷ்மி' வந்திருக்கிறது. ராஜீய, சமூக சம்பந்தமான படம்தான் இது. வெற்றியும் அடைந்துவிட்டது. அதாவது, நல்ல பண வசூலோடு, பொது ஜன பாராட்டுகளுக்கும் பாத்திரமாயிற்று. இதை ஒரு உதாரணமாகவே பிரஸ்தாபிக்கிறேன். ஆகவே சர்க்கார் உதவியின்றி நல்ல படம் பிடிக்கமுடியும்.

செலவைக் குறைக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு மட்டரக டைரெக்டர்களை அமர்த்தக் கூடாது. புராண சம்பந்தமான படங்கள் எடுத்தால் அதிக பணம் வசூலாகுமென்று அநேக முதலாளிகள் நினைக்கிறார்கள். ராமர் ,சென்ற ரதம் என்று காண்பித்து, ஆயிரம் விளக்கு வாடகை வண்டிகளில் பூட்டப்படும் குதிரைகளை ரதத்தில் பூட்டுகிறார்கள். ரதத்தில் உட்கார்ந்திருப்பவர்களைவிட, குதிரையின் எலும்புகள் தான் பிரகாசமாக நமக்குத்தோன்றுகிறது. ஆகவே பணமும் நிறைய சம்பாதிக்க வேண்டும், செலவும் ரொம்ப குறைவாகச் செய்ய வேண்டுமென்றும் முதலாளிகள் நினைத்தால், பொதுஜனங்களை ஏமாற்று தாங்களும் ஏமாற் வேண் வேண்டியதுதான்.

### சர்க்காரும் சினிமாவும்

இந்தியா சுதந்தரமடையவில்லை, அதிகாரம் நம்பிக்கையிலில்லை. அதைப்பெறத்தான் காங்கிரசும், தேசத்தலைவர்களும் முதலில் கவனத்தை செலுத்த வேண்டும். சினிமாத் தொழில் முன்னேற வேண்டுமென்று பொது ஜனங்களின் வரிப்பணத்தை செலவு செய்வது புத்திசாலித்தனமல்ல. பசியால் வாடும் கோடிக்கணக்கான மக்களுக்கு நிவாரம் அளிப்பதே இப்பொழுது காங்கிரஸ் சர்க்கார் செய்யவேண்டிய கடமையாகும்

அரசியல் பிரசாரத்திற்காக சர்க்கார் வரிப்பணத்தைக் கொண்டு படமெடுத்தால் அதை யாரும் ஆக்ஷேபிக்கமாட்டார்கள். அரசியல் சுதந்திரம் கிடைத்த பின் சினிமாத் தொழில் உள்பட எல்லா தொழில்களையும் சர்க்காரே நடத்த வேண்டும் என்பதுதான் சோஷிலிஸ்டுகளின் அபிப்பிராயமாகும்.

தமிழ்ப்பட முதலாளிகளும் இந்தியர்களாயிருக்கிறபடியால், அவர்கள் பண ஆசையோடு, சுதந்திர ஆசையையும் மனதிலிருத்தி, தாங்களும், தேசமும் நன்மையடையும் விதத்தில் படம் தயார் செய்யலாமல்லவா.?

—:0:—

இந்தியாவின் ஜன சமூகமானது ஏகாதிபத்ய எதிர்ப்புக்கு இழுக்கப்படுகிறது. பல்லாயிரக்கணக்கான அங்கத்தினர்கள் காங்கிரஸ் மகாசபையில் சேருகிறார்கள். பட்டிதொட்டிகளிலெல்லாம் காங்கிரஸ் கமிட்டிகள் ஏற்படுத்தப்படுகின்றன சுதேச சமஸ்தானங்களில் கூட அரசியல் விழிப்பு அதிகரித்திருப்பதைக் காண்கிறோம். வறுமையிலாழ்ந்த நாட்டுப்புறங்களில் பல ஆயிரம் பேர் கூடும் கிஸான் ஊர்வலங்களும், பொதுக் கூட்டங்களும் காங்கிரஸ் கமிட்டிகளின் சார்பில் நடக்கின்றன. எங்குபார்த்தலும் கிஸான் (விவசாயி) சங்கங்கள் தோற்றுவிக்கப் படுகின்றன தொழிலாளர்கள் தங்களின் கஷ்டங்கள் நிவர்த்திக்கப்படவேண்டுமெனக் கோரி கொந்தளித்து நிற்கிறார்கள். தங்கள் நலன் பாது காக்கப்பட வேண்டுமென்பதற்காக இந்நாட்டிலுள்ள சர்வ தொழிற்சாலைகளிலும் வேலை நிறுத்தம் தொழிலாளர்கள் செய்கிறார்கள் தொழிற் சங்கங்கள் இது வரையில் இல்லாத இடத்தில் இப்பொழுது தொழிலாளிகள் ஒன்று சேர்ந்து சங்கங்கள் காணுகின்றனர்.

மாணுக்கர்களும் அகில இந்தியாவிலும் மாணுக்கர் சங்கங்கள் தோற்றுவிக்கின்றனர். அரசியல் கைதிகள் விடுதலை செய்ய வேண்டுமென்று நடந்த கிளர்ச்சியில் மாணுக்கர்கள் முன்னணியில் நின்றார்கள்.

இவ்வளவு எழுச்சி பொருந்திய சக்திகளனைத்தையும் ஒருமுகப் படுத்தி ஏகாதிபத்ய எதிர்ப்புப் போருக்கு தயார் செய்ய வேண்டியது நமது முதற் பெருங் கடமை.

இந்தியாவி[illegible]லமைய எழும் நிலைமையும், மற்ற நாடுகளிலிருக்கும் நிலமையும், இந்திய மக்களை புரட்சிகரமான சக்திக்கு திரட்டுகின்றன. வளர்ந்து கொண்டே வரும், ஏழ்மையும், வேலையில்லாதத் திண்டாட்டத்தையும், ஏகாதிபத்யம் நிவர்த்திக்க முடியாது என்ற எண்ணம் பொது ஜனங்களிடையே பரவி, அவர்களை ஏகாதிபத்ய எதிர்ப்பு முன்னணிக்குக் கொண்டுசெல்கிறது. தங்களின் தாங்கமுடியாத சுமையாகிய ஏழ்மை, வேலையில்லாத் திண்டாட்டம், கடன் சுமை முதலியவைகளால், நகர ஏழைகள், தொழிலாளர்கள், விவசாயிகள் நடுத்தர வகுப்பார் ஆகியவர்களை —குறிப்பாக—ஏகாதிபத்ய எதிர்ப்புக்கு ஐக்கியப்படுத்திகொண்டு செல்கிறது. ஐரோப்பாவில் பிரிட்டிஷ் கவர்ன்மென்டானது, ஹிட்லராலும், முஸோலினியாலும் பயமுறுத்தப்படுவதோடு, கீழ் கோடியிலும் ஜப்பானல் அவமதிக்கப்பட்டு மங்கிக்கிடக்கிறது.

# சோஷியலிஸ்ட் ஒற்றுமை

**எஸ். ஜாஹீர்**

இந்தியாவின் தேசீய விடுதலைப்போர் வலுவடைந்து ஏகாதிபத்யத்தை முறியடிக்க வேண்டுமானல் இங்கிருக்கும் தீவிர சக்திகளின் ஐக்கியத்தால்தான் முடியும். ஜன சமூகத்தின் எண்ணத்தையும் அவர்களின் ஏகாதிபத்ய எதிர்ப்பு உணர்ச்சியையும் தினசரி கஷ்டங்களையும், பொருளாதார, அரசியல், விழிப்பையும், சாதாரண கோரிக்கைகளையும், ஏகாதிபத்ய எதிர்ப்பால் அவர்கள் கஷ்டத்திற்கு உள்ளாவதையும் தெள்ளத்தெளிய உணர்ந்து மக்களின் ஏகாதிபத்ய எதிர்ப்பு சக்தியை நிதானப்படுத்தி அவர்களை ஒருமுகப் படுத்தவும், ஏகாதிபத்ய எதிர்ப்புக்கு, தூண்டவும், தயார் செய்யவும், தீவிர வாதிகளாகிய சோஷியலிஸ்டுகளால் தான் முடியும். என்று பட்டவர்த்தனமாக,பெருமையோடு கூற ஆசைப்படுகிறேன். இந்நாட்டின், இப்புதிய ஏகாதிபத்ய எதிர்ப்பு எழுச்சி, சோஷியலிஸ விஷய ஞானத்தின் உதவியாலும், சோஷியலிஸ்டுகளின் விடா முயற்சியாலும் ஏற்பட்டதாகும்.

இந்நிலையில் தீவிர சக்திகள் இன்னும் ஒன்றுபட்டு அந்நிய ஆதிக்கத்தை இந்நாட்டைவிட்டு விரட்ட முன் வராதது வருந்தத் தக்க விஷயம். இதனல் காங்கிரஸ் மகா சபைக்குள் இருந்து கொண்டே ஏகாதிபத்யத்துடன் சமரசம் பேசும், பிற்போக்காளர்கள் மக்களின் ஏகாதிபத்ய எதிர்ப்பு உணர்ச்சியை வளரவிடாமல் தடை செய்கிறார்கள்.

காங்கிரஸ் மகாசபையின் கராச்சி தீர்மானமும், தேர்தல் அறிக்கையும், விவசாயிகளைப் பற்றிய தீர்மானமும், வார்தா தீர்மானமும், இந்திய மக்கள், ஏகாதிபத்ய எதிர்ப்புப் போருக்கு தாயகமாக கொண்டு போரை நடத்த அனுமதி யளிக்கின்றன. ஆனல் இவைகளை சில காங்கிரஸ் "பெரிய மனிதர்கள்" நக்கல் செய்வது தான் வியக்கத்தக்கது. காங்கிரஸ் மந்திரி சபைகள், காங்கிரஸ் அறிக்கைகளை, வெளியில் பாமர மக்களின் தொடர்பு கொண்டு நிறைவேற்றுவது தான் புத்திசாலித்தனமும், முறையுமாகும்.

அடிப்படையான உரிமைகளைப்பற்றிய கராச்சி காங்கிரஸ் தீர்மானமும்,விவசாயிகளைப் பற்றிய லக்னெ காங்கிரஸின் தீர்மானமும், பெய்ஸ்பூர், வார்தா தீர்மானங்களும், விவசாயிகள், தொழிலாளிகள், நடுத்தர வகுப்பினர் முதலியவர்களுடைய பொதுத் தேவைகளை உணர்த்துவதோடு, அவர்களை விடுதலைப் போராட்டத்திற்கு தயார் செய்வதையும் வற்புறுத்துகின்றன. இந்திய தேசீய காங்கிரஸும் காங்கிரஸ் மந்திரி சபைகளும் மேற்கூறிய தீர்மானங்களை நிறைவேற்ற கடமை பட்டுள்ளன. தனிப்பட்ட, அகில இந்திய கிஸான் சபையின் ஆதரவில் பல விவசாய சங்கங்களும், அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸின் ஆதரவில் தொழிற் சங்கங்களும், அகில இந்திய மாணுக்கர் சம்மேளனத்தின் சார்பில் நாடெங்கும் மாணுக்கர் சங்கங்களும் ஏற்பட்டு ஒன்றறக் கலந்து, அந்நிய ஏகாதிபத்தியத்தின் வளர்ந்து வரும் சுரண்டலுக்கு முற்றுப்புள்ளி வைக்க முனைந்து நிற்கின்றன.

இந் நிலையில், பொதுஜனப் போராட்டத்தை விழிப்படையச் செய்யவும், பிளவை ஐக்கியப் படுத்தவும் **காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியால் தான் முடியும்.**

ஆகையால் எல்லா சோஷியலிஸ்ட்களும் காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியை வளர்த்து, ஊக்கங்காட்ட கடமைப் பட்டவர்களாவர்; இதற்கு பல காரணங்கள் இருக்கின்றன. தொழிலாள சமூகத்திலிருந்து உற்பத்தியாகும் மார்க்ஸிஸ சக்திகள்—இக் கட்சியின் கட்டுப்பாட்டையும், முறையையும் ஒத்துக் கொண்டால், அச்சக்திகள் இக்கட்சியில் உடனே அங்கத்தினர்களாக பதிவு செய்து கொள்ளல் வேண்டும்.

பெய்ஸ்பூர் காங்கிரஸின் தீர்மானம், "ஏகாதிபத்ய எதிர்ப்புப் போரானது, தொழிலாள வர்க்கம் விடுதலைப் போருக்கு முன்னணியில் இல்லாமல் நடக்குமானல் அப்போர் தன் கோரிக்கை அடைய முடியாது" என்பதை தெளிவாக்கிக் கூறுகிறது.

காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியானது தன் அடிப்படையான கொள்கை "மார்க்ஸிய சோஷியலிஸம்" என்கிறது. இந்த முறையில் பெயிஸ்பூரில் சில மேற்கோள்களை காங்கிரஸ் அங்கீகரித்திருக்கிறது.

பெய்ஸ்பூர் தீர்மானப்படி ஐக்கியம் என்பது காகிதத்தில் காணப்படுகிறது. ஆனல் இப்பொழுது அத்தீர்மானம் செய்கையில் அனுஷ்டிக்கப்பட வேண்டும். தீவிர சக்திகள் எல்லாம் ஒன்றுபட்டு காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியை வலுப்படுத்தினல் இந்நாட்டில் தொழிலாளி மக்களுக்காக அந்த ஒரு கட்சி தான் கடைசி மூச்சு உள்ளவரை போராடும். சோஷியலிஸ்டுகளின் ஐக்கியத்தை / எதிர்ப்பவர்கள் தோழர் எம். என். ராய் போன்றவர்கள்தான். இவர்கள் காங்கிரஸுக்குள்ளேயே ஓர் தனிக் கட்சி இருக்கக்கூடாது என்றும் பிரசாரம் செய்கிறார்கள் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக ஹிமயம் முதல் குமரி வரையில் எங்கும் வளர்ந்துவரும் காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியில் எல்லா சோஷியலிஸ்டுகளும் சேர்ந்தால் "உடன் நேரடிப் போராட்டம்" என்பதை செய்கையில் செய்து காட்டலாம்.

காங்கிரஸ் சோஷியலிஸ்டு கட்சியானது ஏகாதிபத்ய எதிர்ப்பு ஸ்தாபனத்தினுள் இருப்பதால், ஏகாதிபத்ய எதிர்பபு ஐக்கிய முன்னணியை பங்கப்படுத்தும் என தோழர் எம். என். ராய், கூறி காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியை எதிர்க்கிறார். இதற்கு நமது பதில் "காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சி தான் ஏகாதிபத்ய எதிர்ப்புக்கு" ஐக்கிய முன்னணியில் இந்நாட்டை திரட்டக் கூடிய சக்தி வாய்ந்தது" காங்கிரஸ் கட்சிதான் இன்று, கிஸான் சபைகளையும், தொழிற் சங்கங்களையும், வேலையற்றோர் சங்கங்களையும், மாணுக்கர் சங்கங்களையும் தோற்றுவித்து அவர்களை ஏகாதிபத்ய எதிர்ப்பக்கு தயார் செய்கிறது. இது காரியாம்சையில் நடக்கும் செய்தி. இது இன்னும் நடைபெறுகிறது. ஆகையால் நாட்டிலிருக்கும் சோஷியலிஸ்டுகள் அனைவரும் ஒன்று சேர்ந்து வேறு எவராலும் முடியாத ஓர் ஐக்கிய முன்னணியைத் தோற்றுவித்து பொதுஜனப் போராட்டத்தை வெற்றியுற முடிக்க வேண்டும் என்ற திட நம்பிக்கையுடன் நாட்டிலிருக்கும் எல்லா சோஷியலிஸ்ட்களையும் காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியில் சேர வேண்டுமென்று மனமாறக் கேட்டுக் கொள்கிறேன்.

# தமிழ் நாட்டில் சோஷியலிஸ்ட் கட்சி

—(ஒரு காங்கிரஸ் சோஷியலிஸ்ட்)—

தனிமரம் தோப்பாகாது. தனி வீடு ஊராகாது. தனி மனிதனைவிட ஒரு கட்சியின் யோக்யதையும் பலமும் ஜாஸ்தி. ஒரு நூலிழை இழுக்கப் பட்டால், உடனே அறுந்துபோய் விடுகிறது. ஆனால், பல நூல்களால் ஒன்றாக்கப் பட்டுள்ள பெருங் கயிறு (வடம்) மதயானையையும் இழுக்கப் பிணைத்து மூச்சுத் திணறும்படி செய்யும் சக்தியை உடையதா யிருக்கிறது. இதனால் தெரியவதென்ன? "ஒற்றுமை வலிமையாம்". இதிலிருந்து சோஷியலிஸ்ட் அபிப்பிராயம் உடையவர்கள் ஒண்டி சண்டியாக நிற்பதை விட, ஒரு கட்சியாக நின்றால் சோஷியலிஸ்ட் கொள்கைக்கு அதிகப் படியாக ஆக்கமும் பலமும் உண்டாகுமென்று தெரிகிறதல்லவா?

மேற் கூறிய காரணங்களால் தான், அகில இந்தியக் காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியின் கிளையாக தமிழ்நாடு காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சி ஆரம்பிக்கப்பட்டது. சோஷியலிஸ்ட் கட்சியின் வேலை யென்ன? சோஷியலிஸத்தை ஸ்தாபிப்பது. சோஷியலிஸத்தை ஸ்தாபிக்க வேண்டுமானால், ஏகாதிபத்யத்தை ஒழித்துத் தீரவேண்டும். இந்த ஒழிப்பு வேலை வெற்றி பெற வேண்டுமானால் ஐக்ய தேசிய முன்னணி பலம் பெற வேண்டும். ஆகவே, சோஷியலிஸ்ட் கட்சியின் முதல் வேலை. சோஷியலிஸ்ட் கொள்கைகளை ஜனங்களுக்கு, விளக்கிக் காட்டிப் பிரசாரஞ் செய்வதோடு, ஏகாதிபத்ய எதிர்ப்பு சக்திகளின் ஐக்யமாகிய தேசிய முன்னணியை உருப்படுத்த இடையறாது பாடுபடுவது மாகும்.

சோஷியலிஸ்ட் பிரசாரமும், தேசிய முன்னணியும் இப்பொழுது அவசியமா? என்பது பல வாலிபர்களின் மனதை அலைக்கும் சந்தேகம் நிறைந்த கேள்வி. எனவே இதற்கு பதில் சொல்ல வேண்டியது நமது முக்கியமான கடமை. உலக முழுவதிலும் பரவியுள்ள தரித்திரம் நம் நாட்டிலும் பரவியிருக்கிறது. வறுமையின் சிகரத்தைத் தரிசித்துக் கொண்டிருப்பவர்கள் இந்தியர்களே. முதலாளித் திட்டத்தை அநுசரிக்கும் சகல தேசங்களும் தரித்திரத்தை ஒழிக்கத் தவறிவிட்டன. அவைகளுக்கு ஏதாவது வழிகள் தெரிந்தால், அந்த வழிகள் பொதுஜனங்களை யுத்த சாலைகளில் திணிப்பதும், "நாடு பிடிக்கும்" யுத்தங்களில் லட்சக்கணக்கான பேர்களை பலியிடுவதும்தான். உலகத்தில் ஐக்ய சோவியத் சோஷியலிஸ்ட் குடியரசு ஒன்றுதான் தரித்திரத்தின் பிடிப்பிலிருந்து விடுதலையடைந்து, சுபீட்சத்தை நோக்கிப்போய்க் கொண்டிருக்கின்றது. அங்கு முதலாளித் திட்டமில்லை; தொழிலாளித் திட்டமாகிய சோஷியலிஸ்ட் திட்டம் அமுல் நடத்தப்படுகிறது. ஆகவே, அஷ்ட தரித்திரத்தில் ஆழ்ந்து கிடக்கும் இந்தியாவும், பூரண சுபீட்சமடைய வேண்டுமானுல், தோற்றுப் போன முதலாளித் திட்டத்தை நம்பாமல், நம்பிக்கைதரும் சோஷியலிஸ்ட் திட்டத்தையே அநுஷ்டிக்க வேண்டுமென்று பிரசாரஞ் செய்ய வேண்டியது, புத்திசாலிகளுக்கு அழகும் பொறுப் புடையவர்களுக்குக் கடமையுமாகும்.

அடுத்தபடியாக, ஒரு தேசத்தில் எந்தத் திட்டம் அமுலுக்கு வரவேண்டுமானுலும் ஆட்சி பலம் வேண்டும். மேற்சொன்ன சோஷியலிஸ்ட் திட்டம் அநுஷ்டானத்திற்கு வர, முதலாளித் திட்டத்தால் அமுக்கப்பட்டு சுரண்டப்பட்டு நிற்கும் எல்லா வர்க்கத்தார்களும் அவர்களுடைய அரசியல் அதிகாரத்தை ஸ்தாபித்துத் தீரவேண்டியவர்களாயிருக்கிறார்கள். ஒரு நாட்டுக்கு இரண்டு ராஜாக்கள் இருக்கமுடியாது. நம் நாட்டிலும், ஏகாதிபத்ய ஆட்சியும் பொது ஜன ஆட்சியும் நடைபெற முடியாது. ஆகவே, தொழிலாளிகளும் விவசாயிகளும், நடைமுதல் சமூக அமைப்பில் அதிருப்தி யுடையவர்களும் ஏகாதிபத்யத்தை உடைத்தெறிய வேண்டிய அவசியத்திலிருக்கிறார்கள். ஏகாதிபத்ய எதிர்ப்பு சக்திகள் பொது ஜனங்களே. இவர்கள் காங்கிரஸ் மகா சபையிலும், தொழிற் சங்கங்களிலும், கிஸான் சபைகளிலும், மாணக்கர் ஸ்தாபனங்களிலும் பரவி நிற்கிறார்கள். அவரவர் வர்க்க ஸ்தாபனங்களின் மூலம் பொதுமக்களை வலுப்படுத்தி, அவர்கள் எல்லோரையும் காங்கிரஸ் கொடியின்கீழ் கொண்டுவந்து, காங்கிரஸை நடுநாயக ஸ்தாபனமாக்கி, தேசியப் போராட்டத்தில் ஒருமிப்பை ஏற்படுத்துவதற்குத் தான் தேசிய ஐக்ய முன்னணியைக் கட்டுவது என்று பெயர். இது, இந்நாளில், நம் நாட்டுக்கு எவ்வளவு அவசியமென்று சொல்லத் தேவையில்லை.

தமிழ் நாட்டிலும் மேற்படி லட்சியத்தோடும் திட்டத்தோடும் தான் கா. சோ. கட்சி வேலை செய்து வருகிறது. சென்னை ராஜதானியில் தமிழ் மாகாணம் தான் சோஷியலிஸ்ட் வேலையில் பின்னணியில் நிற்கிறது. கேரள நாடு சோஷியலிஸ்ட் வேலையில் இந்தியாவிலேயே முதன்மை ஸ்தானம் பெற்றிருக்கிறதென்னலாம். பக்கத்து ஆந்திரா (தெலுங்கு) மாகாணமும் மிக வன்மையான சோஷியலிஸ்ட் கட்சியை நிறுவி, சில வருஷங்களாக நல்ல வேலை செய்து வருகிறது. பின்னர், நமது மாகாணம் பின் தங்குவானேன்? இங்கு ஏகாதிபத்ய எதிர்ப்பு உணர்ச்சியில்லையா? யந்திரத் தொழிலாளிகளெல்லாம் தூங்கிக் கொண்டிருக்கிறார்களா? ஜமீன்தாரி ரயத்துவாரிக்குடிகளிடம் விழிப்பும் பரபரப்பும் கொஞ்சங் கூட இல்லையா? வாலிபர் மாணக்கர்களிடையே வேகமும் விவேகமும் கம்மியா?

இம்மாகாணத்திலும், பொது ஜனங்கள் விழிப்பும் வேகமும் அடைந்தே வருகிறார்கள். வத்தலக் குண்டில் நடைபெற்ற மாகாண அரசியல் மகாநாட்டில் நிறைவேறிய "ஜமீன்தாரித்வத்தை நஷ்டயீடு கொடுக்காமலே ஒழிக்க வேண்டு,' மென்ற தீர்மானம் மொன்றே, தமிழ் நாட்டு விவசாயிகளின் நிலைமையை விளக்கப் போதியதாகும், இன்னும் வேண்டுமாயின், அங்கங்கே நடைபெறும் விவசாயி மகாநாடுகளும், அமைக்கப்படும் விவசாயி சங்கங்களும், கிஸான் ஜதாக்களும், காற்று எங்கு நோக்கி வீசுகிறதென்பதையே விளக்குகிறது. தொழிலாளர் எழுச்சிக்கு சென்னை, கோவை, மதுரை பாபநாசம் தொழிலாளர்களின் வேலை நிறுத்தங்களே சாட்சி. மதராஸ், திருச்சி, சிதம்பரம், மதுரை, இன்ன பிற நகரங்களிலுள்ள மாணக்கர்கள் வரவர வர்க்கப் போராட்டங்களிலும் தேசீயப் போராட்டத்திலும் பங்கெடுத்து வருகிறார்கள்.

ஆகவே தமிழ் நாட்டில் பொதுஜன அவசியம், தேசீய முன்னணிக்கும் சோஷியலிஸ்ட் பிரசாரத்திற்கும் சாதகமாகவே இருக்கிறது. பின் ஏன் த.நா.கா. சோ. கட்சி பின் தங்கி நிற்கிறதென்று கேட்கலாம். பத்திரிகையோ இலக்கியமோ இல்லாமையும், பலமான கட்சி ஸ்தாபனம் இல்லாமையுமே பின்னணிக்குக் காரணங்கள் என்று என் உள்ளத்தில் படுவதை உரைக்கத் துணிகிறேன். ஆனுல், பல அசௌகரியங்களினிடையே கட்சி ஆரம்பித்துக் கொஞ்ச காலமே யாகின்றதென்பதையும் நான் ஞாபகமூட்டாதிருக்க முடியாது. ஆயினும், மிக விரைவில் தமிழ்நாடு காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சி எந்த மகாகாணக் கட்சிக்கும் இளக்க மில்லாதவாறு பலமடையுமென்று நாம் எதிர் பார்க்கலாம். சோஷியலிஸ்ட் பத்திரிகையில்லை, இலக்கியமில்லையென்று இதுவரைச் சொல்லி வந்த குறையை வெகு விரைவில் "ஜன சக்தி" தீர்த்து விடுமென்று தைரியமாகக் கூறுவேன். நமது கட்சித் தோழர்கள், ஒவ்வொரு ஜில்லாவிலும் சென்ற வருஷத்தைவிடப் பன்மடங்கு பலமான, ஜில்லாக் கட்சிகளை நிறுவ உடனே பிரயத்தனங்கள் எடுத்துக்கொள்ள வேண்டும். அதோடு, "ஜன சக்தி"க்கு எல்லா வழிகளாலும் பலத்தைத் தேடுவதோடு, வாராவாரம் தவறாமல், ஒவ்வொரு கட்சியினுடைய நடவடிக்கைகளையும் கிளர்ச்சிகளையும் எழுதி அனுப்பி "ஜன சக்தி"யில் வெளிவரச் செய்ய வேண்டும். தோழர்களே! இதை முறையாகச் செய்துவிட்டு, 1939வது வருஷத்தில் சோ. கட்சி தமிழ் நாட்டில் எப்படியிருக்கிறது என்று பாருங்கள்!

---

## அறிக்கை

—:0:—

"ஜன சக்தி" ஆபீஸுக்கு எழுதும் கடிதங்கள், மானேஜர் விலாசத்துக்கு எழுதவும்.

கட்டுரைகள், செய்திகள் ஆகிய பத்திரிகை விஷயங்களாயிருந்தால் ஆசிரியர், விலாசத்திற்கு எழுதுக.

## பொள்ளாச்சி தீவிர வாலிபர் சங்கம்

—:o:—

உலக சுழற்சியின் போக்கினிலே, விஞ்ஞானம் தலை தூக்கி நின்று ஆட்சி செய்கின்ற இந்நாளிலே காலச் சக்கரப்போக்கின் மாற்றங்களுக்கு ஏற்றாற் போல், பழயதைக் கழித்துப் புதியதைப்புகுத்தி, நிலைமைக்குத் தக்கவாறு தங்கள் கொள்கைகளை அமைத்துக்கொள்வதே பகுத்தறிவுபடைத்த மனித சமூகத்தின் போக்கிற்கு ஏற்றதாகும். பழைய வதங்கி சுவண்டு ஒட்டிப்போன கொள்கைகளைப்பற்றி யோசிப்பதோ, விவாதிப்பதோ, நடைமுறையில் செய்யலாமென முற்படுவதோ காலத்தை வீணாக்குவதாகும். அவைகளைக் கொளுத்தி, பொசுக்கிக் கரைத்துவிட்டு, உலக மாறுதலுக்கேற்றாற்போல் அனுபவத்தின் பயனும் நடைமுறையில் எதை விரைவினில் கைகூட முடியுமென்று உறுதியாகத் தோன்றுகிறதோ அம்முற்போக்குடைய முறையை கொள்ளவேண்டிய தவசியமாகிறது.

ஆதலின் இன்று "பாலர் சங்கம்" காலப்போக்கிற் கிசைந்தபடி திருத்தியமைக்கப்பட்டிருக்கிறது. இனி தீவிர மனப்பான்மையுடன் அதன் கொள்கைகளை பொருளாதார இராஜீய சமூகப் பிரச்னைகளில் செலுத்தி ஏகாதிபத்ய எதிர்ப்பில் தளராது காங்கிரஸை ஆதரித்து நடைமுறையில் எதைச்செய்யவேண்டுமென அபிப்பிராயப்படுகிறதோ அதை தீவிரமாகச்செய்யும்.

இக்கொள்கை மாறுதல்களுக்கேற்ப சங்கத்தின் பெயரையும் மாற்றவேண்டிய அவசியமேற்படுகிறது. ஆதலால் "பாலர் சங்கம்" என்ற பெயர் "தீவிர வாலிபர் சங்கம்" என மாற்றப்பட்டிருக்கிறது.

தீவிர மனப்பான்மையும், கொள்கையும் உடைய வாலிபர்களனைவரும் அங்கத்தினர்களாகச் சேரலாம். மற்றும் சங்கத்தின் நடவடிக்கைகளிலும், கூடிய சீக்கிரம் நடத்த உத்தேசித்திருக்கும் சங்கத்தின் இரண்டாவது ஆண்டு நிறை விழாவிலும் பொது ஜனங்களின் ஆதரவையும் ஒத்துழைப்பையும் நாடி நிற்கின்றோம் என சங்கத்தலைவர் திரு. எம். எஸ். ராஜகோபால் எழுதுகிறார்.

## ஆசிரியரின் சுற்றுப் பிரயாணம்

—:o:—

இம்மாதம் 16ந்தேதி சென்னையிலிருந்து புறப்பட்டார். 17ந் தேதி காலை திண்டுக்கல். 17ந் தேதி 7 மணிக்கு பழநியில் ஓர் பொதுக் கூட்டத்தில் பேசினர். இதே இரவே 10 மணிக்கு உடுமலைப் பேட்டையில் பிரசங்கம். 18ந்தேதி மாலையில் பெரிய குளத்தில் மாபெரும் பொதுக் கூட்டத்தில் சொற்பொழிவு. 19ந்தேதி இரவு போடி நாய்க்கனூரில் பிரசங்கம். 20ந்தேதி மாலை 5-30 மணிக்கு கொடைக்கானலில் நடைபெற்ற எலெக்ஷன் கூட்டத்தில் பேசினர். 21ந்தேதி மாலை 5 மணிக்கு வீரக்கல் கிராமத்தில் தேசியக் கொடியேற்று விழாச் செய்தார். இரவு 7 மணிக்கு திண்டுக்கல்லில் பொதுக்கூட்டம். 22ந்தேதி திண்டிவனம் மோட்டார் தொழிலாளர் சங்கத்தின் ஆண்டு விழாவில் தலைமை வகித்தார். 23ந்தேதி காலை சென்னை வந்து சேர்ந்தார்.

### தாராபுரம்

எங்கள் சங்கம், தன் அடிப்படையான கொள்கையாக சோஷியலிஸத்தை ஒத்துக் கொள்வதெனவும், அதற்காக பலத்த பிரசாரம் மக்களிடையே செய்வதெனவும் தீர்மானித்திருக்கிறது. இதற்கு தங்கள் 'ஜன சக்தி'யின் உதவி அவசியம்.

காரியதரிசி,
தேசிய வாலிபர் சங்கம்,
தாராபுரம்.

### ஜமீன் விவசாயிகள் மகாநாடு

கண்டமநாய்க்கனூர், 26-4-38 ஜமீன் விவசாயிகள் மகாநாடு இன்று "பாரதி" ஆசிரியர் ரா. நாராயணசாமி செட்டியார் தலைமையில் கோவிந்த நகரத்தில் நடைபெற்றது.

### இராஜபாளையம்

இராஜபாளையம் விவசாய சங்கத்தார், அவ்வூர் கர்ணத்தின் மீதும் ரெவினியூ இன்ஸ்பெக்டர்மீதும் கலெக்டரிடம், விவசாயிகளுக்கு நஷ்டம் விளைவிக்கக்கூடிய முறையில் சில மரங்களை, உத்திரவில்லாமல் சொந்த உபயோகத்திற்கு, வெட்டியதற்காக கேஸ் கொடுத்திருந்தார்கள். கலெக்டர் ஒருதலைப் பக்ஷமாக விசாரணை செய்து கர்ணம் குற்றவாளி அல்ல என்று கூறிவிட்டார். ரெவினியூ இன்ஸ்பெக்டர் மீது மட்டும் கேஸ் நடந்துவருவதாகத் தெரிகிறது.

## தென்காசி

இந்நகர் ஜவஹர் வாலிப சங்கத்தின் இரண்டாவது வருஷ நிர்வாகஸ்தர்கள் தேர்தல் நடைபெற்றது. தலைவர் அய்யம் பெருமாள் பிள்ளை, உப தலைவர், எஸ். ராமசாமி நாயுடு, காரியதரிசி, டி. எஸ். குருசாமிபிள்ளை மற்றும் அங்கத்தினர்கள்.

### திருத்துறைப்பூண்டி

### வர்த்தக காரியஸ்தர்கள் சங்கம்

இம்மாதம் 17ந்தேதி ஞாயிற்கிழமை இரவு 9-30 மணிக்கு சுந்தரேசன் மரவாடியில் ஸ்ரீமான். ஜெகநாத தேவர் தலைமையில், காரியஸ்தர்கள் சங்க அமைப்புக் கூட்டம் கூடியது தோழர்கள் பி. கே. எம். ஷேக் அப்துல்காதர், சிவசுப்ரமண்யம் முவலியவர்கள் சங்கத்தின் அவசியத்தைப் பற்றி பேசிய பின், தோழர் பி. கே. எம். ஷேக் அப்துல்காதரைக் காரியதரிசியாகக் கொண்ட ஓர் நிர்வாகக் கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது.

### பாட்னவில் வேலை நிறுத்தம்

பாட்னவில் 20ந் தேதி செம்பு சுரங்கத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். வேலை நிறுத்தத்தின் காரணம் தங்கள் சகாவான ஒரு தொழிலாளி தாக்கப்பட்டதே.

பீகார் காங்கிரஸ் எம். எல். ஏ. க்கள் சிலரும் பார்லிமெண்டரி செக்காட்டரியும் தலையிட்டு வேலை நிறுத்தை முடிவு செய்ய பிரயத்தனம் செய்கின்றனர்.

### தூத்துக்குடி

### மில் தொழிலாளிகள் கூட்டம் பொதுக் கூட்டம்

25-4-38 மாலை 7 மணிக்கு சிவன் கோயில் முன்பாக, கிராம்பு பகிஷ்கார தினக் கூட்டம் தோழர் கே. வி. ராமநாயகம் தலைமையில் கூடியது. பலர் பேசிய பின் கூட்டம் கலைந்தது.

* * * *

### 'மே' தினம்

இங்கு 'மே' தினம் விமரிசையாகக் கொண்டாடப்படும் என மில் தொழிலாளர் சங்கக் காரியதரிசி அறிவிக்கிறார்.

### பிராந்திஜ்ஜில் ஜமீன்தார் ஆட்கள் அட்டூழியம்

ஆமதாபாத்திலுள்ள பிராந்திஜ் தாலுக்காவிலுள்ள தாலுக்தாரி கிராமத்திலிருக்கும் தாக்கூர் என்பவர் 6 ஆட்களுடன் ஒரு பனியா வீட்டில் புகுந்து, அவரை சுடவே, போலீஸாருக்கு இந்த தகவல் உடனே அறிவிக்கப்பட்டது- போலீஸார் 7 பேர்களையும் கைது செய்து போயினர். ஜமீன்தாருக்கும் குடியானவர்களுக்கும் நடந்து வந்த சச்சரவில் குடியானவர்களை ஆதரித்த காரணத்தாலேயே பனியாவை அநியாயமாக ஜமீன்தார் ஆள்சுட நேர்ந்ததென தெரிய வருகிறது. பனியா ஆஸ்பத்திரியில் கவலைக்கிடமான நிலைமையில் இருக்கிறார்.

### ஐக்கியமாகாணம்

### சட்டசபை முன் கிருஷிகர் கோஷங்கள்

9000 கிருஷிகர்கள் ஐக்கிய மாகாண சட்டசபை முன்கூடி, பலத்த கோஷமிட்டுக் கொண்டிருந்தனர். பிரதம மந்திரி கனம் பந்த், காங்கிரஸ் மந்திரிசபை சட்டமூலமாக கடன் நிவாரணம், குத்தகை வஜா போன்றவைகளை செய்யப்போவதோடு அவர்களது கல்வி, குடிசைத்தொழில், கிராம பஞ்சாயத்து போன்ற விஷயங்களையும் கவனிக்கப்போவதாக கூறிய பின் கூட்டம் அமைதியாகச் சென்றது.

### கொட்டசேரி

### விவசாயிகள் மகாநாடு

சென்ற வாரம் கொட்டங்சேரியில் தோழர் கோபாலன் தலைமையின்கீழ் கேசர்கோடு தாலூகா விவசாயிகள் மகாநாடு நடைபெற்றது. விவசாயிகள் ஐக்கியமாக இருக்கவேண்டிய அவசியத்தையும், காங்கிரஸ் மந்திரிசபை பலப்படுத்த வேண்டியதின் அவசியத்தை விரிவாக கூறினர்.

மகாநாட்டில் தொழிலாளர் கொடி (சிகப்புக்கொடி) ஏற்றப்பட்டது. தலைவர் பிரசங்கத்திற்குமுன் மகாநாட்டு திறப்பாளர், வரவேற்புகழகத் தலைவர் இருவர்களும் விவசாயிகளுடைய இன்றைய நிலைமையைப் பற்றி குறிப்பிட்டார்கள்.

ரையத் உடன்படிக்கை உறுதி சம்பந்தமாகவும், விவசாயிகள் நிரந்தர பாத்யதை சம்பந்தமாகவும், தற்போதுள்ள நிலவரி முறை ஒழியவேண்டுமென்றும், பாக்கி தகை வருஷா வருஷம் சொல்ப தகையாக 40 முறையில் கொடுக்கப்படுமென்றும் பல தீர்மானங்கள் மகாநாட்டில் நிறைவேறின.

## மைசூரில் ‘ராம ராஜ்யம்’

(19ம் பக்கத் தொடர்ச்சி)

### காங்கிரஸ் தலையிட வேண்டும்

காங்கிரஸ் மகாசபை ‘நடு நிலைமை’ கொள்கையை மாற்றவேண்டிய காலம் வந்து விட்டது. சமஸ்தானத்து மக்கள், எதேச்சாதிகார அதிபதிகளை எதிர்த்து நடத்தும் போர், நமது ஏகாதிபத்திய-எதிர்ப்புப் போரர்ட்டத்தின் பகுதி என்பதைக் காங்கிரஸ் தலைவர்கள் உணர்தல்வேண்டும். சமஸ்தானங்கள், ஏகாதிபத்தியத்தின் தூண்களல்லவா? சமஸ்தான மக்களை நாம் புறக்கணிக்க முடியாது; புறக்கணிக்கவும் கூடாது. ஏகாதிபத்திய எதிர்ப்பில், நம்முடன் தோளோடு தோளாய் நிற்கும் தோழர்களல்லவா அவர்கள்? ஆகவே, மைசூர் மக்களின் இந்த சோதனைக் காலத்தில், அவர்களுக்குத் துணையாக நிற்பது, ஜனநாயகத்தை விரும்பும் மக்களின் கடமையாகும். சுதந்திர இந்தியாவை, சுபீட்சம் பொருந்திய புதிய இந்தியாவை, ஐக்கிய இந்தியாவை, சிருஷ்டிப்பதற்கு, ஏகாதிபத்தியத்தை முறி யடிப்பதுடன், சுதேச மன்னர்களின் எதேச்சாதிகாரத்தையும் வீழ்த்த வேண்டியது அத்தியாவசிய மானது என்பதை, மன்னர்களைப் போற்றிக் கொண்டிருக்கும் காங்கிரஸ் தலைவர்கள் உணர்வார்களா?

---

## ஏஜண்டுகள் தேவை

கீழ்க்கண்ட ஊர்களில் நமது பத்திரிகையை விற்பனை செய்ய முன் பணம் கட்டக்கூடிய ஏஜண்டுகள் தேவை .—

விழுப்புரம்
பண்டுருட்டி
மாயவரம்
சீர்காழி
பரங்கிப்பேட்டை
திருவிடமருதூர்
குத்தாலம்
பாபநாசம்
ஐய்யம்பேட்டை
நீடாமங்கலம்
வேதாரண்யம்
ராமேஸ்வரம்
திருவனந்தபுரம்
தாராபுரம்
போளூர்
ராபர்ட்சன்பேட்டை
நாகூர்
பெங்களூர்
நாகர் கோயில்
கரூர்
காரைக்கால்
கிருஷ்ணகிரி
ஆரணி
ஆம்பூர்
குடியாத்தம்
காஞ்சிபுரம்
செங்கல்பட்டு
குளித்தலை

## இந்தியா

### வேலை நிறுத்தங்களின் வளர்ச்சி

| வருஷம் | வேலை நிறுத்தங்களின் எண்ணிக்கை | வேலை நிறுத்தத்தில் ஈடுபட்ட தொழிலாளிகளின் எண்ணிக்கை (ஆயிரம்) | அவர்கள் இழந்த வேலை நாட்களின் எண்ணிக்கை (ஆயிரம்) |
|---|---|---|---|
| 1932 | 129 | 1,400 | 19,000 |
| 1933 | 159 | 1,800 | 22,000 |
| 1934 | 174 | 2,600 | 48,000 |
| 1935 | 153 | 1,200 | 1,0000 |
| 1936 | 183 | 1,900 | 24,000 |
| 1937 (செப்டம்பர்) மாதம் வரை. | 303 | 5,600 | 73,000 |

(பம்பாய் லேபர் கெஜட்)

1932ஆம் வருஷத்தில், இந்தியத் தொழிலாளி வர்க்கப் போராட்டத்தின் தீவிரம் மிகமிகக் குறைந்து போயிருந்தது. அதுமுதல், அது நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டே வந்திருக்கிறது. 1937ஆம் வருஷத்தில் என்றும் காணாத வேலை நிறுத்தங்கள் நடைபெற்றிருக்கின்றன. ஒரு வருஷத்திற்குள் வேலை நிறுத்தங்கள் இரட்டிப்பாயிருக்கின்றன. இவைகளில் ஈடுபட்ட தொழிலாளிகளின் எண்ணிக்கையும், அதன் பயனாக அவர்கள் இழந்த வேலை நாட்களின் எண்ணிக்கையும் மூன்று மடங்கு அதிகரித்திருக்கின்றன.

## வங்காளம்

### விவசாயிகளுக்குக் கிடைக்கும் வருஷ வருமானம்.

| பயிர். | வியாபார மந்தத்திற்கு முன் (ஒரு ஏகர் நிலத்திற்கு) | | | வியாபார மந்தத்திற்குப் பிறகு (ஒரு ஏகர் நிலத்திற்கு) | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
| அவுஸ் நெல் (குருவை) | 32 | 7 | 0 | 9 | 0 | 0 |
| அமன் நெல் (சம்பா) | 58 | 1 | 0 | 18 | 0 | 0 |
| சணல் | 60 | 0 | 0 | 24 | 0 | 0 |

(24 பர்கனாக்களின் ஸர்வே ஸெட்டில்மெண்ட் ரிபோர்ட்)

வங்கக் குடிகளுக்குக் கிடைப்பதுப் பட்டினியே.

மேலே கொடுக்கப்பட்டிருக்கும் வருமானமும் கிஸ்தியும், சாகுபடிச் சிலவும் போக, நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானம். இதைத் தவிர, வரிச்சுமை, கடனுக்குக் கொடுக்க வேண்டிய வட்டித்தொகை, ஜமீன்தாருக்குக்கொட்டி அழும் தண்ட வரிகள் முதலியவைகளை யெல்லாம் கணக்கெடுத்துக்கொண்டால், இங்கு காண்பித்திருப்பதைக் காட்டிலும் மிக மிகக்குறைவாகும். விவசாயியின் வருமானம். சராசரி, பட்டா இரண்டு ஏக்கர் விஸ்தீரணமுள்ளது வங்காளத்தில், ஆகவே, இந்தச் சுமைகளெல்லாம் இல்லையென வைத்துக் கொண்டாலும், ஒரு விவசாயிக் குடும்பத்தின் வருஷ வருமானம் ரூ. 18-லிருந்து ரூ. 48 வரையில்தான் உளது. இதில் குடும்பம் பூராவும் ஜீவனம் செய்ய வேண்டுமாயின் பட்டினி கிடப்பதைத் தவிர வேறு என்ன வழி இருக்கிறது?

## ஜெர்மன்

### நாஜி சர்க்காரின் வரவு செலவுத் திட்டம் (லக்ஷம் ரூபிள்கள்)

| வருஷம். | சிலவு. | வருமானம் வரிகள். | கடன். |
|---|---|---|---|
| 1933—34 | 97 | 68 | 21 |
| 1934—35 | 122 | 82 | 31½ |
| 1935—36 | 167 | 97 | 55¾ |
| 1936—37 | 201 | 115 | 67 |
| 1937—38 | 250 | 140 | 93 |

(The Banks fe. 1938)

### பாஸிஸ்ட் ஜெர்மனியின் யுத்த முஸ்தீப்புகள்

நாஜி ஜெர்மனியின் சிலவு வருஷா வருஷம் அதிகரித்துக் கொண்டே போகிறது. இது வரிச் சுமையையும், கடன் சுமையையும் அதிகரித்து, இந்தச் சிலவை ஈடுகட்டுகிறான் ஹிட்லர்: 1937-38ஆம் வருஷத்தில் அதற்கு முந்திய வருஷத்தைக் காட்டிலும் கடன் பாதிக்குமேல் அதிகரித்திருக்கிறது. மக்கள் மீது சுமத்தப்படும் இந்தக் கடன் சுமையும், வரிச்சுமையும் ஸ்பெயின் தேசத்து மக்களை நாசம் செய்வதற்காக, கலக்கார பாஸிஸ்டு பிராங்கோவிற்கு யுத்த தளவாடங்களாகப் போகின்றன.

## கடிதம்

ஆசிரியர்,
‘ஜன சக்தி

ஐயா,

எங்கள் கிராமம் தனிப்பட்ட ஓர் ஜமீன்தாரிடமிருந்து சென்ற வருஷந்தான் இராமநாதபுரம் எஸ்டேட் கோர்ட் ஆவ்வார்டஸ் ஆதிக்கத்துக்குள்பட்டது. எனக்கு வயது 25 க்கு மேலாகிறது எங்கள் கிராமக் கண்மாய் கால், மராமத்து நடந்ததையறியேன். வருஷந்தோறும் ஆகாயத்தைப் பாத்துக் கஷ்டப்பட்டுக்கிடைக்கும் சிறிய ஊதியத்தையும் மேல் வாரதாருக்குக் கொட்டி அழுது விட்டு வெறுங் கையோடிருக்கிறோம்.

இவ்வருஷத்தில் முன் வருஷங்களைப் போல் மராமத்துக்கு மனுக்களெழுதிக் கையொடிந்ததே பலன். பஞ்சம் மேலிடும் இத்தருணத்தில் வரியில் ஏதாவது வஜாச் செய்யும்படி மனு எழுதினதில் யாதொருபைசுவு மிலலாமல் வசூலை நிறுத்தியிருக்கின்றன. கடன் நிவாரணச் சட்டத்திலுள்ள பழம் பாக்கி தள்ளுபடிக்குள் கெடுவுகாலம் முடிந்த பின் எல்லாவற்றையும் சேர்த்து வசூலிக்கலா மெனக் கருதியே கம்மென்றிருக்கிறார்கள்.

கோட் ஆவ்வார்ட்ஸ் ஆட்சியில் கூட பழைய சமஸ்தான அட்டூழியங்கள் மலிந்து கிடக்கின்றன. எங்களை வாட்டும் ஜமீன் முறை, என்று ஒழியுமோ அன்றுதான் எங்களுக்குச் சுயராஜ்ஜியம் மராமத்து, வரிவஜா இல்லாததால் வடக்கே நடக்கும் “புயலின் சாயல்” இங்கு மாரம்பமாகிறது.

ஒரு ஜமீன் விவசாயி.

---

## அறிக்கை

விவசாயிகள், தொழிலாளர்கள், படித்து வேலையில்லாது திண்டாடுவோர்கள், பெண்கள் முதலியவர்கள் தங்கள் தங்கள் குறைகளை எழுதியனுப்பினால் பிரசுரம் செய்யப்படும். எழுதுவோர்கள் சுத்தமாகவும், தெளிவாகவும் எழுதியனுப்ப வேண்டும்.

ஆசிரியர்

# "ஜன சக்தி"

சந்தா விவரம் :

| | |
|---|---|
| வருடச் சந்தா (உள்நாடு) | ரூ. 3—0—0 |
| 6 மாதம் | 1--12—0 |
| தனிப் பிரதி | 0—1—0 |
| வருடச் சந்தா' (வெளிநாடு) | 6—0—0 |
| 6 மாதம் | 3—8—0 |
| தனிப் பிரதி | 0—2—0 |

விளம்பர விகிதம்

| | |
|---|---|
| முழுப் பக்கம் | ரூ. 25—0—0 |
| ½ பக்கம் | 15—0—0 |
| பக்கம் | 8—0—0 |
| அரைக்கால் பக்கம் | 5—0—0 |
| அங்குலம் | 0—8—0 |

மற்றவை நேரில் எழுதித் தெரிந்துகொள்ளவும்.

மானேஜர், 'ஜனசக்தி',

[illegible] திருவல்லிக்கேணி ஹைரோடு, சென்னை.

**JANA SHAKTI** REG. No.

# ஜன சக்தி

(சோஷியலிஸ்ட் வாரப் பத்திரிகை)



## அ றி க் கை !

"ஜன சக்தி" காரியாலயத்திற்கு அனுப்பும், மணியார்டர்களும், செக்குகளும் மானேஜர் விலாசத்திற்கு அனுப்பவும்.

**'ஜன சக்தி' சந்தாதாரர்கள் கவனிக்க !**

ஆறு அணா விலையுள்ள 'பாலகுமார்' எழுதிய

**டி வே ல ர ா**

'ஜன சக்தி' சந்தாதார்களுக்கு

நாலணாவில் கிடைக்கும்

கிடைக்குமிடம்:

...க்தி' ஆபீஸ்,

...கணி ஹைரோட்; சென்னை.

Printed by P... ...vanandan,